# சுவடிப் பதிப்பு முன்னோடிகள்

ஆறுமுகநாவலர்



சி.வை. தாமோதரனார்



உ.வே. சாமிநாதய்யர்



எஸ். வையாபுரியார்



ம.சா. அறிவுடை நம்பி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# சுவடிப்பதிப்பு முன்னோடிகள்

முதுமுனைவர் ம.சா. அறிவுடைநம்பி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை – 600 113

உ.வே.சாமிநாதையய்யர் அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியவர் : பலர்)

வரிசை எண் : 16 நாள்: 4.2.2013

# நூல் விவரக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | சுவடிப் பதிப்பு முன்னோடிகள் |
| ஆசிரியர் | : | முதுமுனைவர் ம.சா. அறிவுடைநம்பி<br>தமிழ்ப் பேராசிரியர்<br>சுப்பிரமணிய பாரதியார் தமிழியற்புலம்<br>புதுவைப் பல்கலைக்கழகம்<br>புதுச்சேரி - 605 014 |
| பொதுப்பதிப்பாசிரியர் | : | முனைவர் தி. மகாலட்சுமி<br>ஆய்வுஅலுவலர்<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>தரமணி, சென்னை-600 113 |
| வெளியீட்டாளரும் பதிப்பு உரிமையும் | : | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>தரமணி, சென்னை-600 113<br>தொலைபேசி எண். 044 - 22542992 |
| வெளியீட்டு எண் | : | 741 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற் பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 2012 |
| பயன்படுத்திய தாள் | : | 18.6 கிகி டிஎன்பிஎல் வெள்ளை மேப்லித்தோ |
| நூலின் அளவு | : | 1/8 டம்மி |
| எழுத்தின் அளவு | : | 10 அளவு |
| பக்க எண்ணிக்கை | : | viii + 128 |
| அச்சுப்படிகளின் எண்ணிக்கை | : | 1200 |
| விலை | : | ரூ.60/- (ரூபாய் அறுபது மட்டும்) |
| அச்சகம் | : | லட்சுமி ஏஜென்ஸீஸ்<br>23/11, பெருமாள் முதலி தெரு, ராயப்பேட்டை<br>சென்னை-600 014 |
| பாடம் | : | பதிப்பு முன்னோடிகள் |

**முனைவர் கோ. விசயராகவன்,** எம்.ஏ., எம்.ஃபில், பி.எட்., பிஎச்.டி.
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600 113

## அணிந்துரை

ஒரு காலத்தில் தமிழ்நாட்டில் கோயில்களிலும், மடங்களிலும், கவிராயர் இல்லங்களிலும், ஜமீன்தார் அரண்மனைகளிலும் முடங்கிக் கிடந்த பழந்தமிழ்ச் சுவடிகளை இவ்வுலகுக்கு வெளிக்கொணடு வந்த பெருமை ஆறுமுகநாவலர், சி.வை. தாமோதரம் பிள்ளை, தமிழ்த் தாத்தா உ.வே. சாமிநாதையர், பேராசிரியர் ச.வையாபுரிப் பிள்ளை ஆகியோரைச் சாரும். சுவடிப் பதிப்பு வரலாற்றில் இந்நால்வரும் முன்னோடிகளாகக் கருதப் பெற்று வருகின்றனர்.

செவ்வியல் இலக்கியங்கள் குறித்ததொரு விழிப்புணர்வும் சுவடிகளைப் பதிப்பித்தல் தொடர்பான விரிந்த நோக்கும் தமிழகத்தில் பரவலாக நிலவி வருகிறது. சுவடிகள் தொடர்பான ஆய்வை ஊக்குவிக்கும் வகையில் சென்ற ஆண்டிலிருந்து அதாவது 2012ஆம் ஆண்டிலிருந்து சுவடியியல் ஆய்வில் சிறந்து விளங்கி வருகின்றவர்களுக்குத் தமிழக அரசு **டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்கள் பெயரில் விருது** வழங்கி வருகிறது. இவ்விருதைத் தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவி **மாண்புமிகு ஜெ. ஜெயலலிதா** அவர்கள் முதன் முதல் தொடங்கி வைத்துள்ளார்கள் என்பது பெருமைக்குரிய செய்தியாகும்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் சுவடியியல் ஆய்வில் பல்லாண்டுகளாக ஈடுபட்டு வருகிறது. அதாவது சுவடிகளைப் பதிப்பித்தல், படியெடுத்தல், சேகரித்தல், பாதுகாத்தல், வளர்ந்து வரும் மாணவர்களுக்குப் பயிற்சி அளித்தல், பட்டயச் சான்றிதழ்கள் வழங்குதல், புத்தொளிப் பயிற்சி அளித்தல் முதலான பல்வேறு பணிகளைச் செய்து வருகிறது.

அத்துடன் நில்லாமல் டாக்டர் உ.வே. சாமிநாதையர் பெயரில் அமைந்துள்ள அறக்கட்டளைப் பொழிவுகளையும் ஆண்டுதோறும் நிகழ்த்தி வருகிறது.

அந்த வரிசையில் தமிழ்ப் பல்கலைக்கழக அரிய கையெழுத்துச் சுவடித்துறையில் பணியாற்றித் தற்பொழுது புதுவைப் பல்கலைக்கழகத் தமிழியற்புலத்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி வரும்

முதுமுனைவர் ம.சா. அறிவுடைநம்பி அவர்கள் சுவடிப் பதிப்பு முன்னோடிகள் என்ற பொருளில் அரியதொரு சொற்பொழிவை நிகழ்த்த உள்ளார்கள். இச்சொற்பொழிவை எழுத்துருவில் எங்கள் அழைப்பை ஏற்றுக் குறித்த காலத்தில் வடிவமைப்புச் செய்து அளித்துள்ளமைக்கு என் இதயங்கலந்த பாராட்டுகள். அரிதின் முயன்று இந்நூல் தொடர்பான பணிகளைச் சிறப்புடன் மேற்கொண்ட இவ்வறக்கட்டளையின் பொறுப்பாளர் முனைவர் `தி. மகாலட்சுமி அவர்களுக்கு என் பாராட்டுக்கள்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் மாண்புமிகு பள்ளிக்கல்வி, தொல்லியல், விளையாட்டு(ம)இளைஞர் நலம், தமிழ் ஆட்சிமொழி, சட்ட அமைச்சர் என்.ஆர். சிவபதி அவர்களுக்கு எமது இதயங்கனிந்த நன்றி.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழக அரசின் தமிழ் வளர்ச்சி, அறநிலையங்கள் மற்றும் செய்தித் துறைச் செயலாளர் முனைவர் மூ.இராசாராம் இ.ஆ.ப. அவர்களுக்கும் எமது மனமுவந்த நன்றி.

இவ்வறக்கட்டளை எழுத்துருவின் மெய்ப்புத் திருத்தத்திற்கு உதவிய முனைவர் ஆ. தசரதன், நூல் வெளியீடு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள், இளநிலை உதவியாளர் மற்றும் தட்டச்சர் திருமதி பா. கௌசல்யா ஆகியோருக்கும், இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த இலட்சுமி ஏஜென்ஸீஸ் அச்சகத்தாருக்கு எம் பாராட்டுகள்.

**இயக்குநர்**

# முன்னுரை

செவ்வியல் இலக்கியங்களாகப் போற்றிப் பாதுகாக்கப் பெற்று வருகின்ற தொல்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள், சிலப்பதிகாரம், மணிமேகலை, இறையனாரகப்பொருள், முத்தொள்ளாயிரம் ஆகிய 41 இலக்கியங்கள் மற்றும் சிற்றிலக்கிய நூல்கள், சித்த மருத்துவ நூல்கள், சோதிட நூல்கள் முதலான பனுவல்கள் அனைத்தும் ஓலைச்சுவடிகளில் எழுதப்பட்டுள்ளன. அதாவது காகிதம் கண்டுபிடிக்கப்படுவதற்கு முன்பு வரை பெரும்பாலான இலக்கண, இலக்கிய நூல்கள் ஓலைச்சுவடிகளில் எழுதப்பட்டுக் கிடைத்திருக்கின்றன.

ஏட்டிலிருந்து அச்சு வடிவில் வந்த முதல் தமிழ் நூல் திருக்குறள் என்பது குறிக்கத்தக்கது. திருக்குறள் மூலபாடம், நாலடியார் மூலபாடம் என்ற பெயர்களில் 1812இல் முதன் முதலாக அச்சு நூல் வெளிவந்தது. நூல்களை அச்சிடுவதற்குரிய அச்சுத் தடைச் சட்டம் ஆங்கிலேயரால் கொண்டுவரப்பட்டு 1835ஆம் ஆண்டு வரை இருந்தது. அதன் பின்னர்தான் ஏட்டுச் சுவடியாக இருந்த ஒவ்வொரு நூலும் அச்சு வடிவில் வெளிவரத் தொடங்கின.

ஓலைச் சுவடிகளில் எழுத்தாணி கொண்டு எழுதுவதும், அவ்வாறு எழுதியவற்றைப் படிப்பதும், படியெடுப்பதும், பதிப்பிப் பதும் என்பவை எளிய செயலல்ல; அது ஒரு தனிப்பெரும் கலை. அக்கலையில் ஆழங்காற்பட்ட புலமை பெற்றவர்கள் ஒருசிலரே யாவர். சுவடிகளை அச்சு வடிவில் பதிப்பித்த பதிப்பாசிரியர்கள் தமிழகத்தில் மட்டுமல்லாமல், யாழ்ப்பாணத்திலும் முனைப்புடன் செயல்பட்டு வருகின்றனர்; வந்துகொண்டும் இருக்கின்றனர்.

யாழ்ப்பாணத்து ஆறுமுக நாவலர், சி.வை. தாமோதரம் பிள்ளை, தமிழ்த் தாத்தா உ.வே. சாமிநாதையர், பேராசிரியர் ச. வையாபுரிப் பிள்ளை, வடலூர் இராமலிங்க அடிகளார், கப்பலோட்டிய தமிழன் வ.உ. சிதம்பரம் பிள்ளை, தமிழ்த் தென்றல் திரு.வி. கலியாணசுந்தரனார், இரா. இராகவையங்கார், மு. இராகவையங்கார், நாவலர் ச. சோமசுந்தர பாரதியார், நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார், உரைவேந்தர் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை, காஞ்சிபுரம் சி.எஸ். சபாபதி முதலியார், தி. செல்வக்கேசவ ராய முதலியார், வே.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர், கா. நமச்சிவாய முதலியார், பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர், மழவை மகாலிங்கையர், தி.அ. முத்துசாமிக் கோனார், திருத்தணிகை விசாகப் பெருமாளையர், மே.வீ. வேணுகோபாலப் பிள்ளை, சி. கணேசையர், நா. கதிரைவேற் பிள்ளை, சபாபதி நாவலர், ச. பவானந்தம் பிள்ளை முதலான பலரும் பல்வேறு சுவடிகளைப் பதிப்பித்த பெருமக்களாவர்.

பல்வேறு நிறுவனங்கள் ஓலைச்சுவடிப் பதிப்புப் பணியில் ஈடுபட்டிருப்பதையும் காணமுடிகின்றது. சென்னைப் பல்கலைக்

கழகம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், தமிழ்ப் பல்கலைக்கழகம், சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூல் நிலையம், தஞ்சாவூர் சரசுவதி மகால் நூலகம், உ.வே.சா. நூல்நிலையம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், ஆசியவியல் நிறுவனம், தொல்பொருள் ஆய்வுத்துறை, திருவாவடுதுறை ஆதீனம், தருமபுர ஆதீனம், திருப்பனந்தாள் காசித் திருமடம், சைவ சித்தாந்த மகா சமாஜம், மதுரைத் தமிழ்ச் சங்கம், கரந்தைத் தமிழ்ச் சங்கம், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், பவானந்தர் கழகம், யாழ்ப்பாணக் கூட்டுறவுத் தமிழ் நூற்பதிப்பு விற்பனைக் கழகம் முதலான நிறுவனங்கள் சுவடிப் பதிப்புப் பணியில் பல்வேறு நூல்களை அச்சில் கொண்டு வந்துள்ளன.

சுவடிகளாக இருந்த தமிழ் நூல்களை அச்சில் கொண்டு வந்தோருள்ளும் ஆறுமுக நாவலர், சி.வை. தாமோதரம் பிள்ளை, உ.வே. சாமிநாதையர், ச. வையாபுரிப் பிள்ளை ஆகிய நால்வரே சுவடிப் பதிப்பு முன்னோடிகளாவர். இவர்களுள் முதல் மூவரைப்பற்றித் திரு.வி.க. பின்வருமாறு கூறுகின்றார்.

> பழந்தமிழ் இலக்கிய வெளியீட்டுக்குக் கால் கொண்டவர் ஆறுமுக நாவலர்; சுவர் எழுப்பியவர் தாமோதரம் பிள்ளை; கூரை வேய்ந்து, நிலையம் கோலியவர் சாமிநாத ஐயர் [1]

என்று தம் வாழ்க்கைக் குறிப்புகளில் கூறுவது இவண் நினைக்கத் தகும்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ஆண்டுதோறும் சுவடியியல் தொடர்பான அறக்கட்டளைப் பொழிவுகளை நிகழ்த்தி வருகிறது. அத்துடன் அப்பொழிவுகள் நூல் வடிவில் சொற்பொழிவு நாளன்றே வெளியிடுவதையும் தன் நோக்கமாகக் கொண்டு செயல்படுத்தி வருகிறது. அந்த வரிசையில் "சுவடிப் பதிப்பு முன்னோடிகள்" எனும் பொருளில் நால்வர் குறித்து இப்பொழிவு அமைகிறது. நால்வர்தம் வாழ்வியற் செய்திகள், அவர்கள் தமிழுக்கும் சுவடியியல் ஆய்வுக்கும் ஆற்றிய அரும் பணிகள் குறித்து இப்பொழிவு அமைகிறது.

இவ் அறக்கட்டளைப் பொழிவுக்கு ஏற்பாடு செய்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்களுக்கும், பொறுப்பாளர் பேராசிரியர் முனைவர் தி.மகாலட்சுமி அவர்களுக்கும் என் உளங்கனிந்த நன்றிகள்.

நூலாக்கப் பணிகளில் பெருந்துணை புரிந்த அ. சிவமூர்த்தி (கணினியில் அச்சுப் படிவம் எடுத்தமை), முனைவர் பட்ட ஆய்வாளர்கள் பா. மனோன்மணி, லோ. ஆதிலட்சுமி, செ. சாந்தி குமாரி, இரா. மணிக்கண்ணன் ஆகியோருக்கு என் நன்றி.

வாழ்க தமிழ்!

**ம.சா. அறிவுடைநம்பி**

## ஆசிரியர் குறிப்பு



இந்த அறக்கட்டளைப் பொழிவை நிகழ்த்தவிருக்கின்ற பேராசிரியர் முதுமுனைவர் **ம.சா. அறிவுடைநம்பி** அவர்கள் முனைவர் ச. சாம்பசிவனார் (தமிழ் மாருதம் திங்களிதழின் ஆசிரியர்), சா. மனோன்மணி ஆகியோருக்கு மகனாக 06-03-1954இல் பிறந்தார். இளம் அறிவியல் (கணிதம்), முதுகலைப் பட்டம் (தமிழ்) பெற்றார். மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் "திருநாவுக்கரசர் தேவாரத்தில் காணப்படும் இலக்கியக் கொள்கைகள்" என்ற தலைப்பில் முனைவர் (பிஎச்.டி.) பட்டம் பெற்றார். தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் "தஞ்சை மராட்டிய மன்னர்கள் வளர்த்த நுண்கலைகள் (கி.பி. 1676-1855)" என்ற தலைப்பில் ஆய்வு ,செய்து முதுமுனைவர் (டி.லிட்.) பட்டம் பெற்றார். தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் ஆய்வு செய்து முதன் முதல் இப்பட்டத்தைப் பெற்ற சிறப்புக்குரியவர்.

தமிழ்ப் பல்கலைக்கழக அரிய கையெழுத்துச் சுவடித் துறையில் இளநிலை ஆய்வாளர், முதுநிலை ஆய்வாளர், முதுமுனைவர் பட்ட ஆய்வாளர், சிறப்பாய்வாளர், விரிவுரையாளர், இணைப்பேராசிரியர், துறைத்தலைவர் என்று பல்வேறு நிலைகளில் பணியாற்றியுள்ளார். தவிரத் தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புத்துறை இயக்குநர் பொறுப்பில் மூன்றாண்டுகள் இருந்துள்ளார். தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புத்துறையின் இயக்குநர் பொறுப்பில் இருந்த காலத்தில் ஆற்றிய பணிகளுக்காக நெய்வேலியில் 2002இல் நடைபெற்ற புத்தகக் கண்காட்சி விழாவில் சென்னை உயர்நீதிமன்றத் தலைமை நீதியரசர் மேதகு சுபாஷண்ரெட்டி அவர்கள் தலைமையில் மேதகு ஏ. குலசேகரன் அவர்கள் நினைவுப் பரிசு வழங்கிப் பாராட்டிய பெருமைக்குரியவர்.

# பொருளடக்கம்

# 1. ஆறுமுக நாவலர் (1822 - 1879)

ஆடும் தில்லை அம்பலவன் அடிகள் மறவா அன்புடையோன்
பீடு பெறவே செந்தமிழைப் பேணிவளர்த்த பெரும்புலவன்
நீடு சைவம் நிலவுலகில் நிலவச் செய்த குருநாதன்
நாடுபுகழும் ஆறுமுக நாவலன் பேர் மறவோமே

என்று கவிமணியால் போற்றிப் பாராட்டப் பெற்றவர்.

இவர் யாழ்ப்பாணத்து நல்லூரிலே கார்காத்த வேளாளர் குலத்தில் பாண்டி மழவர் குடியில், சிவஞான சித்தியாருக்கு நல்லுரை வழங்கிய ஞானப்பிரகாச சுவாமி மரபில் சாலிவாகன சகாப்தம் 1745க்குச் சமமான சித்திரபானு ஆண்டு மார்கழித் திங்கள் 5ஆம் நாள் (18-12-1822) புதன்கிழமை இரவு சிம்ம இலக்கினத்தில் பிறந்தார்.

தந்தையார் : ப. கந்தப்பிள்ளை; தாயார் : சிவகாமி அம்மை. இத்தம்பதியினருக்கு 5 ஆண் மக்களும் 3 பெண் மக்களும் பிறந்தனர். இவர்களில் இறுதியாகப் பிறந்தவரே ஆறுமுக நாவலர். இவர் தந்தையார் சிறந்த நாடக வித்தகர். பல நாடக நூல்கள் எழுதியுள்ளார். 'இரத்தினவல்லி விலாச நாடக' நூலை எழுதிக் கொண்டிருக்கும் போதே ஏடும் எழுத்தாணியுமாக இருந்த நிலையிலேயே இயற்கை எய்தினார். அப்பொழுது நாவலர்க்கு 9 வயது. தந்தையார் அரைகுறையாக விட்ட நாடகத்தை அவ்விளம் வயதில் நாவலர் எழுதி முடித்தார்.

இவருடைய தலை மிகப் பெருத்தும், மற்றைய உறுப்புகள் சூம்பி ஒல்லியாகவும் இருந்ததனால் இவரை மற்றவர்கள் 'பாணாத் தலையர்' என்றும் 'வால் போத்தையர்' என்றும் கூறி வந்தனர்.

### பண்பு நலன்கள்

பொதுவாக, தமக்குச் சரி என்று தோன்றினால், தமக்கு எதிரானவர்களைக் கண்டிக்கச் சிறிதும் தயங்க மாட்டார். மனிதாபிமானம், தேசாபிமானம், தன்மானம் மிக்கவர். நாவலர், தமது

வரும்படிக்காக அஞ்சி அஞ்சிச் செயற்பட்டாரல்லர். அஞ்ச வேண்டியதற்கு அஞ்சினார். தமிழும் சைவமும் கீழ்நிலை அடைந்துவிடக்கூடும் என்பதற்காக அஞ்சினார். நாவலரின் நல்லொழுக்கமும் அஞ்சாமையுமே நாவலரின் ஏக்கத்திற்கும் ஆக்கத்திற்கும் பேருதவி புரிந்தது.

**புனை பெயர்கள்**

இராமசாமி, சைவசமயாபிமானி, சைவப் பிரகாசர், நடுவன், கருணை, சைவன், இரக்கம், சைவப் பிரகாச சமாஜியர் ஆகிய புனை பெயர்களில் பல்வேறு கட்டுரைகளையும், நூல் களையும் எழுதியுள்ளார்.

பாதிரிமார்கள் 1854இல் செய்த சைவ சமய தூஷணத்துக்கு எதிராகச் 'சைவ தூஷண பரிகாரம்' என்ற நூலைச் 'சைவப் பிரகாச சமாஜியர்' என்ற புனைபெயரில் எழுதி வெளியிட்டார். இந்தப் புனைபெயருக்குச் சொந்தக்காரர் யார் என்று கிறித்தவர்களிடம் கேள்வி எழுந்தது. நாவலரிடம் இதுபற்றிக் கேட்டபோது அதனை எழுதியது தாமே என்று கூறியதோடு அடுத்தடுத்த பதிப்புகளைத் தம் பெயரிலேயே வெளியிட்டார்.

சைவ தூஷண பரிகாரம் - இ∴து யாழ்ப்பாணத்து நல்லூர்
ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் செய்தது

என்ற முகப்பைத் தாங்கி நூல் வெளிவந்தது.

**கல்விநிலை**

நல்லூரிலிருந்த சுப்பிரமணிய பிள்ளை என்பவரிடத்தில் தமிழ் நெடுங்கணக்குப் பயின்று பின் அவரிடத்தில் மூதுரை போன்ற நீதி நூல்களையும் சொற்களுக்குப் பொருள் கூறும் நிகண்டு எனப்படும் நூல்களையும் ஐயம் திரிபறக் கற்றார்.

பின்பு சேனாதிராய முதலியார், சரவண முத்துப் புலவர் ஆகியோரிடம் இலக்கிய இலக்கணங்களை முறையாகக் கற்றார். இவருடைய தமிழ்ப் புலமையைக் கண்டு மகிழ்ந்த தமையன்மார் இவரை ஆங்கிலம் கற்கும் பொருட்டு பீற்றர் பார்சிவல் என்னும் பாதிரியாரிடம் அனுப்பி வைத்தனர். இவர் ஆங்கிலம் கற்று அதிலும் சிறந்த புலமை அடைந்தார்.

அக்காலத்தில் தமிழை ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பதும், ஆங்கிலத்தைத் தமிழில் மொழிபெயர்ப்பதும், தூய்மையான செந்தமிழைப் பேசுவதிலும், எழுதுவதிலும் இவருக்கு இணையாக வேறு எவரும் இலர் என்னும் புகழ் யாழ்ப்பாணம் முழுவதும் பரவியது.

இவருடைய இருமொழிப் புலமையைக் கண்ட பீற்றர் பார்சிவல் பாதிரியார் இவரைத் தம்முடைய கல்விச் சாலையிலேயே இருமொழியையும் கற்பித்தற்குரிய ஓர் ஆசிரியராக்கினார். ஆசிரியராகிய இவரும் அங்கே பாதிரியார் விரும்பியவாறு கற்பித்து வந்தார். மேலும் திருவிவிலியத்தைத் தமிழில் மொழிபெயர்த்துத் தரும் பணியையும் பாதிரியார் இவரிடம் ஒப்படைத்தார்.

இவருடைய மனம் சைவ சமயத்தின்மேல் பெரும்பற்றுக் கொண்டிருந்தது. சைவ சித்தாந்த நூல்களாகிய சிவஞான போதம், சிவஞான சித்தியார், திருக்களிற்றுப்படியார், திருவருட்பயன், நெஞ்சுவிடு தூது, கொடிக்கவி, சிவப்பிரகாசம் முதலிய நூல்களைத் தாமே கற்றுணர்ந்தார்.

சிறப்பு நூலாகிய சிவாகமத்தைக் கற்பதற்கு வடமொழியறிவு (சமஸ்கிருதம்) மிகவும் தேவை என்பதை அறிந்த காரணத்தினால் சிறிது நாள்களில் வடமொழி நூல்களைத் தாமே வாசிக்கவும், அவற்றின் பொருளை உணரவும் யாருடைய உதவியுமின்றித் தாமே வடமொழியைக் கற்றுக்கொண்டார். வேத சிவாகமங்களையும் கற்றறிந்து பண்டிதரானார். இதனால் நாவலர் தம்முடைய 23 வயதிலேயே தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய மொழிகளில் புலமை மிக்கவராக விளங்கினார்.

## ஆசிரியர்

பாதிரியாரின் ஆங்கிலக் கல்விச்சாலையில் ஆசிரியராக இவர் இருந்துவரும் காலத்திலே தமிழ்மொழியையும் சைவசமயத்தையும் வளர்க்க விரும்பிச் சில பிள்ளைகளைச் சேர்த்து அவர்களுக்குக் கருவி நூல்களையும், சமய நூல்களையும், பாதிரியாரின் கல்விச் சாலையில் எவ்வித ஊதியமும் பெறாமல் பிற்பகலிலும் இரவிலும் முறையாகக் கற்பித்து வந்தார். இவர் பெர்சிவல் பாதிரியாருக்கும், வேறுசில பாதிரியார்களுக்கும் தமிழ் சொல்லிக் கொடுத்து வந்தார். அப்பொழுது சைவ மடத்திலிருந்து இதற்கு எதிர்ப்புத் தெரிவித்த செய்தியை அறியமுடிகின்றது. அச் செய்தி வருமாறு :

> இன்று முதல் புராணப் பிரசங்கஞ் செய்து வர வேண்டுமேயன்றிப் பாதிரியார்களுக்குப் பாடஞ் சொல்லுதலாகாதென்று மேற்படி துறவு சாமிகள் நாவலருக்கு உத்தரவு செய்ய, நாவலர் அவ்வாறே அன்று முதல் பாதிரியாருக்குப் பாடஞ் சொல்லுதலொழித்துப் புராணப் பிரசங்கஞ் செய்தலோடு சைவ நூல்களும் பயின்று வந்தனர்[2]

## மாணவர்கள்

ஆறுமுக நாவலரிடம் பயின்ற மாணவர்கள் வருமாறு : சதாசிவப் பிள்ளை, நடராசையா, விசுவநாதையர், சுவாமிநாதையர், ஆறுமுகப் பிள்ளை, கந்தசுவாமிப் பிள்ளை, ஆறுமுகச் செட்டியார், ச. பொன்னம்பலம் பிள்ளை, மா. வைத்தியலிங்க பிள்ளை, வை. திருஞானசம்பந்த பிள்ளை, த. கைலாச பிள்ளை போன்றோராவர்.

## சொற்பொழிவாளர்

**சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை**
**இகல்வெல்லல் யார்க்கும் அரிது**[3]

என்பதற்கேற்ப ஆறுமுக நாவலர் சிறந்த நாவன்மை படைத்தவர். இவர் இவ்வாறு திகழ்வதற்கு அக்காலச் சூழலை அறிவது தேவை.

ஈழ நாட்டின் யாழ்ப்பாணப் பகுதியில் 19ஆம் நூற்றாண்டின் தொடக்கக் காலத்திலேயே வெஸ்லியன் மிஷன், சர்ச் மிஷன், அமெரிக்கன் மிஷன் போன்ற செல்வ வளம் படைத்த சங்கங்களைச் சேர்ந்தவர்கள் கிறித்தவ சமயப் பரப்புரையைத் தொடங்கி நடத்தினர். அவர்கள் பள்ளிக்கூடங்களையும், கல்லூரிகளையும் நிறுவி ஆங்கிலக் கல்வியின் வழியாகத் தங்கள் சமயத்திற்குப் பலரை மாற்றுவதற்குரிய பணிகளைச் செய்து வரலாயினர். இதனால் யாழ்ப்பாணப் பகுதியைச் சேர்ந்த பல்லாயிரக்கணக்கான வேளாளர்கள் கிறித்தவர்களாக மாறி விட்டனர்.

ஆங்கிலக் கல்வியும் கிறித்தவ சமயமும் அவற்றைத் தழுவிய தமிழர்களுக்குச் செல்வ வளம் மிகுந்த வாழ்க்கையையும் அரசுப் பணி சார்ந்த அதிகாரத்தையும் அளித்தன.

நாவலருடன் பிறந்த சகோதரர்கள் மூவரும் ஆங்கிலக் கல்வியின் பயனாக அரசுப் பதவிகளைப் பெற்றனர். ஆயின் நாவலரின் மனம் அதில் ஈடுபாடு கொள்ளவில்லை. இது தொடர்பாக நாவலர் 1868இல் விடுத்த அறிக்கையில் பின்வருமாறு காணப்படுகிறது.

> **நான் இங்கிலீஷிலே அற்ப விற்பத்தி[4]யாயினும் பெற்றிருந்தும் என்னோடு இங்கிலீஷ் கற்றவர்க ளுள்ளும் எனக்குப் பின் இங்கிலீஷ் கற்றவர்களுள்ளும் அநேகர் தங்கள் தங்கள் சக்திக்கேற்ற உத்தியோகம் பெற்று வாழ்ந்திருக்கக் கண்டும் நானும் என் சக்திக்கேற்ற உத்தியோகத்தின் பொருட்டு முயற்சி செய்யின் அது தப்பாது சித்திக்கு[5]மென்றறிந்தும். அஃதில்லாமையால் விளையும் அவமதிப்பைப் பார்த்தும் உத்தியோகத்தை விரும்பவில்லை. தமிழ்க் கல்வித்துணை மாத்திரங்**

> கொண்டு செய்யப்படும் உத்தியோகம் வலிய வாய்த்த பொழுதும் அதையும் நான் விரும்பவில்லை. ஒரு பெண்ணைத் திருமணம் செய்யும்போது அந்த மணமகனுக்கு வீடு, விளை நிலம், தோட்டம், ஆபரணம் ஆகியவற்றைக் கொடுத்துத் திருமணம் முடிப்பது யாழ்ப்பாணத் தமிழர்களின் பழக்கமாக இருந்தது. இத்தகைய வசதி வாய்ப்புகள் நிறைந்த இல்வாழ்க்கையில் நான் நுழையவில்லை. இவைகள் எல்லாவற்றிற்கும் காரணம் சைவ சமயத்தையும் அதன் வளர்ச்சிக்குக் கருவியாகிய கல்வியையும் வளர்த்தல் வேண்டும் என்னும் பேராசையேயாம் [6]

திருமண உறவையும் விரும்பாமல் அரசுப் பணிகளையும் ஏற்காமல் அன்றைய யாழ்ப்பாணத் தமிழர்களின் கலாச்சாரத்தையும் பண்பாட்டையும் மீட்டெடுக்கும் பணியில் நாவலர் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டார்.

அன்றைய காலத்தில் யாழ்ப்பாணத்தில் மேலோங்கி நின்றதே சைவப் பண்பாடுதான். அதனைக் காத்து நின்ற வேதங்கள் என்பன சைவ சமயம் சார்ந்த நூல்கள்தாம். எனவே நாவலர் சைவ நூல்களை ஏட்டுச் சுவடியிலிருந்து அச்சுரு ஆக்குவதிலும் அவற்றினடிப்படையில் குழந்தைகளுக்கும் இளைஞர்களுக்குமான பாடத்திட்ட நூல்களை உருவாக்குவதிலும் மக்களிடம் சென்று பொழிவுகளை நிகழ்த்துவதிலும் பாடுபடத் தொடங்கினார். சைவ சமயத்தின் இலக்கணம் இது என்பதும், சைவ சமயத்தார் வழிபடும் கடவுளது இலக்கணம் இது என்றும், சைவ சமயத்தார் திருநீற்றைக் கவடிப்பாகத் தரிக்க வேண்டும் என்றும், இவ்வுடல் நிலையில்லாதது என்றும் சொற்பொழிவாற்றினார்.

வாழ்கின்ற காலத்திலே பிறருக்குத் தருமம் செய்ய வேண்டும் என்றும், பிறர் செய்த நன்றியை மறக்கலாகாது என்றும், அறிவு ஒழுக்கங்களில் சிறந்து விளங்கும் பெரியோர் சொற்படி நடக்க வேண்டும் என்றும், எவ்வுயிரையும் கொல்லக்கூடாது என்றும், பிற உயிர்களைக் கொன்று அவற்றின் உடகளைத் தின்பது பெரும்பாவம் என்றும் சொற்பொழிவாற்றினார்.

இவருடைய பொழிவைக் கேட்டவர்களில், உயிர்க் கொலை புரிவோர் அதனைக் கைவிட்டனர்; மது அருந்தும் தீய பழக்கம் உள்ளோர் அப்பழக்கத்தை விட்டனர்; ஆலயத்திற்குச் செல்லாத அனேகர் ஆலயங்களுக்குச் சென்று இறைவனை முறைப்படி வழிபடலாயினர். பொதுவாக, இவர் ஆற்றிய பொழிவு சமுதாயத்தில் மிக நல்ல மாற்றங்களை ஏற்படுத்திற்று.

தமது கல்வி ஆற்றலினாலும் சமயச் சொற்பொழிவினாலும் இலங்கையிலும் தென்னிந்தியாவிலும் உள்ள மக்களைத் தம்பால் ஈர்த்து, ஆங்காங்கே கல்விச் சாலைகளை ஏற்படுத்தும்படி செய்தார். இவரது கல்வித் திறனையும், ஆராய்ச்சித் திறனையும், சொற்பொழிவாற்றும் திறனையும் கண்டுதான் திருவாவடுதுறை ஆதீனம் இவருக்கு 'நாவலர்' என்ற பட்டத்தைக் கொடுத்துப் பெருமைப்படுத்திச் சிறப்பித்தது.

தென்னிந்தியாவில் உள்ள பல கோயில்களுக்கும் சென்று சமயச் சொற்பொழிவுகள் செய்து சைவ சமயத்தைப் பரப்பினார். இவர் முதலில் 1847இல் வண்ணார்பண்ணைச் சிவன் கோயில் வசந்த மண்டபத்தில் சொற்பொழிவு செய்யத் தொடங்கினார். அங்கே சொற்பொழிவு செய்வதற்கு நல்லூர் வேங்கடாசல ஐயர் மகன் கார்த்திகேச ஐயரையும் ஒருவராக நியமித்துத் தாம் ஒருமுறையும் அவர் ஒருமுறையுமாகப் பொழிவு ஆற்றி வந்தனர்.

இவர் பொழிவைவிரும்பிக் கேட்பதற்காக யாழ்ப் பாணத்திலுள்ள பற்பல ஊர்களிலிருந்தும் அறிஞர்கள் வருவர். அவர்களுள் சிலர் இவரை அழைத்துக் கொண்டு போய்த் தம் ஊர்களிலும் சைவ சமய ஒழுக்கத்தின் பொருட்டுப் பொழிவை நிகழ்த்தச் செய்தனர். நாவலர் ஆற்றிவந்த பொழிவுகளாலும் சைவ சமயம் மேலோங்கி வளர்வதாயிற்று. அதனால் இவர் புகழும் எங்கும் பரவலாயிற்று.

கிறித்தவ சமயத்திற்கு நுழைய விரும்பிய பலரும் இவர் பொழிவைக் கேட்டு அதனை ஒழித்தனர். யாழ்ப்பாணத்திலே பாதிரிமாரால் சைவத்துக்கு நேர்ந்த கேடுகள் பலவற்றையும் நீக்கிச் சைவத்தை யாழ்ப்பாணத்தில் நிலைபெறச் செய்வதற்கு நாவலர் பல அரிய முயற்சிகளைச் செய்தார். ரெ. இராபின்சன் என்பார்,

> ஆறுமுக நாவலர் கிறிஸ்தவர்களைப் போலவே சைவச் சொற்பொழிவுகள் செய்தும், அச்சுக்கூடம் அமைத்தும், நூல்கள் துண்டு வெளியீடுகள் அச்சிட்டும் வெளிப்படுத்தி நல்வழிப்படுத்துகிறார்[7]

என்று குறிப்பிட்டிருப்பது இவண் எண்ணத்தக்கது.

இராமநாதபுரம் பொன்னுச்சாமி தேவர், நாவலரை விரும்பி அழைத்துத் தமது சபையிலே சொற்பொழிவாற்றச் செய்வித்து, அதனைக் கேட்டு மகிழ்ந்து இவருக்குப் பல விருதுகள் அளித்தனர்.

நாவலர் ஆற்றிய சொற்பொழிவின் தலைப்புகள் பன்முகமாக அமைந்தவை. ஒருசில வருமாறு :

> சைவ சமயம், அதன் கொள்கைகள், சைவர் வழிபடும் கடவுளர் இலக்கணம், சைவர் அணிய வேண்டும்

சின்னங்கள், அவர் கடைப்பிடிக்க வேண்டிய நெறிமுறைகள், சிவபக்தி, வேதாக மங்கள் திருவிழா, யாக்கை நிலையாமை, சிவதீட்சை, இகப்பேறு, தருமம், செய்நன்றியறிதல், கல்வியின் பெருமை.

சைவ சமயத்தைப் பாதுகாக்கும் காவலராக விளங்கிய தோடன்றிச் சைவ சமயம் விட்டுப் பரசமயத்தில் (பிற சமயத்தில்) புக இருந்தவர்களையும் தடுத்தாண்ட பெருமை நாவலருக்குண்டு.

## வேத ஆகம நூல் மொழிபெயர்ப்பு

பெர்சிவல் பாதிரியாருக்குத் துணையாக 1841இலிருந்து 1851 வரையிலான காலத்தில் வேதாகம மொழிபெயர்ப்பில் ஈடுபட்டிருந்தார். மொழிபெயர்ப்புப் பணி 1848இல் முடிவு பெற்று, 1850ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது. இம் மொழிபெயர்ப்புப் பணியின் அனுபவமானது, தமிழ் உரைநடையைக் கையாளும் ஆற்றலை நாவலருக்கு அளித்தது. இந்நூலை அரங்கேற்றம் செய்வதற்காகப் பாதிரியாருடன் நாவலர் சென்னைக்குச் சென்றார்.

அக்காலத்தில் சென்னையிலும் பைபிளைத் தமிழில் சிலர் மொழிபெயர்த்து வரும் பணியை மேற்கொண்டிருந்தனர். நாவலரின் பைபிள் மொழிபெயர்ப்பு முழுவதையும் கண்ட தமிழ்ப் பேரறிஞர் மழவை மகாலிங்க ஐயர்,

> இதைவிடச் சிறப்பாக எவரும் மொழிபெயர்க்க முடியாது. மூலநூல் போன்றே மொழி நடையைப் பண்டிதர் அமைத்திருக்கும் பான்மை பாராட்டுக் குரியது

என்றார். யாழ்ப்பாணக் கிறித்தவ அறிஞர் ச. குலேந்திரன் தமது 'தமிழ் வேதாகம வரலாற்று' நூலில்,

> நாவலருடைய தமிழ்நடை யாழ்ப்பாணத்துக்கு மாத்திரமல்ல தமிழ்நாடு முழுவதற்கும் நூறு வருடங்களாய் நல்ல தமிழ் நடைக்கு மாதிரியாக இருந்தது [8]

என்கிறார்.

## வித்தியாநுபாலன யந்திரசாலை

கிறித்தவர்கள் தங்கள் சமயத்தைப் பரப்புவதற்குக் கையாண்ட உத்திகளைத் தாமும் கையாள்வது என்று முடிவு செய்த நாவலர், சைவ சமயக் கருத்துகளை மக்களிடம் எளிதில் எடுத்துச் சொல்வதற்காகக் கருவி நூல்களை அச்சிட ஓர் அச்சுயந்திரசாலை தேவை என்பதை உணர்ந்தார்.

சென்னைக்குச் சென்று அச்சுயந்திரம் வாங்கிக் கொண்டு யாழ்ப்பாணம் திரும்பினார். தம் இல்லத்தில் 1850இல் அச்சுயந்

திரத்தை நிறுவி, 'வித்தியாநுபாலன யந்திரசாலை' என்று பெயர் சூட்டினார். அதன்பின்னர் வண்ணார் பண்ணை சைவப் பிரகாச வித்தியா சபைக்கருகில் அச்சகத்தையும், உறைவிடத்தையும் மாற்றினார். சென்னைக்கு 1858இல் செல்ல முடிவு செய்த நாவலர், அச்சகத்தை விற்றுவிட்டுச் சென்னை சென்றார்.

சென்னை, தங்கசாலையில் 'வித்தியாநுபாலன அச்சகத்' தை நிறுவினார். யாழ்ப்பாணத்திலும், சென்னையிலும் நிறுவிய அச்சகத்தின்மூலம் தாம் எழுதிய, பதிப்பித்த நூல்கள் பலவற்றை வெளிக்கொணர்ந்தார். சைவத்திற்கும், தமிழுக்கும் இந்த அச்சகம் செய்த தொண்டு சிறந்தது. தமிழ் நூல் பதிப்பு வரலாற்றில் முன்னோடியாக இந்த அச்சகம் திகழ்ந்து வந்தது. 'அச்சகம்' என்ற பெயரில் இருந்தபோதும் இது ஒரு பதிப்பகமே ஆகும்.

**கல்வித் தொண்டு**

'கேடில் விழுச்செல்வம் கல்வி' என்பதை நன்குணர்ந்த நாவலர், கல்வித் தொண்டில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டார்.

நாவலர் வாழ்ந்த காலத்தில் வீட்டுத் திண்ணைகளில் அல்லது கொட்டில்[9]களில் பள்ளிகள் இருந்தன. ஒரே ஆசிரியரால் ஆத்திசூடி, கொன்றை வேந்தன், நல்வழி, வாக்குண்டாம், சேந்தன் திவாகரம், எண்சுவடி போன்றவை கற்பிக்கப்பட்டு வந்தன.

தமிழ்ச் சிறுவர்களுக்குக் கல்வியறிவோடு சமய நூலறிவும் கற்பிக்கப்பட வேண்டும் என்பதை உணர்ந்த நாவலர், முதன் முதலாக யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணையில் இலவசப் பள்ளி ஒன்றைத் தொடங்கினார். அதற்குச் 'சைவப் பிரகாச வித்தியா சாலை'[10] என்று பெயரிட்டார். அச்சமயத்தில் வர்த்தக சாலை ஒன்றை விலைக்கு வாங்கிச் 'சைவப் பிரகாச வித்தியாசாலை'யை மேலும் விரிவுபடுத்தினார்.

இவரது அயரா உழைப்பாலும் இடைவிடா முயற்சியாலும் யாழ்ப்பாணத்திலுள்ள கொழும்புத் துறை, கந்தர் மடம், பருத்தித் துறை, இணுவில் முதலான இடங்களிலும் வித்தியாசாலைகள் உருவாக்கப்பட்டன. தம்மிடம் கல்வி பயிலும் ஏழை மாணவர்களுக்கு இரவு பகல் பாராது பாடம் நடத்துவார். தம் மாணவர்கள், இவ்வுலகிற்குப் பெரும் பயன் நல்கத்தக்கவர்களாக விளங்க வேண்டும் என்று எண்ணிய நாவலர், சமய நூல்களோடு கருவி நூல்களையும் கற்றுத் தரலானார். செய்யுள் எதுவாயினும் மாணவர் மனங்கொள்ளத் தக்கவாறு எளிய முறையில் எடுத்து விளக்குவது இவரது இயல்பு.

தமிழ் இலக்கண - இலக்கிய நூல்களுடன் சைவ சமய நூல்களையும் சொற்பொருள் நயங்களுடன் எடுத்துரைப்பார்.

> நான் எனக்கு ஒழிவுள்ள காலத்தைக் கைம்மாறு வேண்டாது உலகத்தாருக்குப் பயன்படக் கழித்தல் வேண்டும் என்று நினைந்து, விசுவாவசு வருடம் தை மாதம் முதலாகச் சில பிள்ளைகளுக்கு இராத்திரி யிலும் காலையிலும் தமிழ்க் கல்வி கற்பித்துக் கொண்டு வந்தேன்

என்னும் இவர் கூற்றால் இவர் செய்த கல்வித் தொண்டு புலனாகும்.

தமிழ் நாட்டில் சிதம்பரத்தில் சைவப் பிரகாச வித்தியா சாலையை 11-11-1864இல் தோற்றுவித்தார். இங்கு ஏறத்தாழ ஆறு ஆண்டுகள் தங்கியிருந்து தமிழையும் சைவத்தையும் பரப்பினார்.

**உரையாசிரியர்**

உரை எழுதும் பணி மிகவும் எளிதானதன்று. ஒரு நூலுக்கு உரை எழுதும் பொழுது அந்நூலைப் பன்முறை கற்றிருக்க வேண்டும். நிகண்டுகளையும் பிழையறப் பயின்றிருக்க வேண்டும். மூல நூலில் எக்கருத்துச் சொல்லப்பட்டிருக்கிறதோ அதற்கு மட்டுமே உரை எழுதவேண்டும். மூல நூலாசிரியரின் கருத்துக்கு மாறுபட்ட கருத்துகளைத் தாமே வலியப் புகுத்தி உரை எழுதக் கூடாது. அனைத்திற்கும் மேலாக, எழுதப்படும் உரையானது அனைவருக்கும் மிக எளிதில் விளங்கும் முறையில் அமைய வேண்டும். இத்தனை முறைகளையும் கையாண்டு எழுதும் உரையே மக்களால் ஏற்றுக் கொள்ளப்படும்.

முதலில் பாடல், அதன் அடியில் பதவுரை (இதன் பொருள்), அதற்குக் கீழ் 'இதனது தாற்பரியம்'[11] என்ற தலைப்பில் விளக்கம் என்ற முறையில் உரைகள் அமைந்திருக்கும். திருக்குறளின் பரிமேலழகர் உரைப் பதிப்பில் உடுக்குறியிட்டு அந்தப் பக்கத்தின் அடிக்குறிப்பில் உரையாசிரியர் தரும் விளக்கம் அமைந்திருக்கும்.

**உரைநடை வித்தகர்**

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தலைசிறந்த 'உரைநடை வித்தகரா'கப் பெருமை பெற்று விளங்கியவர் நாவலர். "பா இயற்றும் வன்மை இன்மையால் உரைநடை எழுதினாரோ?" என்று சிலர் எண்ணலாம். அங்ஙனமன்று! 'ஆசுகவி'[12]யாகவும் பாட வல்லவர் என்பதற்கு ஒரு சான்று : அறிஞர்கள் கூடிய பேரவை ஒன்றில், தம் மாணவரை நோக்கிப் 'பிள்ளையார் வணக்கப் பாடல் ஒன்று பாடுக!'

என்று நாவலர் பணித்தார். ஆனால், அம்மாணவரோ, 'தாங்கள் பாடுவது சிறப்பன்றோ?' என்றார். நாவலரோ, ஒருசிறிதும் தயக்கமின்றிப் பாடல் ஒன்றைப் பாடி முடித்தார். அப்பாடல் வருமாறு:

சீர்பூத்த கருவிநூ லுணர்ச்சி தேங்கச்
சிவம்பூத்த நிகமாக மங்க ளோங்கப்
பார்பூத்த புறச்சமய விருள்க ணீங்கப்
பரம்பூத்த சைவநிலை பாரோர் தாங்கப்
பேர்பூத்த சிவானந்தத் தினிது தூங்கப்
பிறைபூத்த சடைமௌலிப் பிரானார் தந்த
வார்பூத்த வறிவிச்சை தொழிலென் றோதும்
மதம்பூத்த விநாயகன்தாள் வணங்கி மகிழ்வார்!

இப்பாடலைக் கேட்ட அறிஞர் அனைவரும், நாவலரின் பாவன்மை கண்டு பரவசமுற்றனர். தவிர, கதிர்காமத்து ஆறுமுகப் பெருமான்மீது கீர்த்தனங்களும் பாடியுள்ளார். என்றாலும், ஆங்கிலம், வடமொழி முதலானவற்றில் உரைநடை நூல்கள் பல்கியுள்ளன போல், தமிழிலும் இருத்தல் வேண்டும் என்று நாவலர் எண்ணினார். மேலும், இக்காலத்து மக்கள், செய்யுட்களைப் படிப்பதில் ஆர்வம் காட்டுவதில்லை. ஒருவேளை படித்தாலும் பொருள் அறியாமல் இடர்ப்படுகின்றனர் என்பதை உணர்ந்த நாவலர், காலத்துக்கேற்ற உரைநடை நூல்கள் பலவற்றைத் தமிழன்னைக்குச் சூட்டி மகிழ்ந்துள்ளார்.

நாவலர் உரைநடை, ஆற்றொழுக்காகச் செல்லும் பான்மையது. எளியவரும் படித்துப் பொருள் உணர்ந்து கொள்ளற் குரியது. இவர் வெளியிட்ட 'பெரியபுராண சூசனம்' என்ற நூல் ஒன்றே இதற்குச் சான்று பகரும்.

நாவலர் தமது வாழ்க்கையின் தொடக்கத்தில் எழுதிய நூல்களுள் கற்றவர் களிகூர மிகுதியான வடசொற்களைப் பயன் படுத்தியுள்ளார். பின்னரே எளியவரும் எளிதில் அறிந்து கொள்ளும் வகையில் தமது தமிழ் நடையைப் பேச்சிலும் எழுத்திலும் மாற்றி அமைத்துக் கொண்டார்.

**பதிப்பும் பதிப்பாசிரியரும்**

தமிழ் நூல்கள் ஏட்டுச்சுவடி அளவில் இருந்து, பாது காப்பற்றுக் கறையானுக்கும் செல்லுக்கும் மண்ணுக்கும் இரையாகிப் போவதைத் தடுத்து நிறுத்த முற்பட்டார்.

ஓலைச்சுவடியிலிருந்து பெயர்த்தெடுத்து, பல பிரதிகளோடும் ஏட்டுச்சுவடிகளோடும் ஒப்பிட்டுப் பரிசோதித்து, அவற்றுள் எது இலக்கணம், பொருள் ஆகியவற்றுக்கு ஒத்து வருகிறதோ அப்பாடத்தைப் பதிப்பித்தார். இவர் பாடவேறுபாடுகளை அச்சிடுவதில்லை. அதேபோன்று பிரதிகளின் மூலமின்றி எந்த ஒன்றையும் தாமாகத் திருத்தியதில்லை. இலக்கணம், சித்தாந்தம் தொடர்புடைய நூல்களில் தமக்கு முன்பிருந்த ஆசிரியர் களின் துணையின்றித் தாமாக எதையும் சொல்லியதே இல்லை.

> தேவாரத்திற் போலவே பதினோராந் திருமுறை பிரபந்தங்களிற் சிலவற்றிலும் சில செய்யுள்களும் அடிகளும் சீர்களும் இறந்து போயின. இறவாதுள்ளவைகளிலும் பல மிகப் பிறழ்ந்திருக்கின்றன. பலவிடங்களினின்றும் வருவிக்கப்பட்ட பிரதி ரூபங்களெல்லாவற்றினும் இக் குறைவுபாடு ஒத்திருக்கின்றது. ஆதலாற் சிற்றறிவினையுடைய பசுவர்க்கத்துக்குட்பட்ட சிறியேன் சிவாநுபூதிப் பெருவாழ்வுடையோர் திருவாக்கிலே சிறந்தவற்றைப் பூர்த்தி செய்தற்கும் பிறழ்ந்தவற்றை வேறு பிரதி ரூபங் காணாது திருத்தி விடுதற்கும் அதிகாரி யல்லேன்[13]

என்று பதினோராந் திருமுறைப் பதிப்புரையில் நாவலர் கூறுவதைக் கொண்டு எந்தவொரு சான்றுமின்றி மூலப்பாடல்களைத் திருத்தியதில்லை என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

குறிப்பிட்டுச் சொல்லத்தக்க பதிப்பாக எந்தப் பழந்தமிழ் நூலும் வெளிவராத காலத்தில் நாவலர் பதிப்புகள் வெளிவந்தன. இவருடைய பதிப்புகள் அருமை வாய்ந்தவை. பெரும்பாலும் பிழையின்றிப் புத்தகங்களை அச்சிடுவதில் இவருக்கு நிகராவார் பிறரிலர். இவரது பதிப்புகளில் பெரும்பாலும் அச்சுப்பிழை இருந்ததே இல்லை என்று சொல்லுமளவுக்கு அமைந்திருப்பது சிறப்பு. இதற்குக் காரணம் பிழைதிருத்தம் செய்ய அரிச்சுவடி[14] பயிலும் மாணவர்களையே பயன்படுத்தினார். அவர்கள் ஒரு பிழை கண்டு பிடித்தால் அக்காலத்தில் கண்டுபிடித்தவர்களுக்குக் காலணா கொடுத்தார். இதனால் சிறுவர்கள் எழுத்தெண்ணிப் படித்துப் பிழைகளைக் கண்டறிந்தனர். அவை களையப்பட்டன.

பக்க எண், பாடல் எண், தலைப்பு எண் ஆகிய அனைத்தும் தமிழ் எண்ணாகவே இருக்கும். பதிப்பித்த ஆண்டுகூடத் தமிழ் ஆண்டு, தமிழ் மாதம் ஆகியவை இருக்குமே தவிர ஆங்கில ஆண்டு இருக்காது.

ஒருசமயம் 'போசன விதி' என்னும் நூல் அச்சேறவிருந்தது. நாவலர் சொல்லச் சொல்ல, மாணவர் ஒருவர் எழுதுவது வழக்கம். அப்போது நாவலர், 'பரிகாமுத்திரையைச் செய்து' என்று கூற, மாணவரோ, 'பரிகாரமுத்திரை என்று படித்ததாக நினைவு' என்றார். இதனைக் கேட்டதும் நாவலரின் உடம்பே வியர்த்தது. உடனே, 'சைவ சமய நெறியுரை' என்ற நூலைக் கொண்டுவரச் செய்தார். அதனைக் கொண்டு சரி பார்த்ததில், 'பரிகாமுத்திரை' என்றுதான் காணப்பட்டது! எக்காரணங்கொண்டும் தாம் அச்சிடும் நூலில் 'பிழை வரலாகாது' என்பதில் இவர் கொண்ட ஆர்வம் இதன் மூலம் புலனாகின்றது.

## இலக்கியப் பணிகள்

பழந்தமிழ் இலக்கியங்களில் உள்ளத்தைப் பறிகொடுத்தவராக நாவலர் திகழ்ந்து வருவதை அவர் எழுதிய, பதிப்பித்த நூல்கள் சான்றுகளாகத் திகழ்கின்றன. ஆத்திசூடி, கொன்றை வேந்தன் ஆகிய இரு நூல்களையும் 1853இல் நாவலர் பதிப்பித்த நூலின் முகப்புப் பக்கத்தில்,

> ஆத்திசூடியும், கொன்றை வேந்தனும் - யாழ்ப் பாணத்து
> நல்லூர் ஆறுமுக நாவலர் திருத்தப்பட்ட உரையுடன் -
> சென்னப்பட்டணம் வித்தியாநுபாலன யந்திரசாலை - 9-
> ம் பதிப்பு சர்வசித்து வருஷம் சித்திரை மாதம்

என்றுள்ளது. 108 சூத்திரமாக அமைந்துள்ள ஆத்திசூடி மூலமும் உரையும் என்ற நூலில் முதலில் பாடல், அடுத்துப் பதவுரை, சில விளக்கங்கள் அமைந்துள்ளன. அவை வருமாறு :

**சுருக்கமான உரை**

தையல் சொற் கேளேல் (62)

> தையல் = (உன்) மனைவியுடைய, சொல் சொல்லை, கேளேல் = நீ கேட்டு நடவாதே.

**சுருக்கமான விளக்கவுரை**

சனிநீ ராடு (16)

> சனி = சனிக்கிழமைதோறும், நீர் ஆடு = (எண்ணெய் இட்டுக் கொண்டு) நீரிலே தலை முழுகு.
>
> <u>புதன்கிழமையிலும் முழுகலாம்.</u>

பழிப்பன பகரேல் (76)

பழிப்பன = (அறிவுடையவர்களாலே) பழிக்கப்படுவனவாகிய இழிசொற்களை, பகரேல் = நீ பேசாதே.

இழிசொற்களாவன பொய், குறளை, கடுஞ்சொல், பயனில் சொல் என்கின்ற நான்குமாம்.

மெல்லினல்லா டோள்சேர் (93)

மெல் = மெல்லிய, இல் = (உன்) மனையாட்டி யாகிய, நல்லாள் = பெண்ணினுடைய, தோள் = தோள்களையே, சேர் = நீ புணர்.

**நீண்ட விளக்கவுரை**

ஙப்போல் வளை (15)

ஙப்போல் = ஙகரம் (தான் பிரயோசன முள்ளதாய் இருந்து தன் வருக்கத்தைத் தழுவுதல்) போல, வளை = நீ (பிரயோசனமுள்ளவனாய் இருந்து உன் இனத்தைத்) தழுவு.

ஙகரமானது அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம் என்று சொல்லுக்குக் காரணமாய் வரும். அதின் வருக்கங்களாகிய ஙா, ஙி, ஙீ, ஙு, ஙூ, ஙெ, ஙே, ஙை, ஙொ, ஙோ, ஙௌ என்கின்ற பதினொன்றும் சொல்லுக்குக் காரணமாதல் இல்லை. ஆயினும், ஙகரத்தின் பொருட்டு இவைகளையும் நெடுங்கணக்கிலே வழங்குவார்கள். அதுபோலவே, நீ கல்விச் செல்வங்களினாலே பிறருக்கு உதவி செய்வாயாயின், அவர் உன்னைத் தழுவுவதன்றி உன் பொருட்டு உன் இனத்தாரையும் தழுவுவர் என்பதாம்.

**திருக்குறள்**

*1860இல் தெய்வப்புலவர் திருவள்ளுவநாயனார் அருளிச் செய்த தமிழ் வேதமாகிய திருக்குறண் மூலமும் பரிமேலழகருரையும் வெளியிடப்பட்டது.*

இவை இராமநாதபுர சமஸ்தானம் ம-ள-ள-ஸ்ரீ பொன்னுசாமித் தேவரவர்கள் வேண்டுகோளின்படி, யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலரவர்களால் பல பிரதிருபங்களைக் கொண்டு பரிசோதித்து, சிதம்பர சைவப் பிரகாச வித்தியாசாலைத் தரும பரிபாலகர் Mudlr. G. சுப்பிரமணியம் அவர்களால் சென்னப்

> பட்டணம் வித்தியானுபாலன யந்திரசாலையில் அச்சிற் பதிப்பிக்கப்பட்டன

என்ற குறிப்பு இந்நூலின் முதல் பக்கத்தில் உள்ளது. 1955ஆம் ஆண்டு வரை இந்நூல் 14 பதிப்புகளைப் பெற்றுள்ளது.




திருக்குறளுக்கு உரை கண்ட பரிமேலழகர், ஆங்காங்குப் பல்வேறு தமிழ் இலக்கியங்களிலிருந்தும் மேற் கோள் காட்டிச் செல்வார். ஆனால் அவை எந்தெந்த நூல்க என்பதைக் கற்றுவல்ல பெரும் புலவர்களே அறிதல் கூடும். நாவலர் தம் பதிப்புரையில், அடிக்குறிப்பாக அத்தகைய இலக்கியங் களைப் பாடல் எண்களோடு குறித் திருப்பது, இவரின் நுண்மாண் நுழை புலத்தை வெளிப்படுத்தும்.

'அறத்தான் வருவதே' (குறள். 39) எனும் குறட்பா உரையில், "ஆறனுருபு ஈண்டுடனிகழ்ச்சிக்கண் வந்தது. தூங்கு கையானோங்கு நடைய என்புழிப் போல" என்பர் பரிமேலழகர். இது புறநானூற்றுப் பாடல் 22 என்று அடிக்கோடிட்டுக் காட்டுவார் நாவலர்.

இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரங்கள் அளித்தவர்கள் மகாவித்துவானாகிய திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, அவருடைய மாணாக்கரும் சிதம்பரச் செட்டியார் குமாரருமாகிய தியாகராச செட்டியார், மகாவித்துவான் மாணவரும் சங்கர லிங்கப் பிள்ளை குமாரருமாகிய தெய்வநாயகப் பிள்ளை, மகாவித்துவான் மாணவரும் வீரச்செட்டியார் குமாரருமாகிய சோடசாவதானம் சுப்பராயச் செட்டியார் ஆகியோராவர்.

இந்நூலின் அடிக்குறிப்பில் நாவலர் தம்முடைய கருத்துகளை விளக்கவுரையாகத் தந்துள்ளார். அவற்றுள் ஒருசில வருமாறு :

"இருள்சேர் இருவினையும்" (குறள். 5) என்னும் திருக்குறள் உரையின் அடிக்குறிப்பில்,

> ஈண்டு நல்வினையென்றது அழிதன்மாலையவாய துறக்கவின்ப முதலிய காமியங்களைப் பயப்பன வாகிய வேள்வி முதலியனவற்றை. இவை வீட்டுக்கு நேரே வாயிலாகிய தத்துவ ஞானத்தைப் பயவாமை மாத்திரையேயன்றித் தீவினைபோல அது நிகழ வொட்டாது தடைசெய்து நிற்றலு முடையனவாம்.

ஆதலால், இந்நல்வினை தீவினை யிரண்டும் ஒருவனுக்கு ஞானத்தைத் தடுத்துப் பந்தமுறுத்து தற்கண் பொன்விலங்கும் இருப்புவிலங்கு போலத் தம்முளொப்பனவாமென்க. சரியை கிரியை யோகங்கள் ஞானம் வாயிலாக வீடுபயத்தலின் ஈண்டு, நல்வினை யென்றது அவற்றையன்றென்க

என்று பொருள் விளக்கம் தருகின்றார்.

"கோளிற் பொறியில்" (குறள். 9) எனத் தொடங்கும் குறளில் வருகின்ற எண்குணங்களுக்குப் பரிமேலழகர் சைவ ஆகமத்தில் கூறப்பட்டுள்ள சிவபிரானுக்குரிய குணங்களைக் கூறுவதோடு நிறுத்தி விடுகின்றார். நாவலர் இதன் அடிக்குறிப்பில்,

தன்வயத்தனாதல் - சுவதந்திரத்துவம், தூயவுடம்பின னாதல் - விசுத்ததேகம், இயற்கையுணர்வினனாதல் - நிராமயான்மா, முற்று முணர்தல் - சருவஞ் ஞத்துவம், இயல்பாகவே பாசங்களினீங்குதல் - அநாதிபேதம், பேரருளுடைமை - அலுப்தசக்தி, முடிவிலாற்ற லுடைமை - அநந்தசத்தி, வரம்பிலின்ப முடைமை - திருப்பி, 'எட்டு வானகுணத் திசனெம் மான் றனை' எனத் திருநாவுக்கரசு நாயனாரும், 'இரும்புயர்ந்த மூவிலைய சூலத்தினானை யிறையவனை மறையவனை யெண்குணத்தி னானை' எனச் சுந்தரமூர்த்தி நாயனாரும் அருளிச் செய்தவாற்றானும் இறைவனுக்கு எண்குணமுண்மை சிவாகமநூற் றுணிவென்பதறிக

என்று விளக்கம் தருகின்றார்.

"தெய்வந் தொழாஅள்" (குறள். 55) எனும் திருக்குறளில் இடம்பெற்றுள்ள "கொழுநற் றொழுதெழுவாள்" என்றதன் அடிக்குறிப்பில்,

கொழுநற் றொழுதெழுவாளென்பது எழுந்து கொழுநற் றொழுவாளென முன்பின்னாகப் பொருள்படு மென்றார் பிரயோகவிவேக நூலார். அவர் கூறுமாறு - "இனிக் 'கொழுநற் றொழு தெழுவாள்' 'தொழுதெழுவார் வினைவளநீறெழ' என்னுந் திருவள்ளுவரினும் திருக்கோவையாரினும் பரிமேலழகரும் பேராசிரியரும் தொழா நின் றெழுவாள் தொழாநின்றெழுவார் எனத் துணை வினையா யுரைப்பர். எழுதல் துயிலொழிதலாதலின், எழுந்து தொழுவாள் எழுந்து தொழுவார் என முன் பின்னாகப் பொருள்படுதலன்றி,

நகுபு வந்தான் ஓடிவந்தான் என்பன போலத் தொழாநின்று துயிலொழிதல் கூடாதென்க.

வைகறையாமந் துயிலெழுந்து தான் செய்யு
நல்லறமு மொண்பொருளுஞ் சிந்தித்தது வாய்வதிற்
றந்தையுந் தாயுந் தொழுதெழுக
(ஆசாரக்கோவை 5ஆம் பாட்டு)

என்பது துயிலெழுந்து பின் றந்தையுந் தாயுந் தொழுது பின்காரியத்திற் செல்கவெனப் பொருள் பட்டு வருதலானும், அவருரை அசம்பாவிதமென்க"
(நான்காவது திங்ஙப்படலம், 5ம் பாட்டுரை)

*என்று விளக்கம் தந்துள்ளார்.*

*"எந்நன்றி கொன்றார்க்கும்" (குறள். 110) என்னும் திருக்குறள் உரை விளக்கத்தில்,*

பெரிய அறங்களைச் சிதைத்தலாவது ஆன்முலை யறுத்தலும் மகளிர் கருவினைச் சிதைத்தலும், பார்ப்பார்த் தபுதலும்[15] முதலிய பாதகங்களைச் செய்தல்

*என்று பரிமேலழகர் எழுதுவது புறநானூற்றுப் பாடலை அடியொற்றியது என்பதை அறியச் செய்வதுடன் அப்பாடலையும் எடுத்துக் காட்டுகின்றார். அது வருமாறு :*

ஆன்முலை அறுத்த அறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கில் கழுவாயும் உளவே
நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றார்க்கு உய்தி இல்லென்று
அறம் பாடிற்றே ஆயிழை கணவ (புறநானூறு 34)

*இதில் வருகின்ற கோடிட்ட இரண்டு அடிகளும், "பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும், வழுவாய் மருங்கிற் கழுவாயும் உளவென" என்றே உ.வே. சாமிநாதையர் புறநானூற்றுப் பதிப்பிலும், ச. வையாபுரிப் பிள்ளையின் சங்க இலக்கியப் பதிப்பிலும் உள்ளன. பாடவேறுபாடாகக்கூடக் காட்டப் பெறவில்லை. இஃது ஆய்வுக்குரியது.*

*"தார்தாங்கிச் செல்வது தானை" (குறள். 767) என்னும் திருக்குறள் உரை விளக்கத்தில்,*

> படைவகுப்பாவது வியூகம்; அஃது எழுவகை யுறுப்பிற்றாய், வகையானான்காய், விரியான் முப்பதாம். உறுப்பேழாவன உரமுதற்கோடி யீறாயின. வகை நான்காவன தண்டம், மண்டலம், அசங்கதம், போகமெனவிவை. விரி முப்பதாவன தண்டவிரி பதினேழும், மண்டலவிரி இரண்டும், அசங்கதவிரி யாறும், போகவிரியைந்துமென விவை. இவற்றின் பெயர்களும் இலக்கணமும் ஈண்டுரைப்பிற்பெருகும்; அவையெல்லாம் வடநூல்களுட் கண்டுகொள்க

என்று பரிமேலழகர் கூறிச் செல்கின்றார். ஆயின் நாவலர் இவற்றுக்குரிய விளக்கங்களை அடிக்குறிப்பில் தந்து விடுகின்றார்.

நாவலர் தரும் விளக்கம் : உறுப்பேழாவன - உரம், இறக்கையிரண்டு, மத்தியம், பிரதிக்கிரகம்,[16] பிரிஷ்டம், கோடி எனவிவை. தண்டம் - சேனையைக் குறுக்காக நிறுத்துவது. மண்டலம் - பாம்பு மண்டலமிடுவதுபோலச் சேனையை நிறுத்துவது. அசங்கதம் - சேனையை வேறு வேறாக நிறுத்துவது. போகம் - சதுரங்கசேனையை ஒன்றுக்குப்பின் ஒன்றாக நிறுத்துவது. தண்டவிரி பதினேழாவன - பிரதரம்,[17] திருடகம், சியாவஸ்தம், குக்ஷி, பிரதிட்டம், சுப்பிரதிட்டம், சியேநம், விஜயம், சஞ்சயம், விசாலம், நிஜயம், சூசி, ஸ்தூணா, கர்ணம், சமூமுகம், இரதாசியம், வலயம் எனவிவை. மண்டலவிரியிரண்டாவன - சர்வதோபத்திரம், துர்ஜயம் எனவிவை. அசங்கதவிரியாறாவன - அர்த்தசந்திரம், உத்தானம், சிருங்காடம், கர்க்கடகசிருங்காரி, காகபாரி, கோதிகா எனவிவை. போகவிரியைந்தாவன - கோமூத்திரிகை, சிம்சகம், சஞ்சாரி, சகடம், பந்தம் எனவிவை. இவற்றைக் காமாந்தகமென்னு நூலுட் கண்டுகொள்க.

### சமயப் பணிகள்

நாவலரின் சைவ சமயப் பணிகள் அளவிடற்கரியன. சைவப்பற்று மிக்க நாவலர் எவரேனும் தம் சமயத்தைப் பற்றி அவதூறாகப் பேசினாலோ அல்லது எழுதினாலோ அதற்கெல்லாம் சுடச்சுடப் பதில் கூறுவதைத் தம் கடமையாகக் கொண்டு மறுப்புரைகளைத் தந்து கொண்டே இருந்தார்.

'பெரியபுராண வசனம்' எழுதி நாவலர் 1852இல் வெளியிட்டுள்ளார். இந்நூல் உருவானதைப்பற்றிக் கைலாச பிள்ளை,

> பெரியபுராண வசனம் உருவாகும்போது, அச்சுக் கூடத்தில் நின்று கொள்வார் நாவலர். காகிதங் களில் எழுதுவதில்லை. ஏட்டைக் கையில் வைத்துக் கொண்டு வசனமாகச் சொல்லுவார் - எழுத்துகளை அச்சுக் கோர்ப்பவர் அடுக்கிக் கொண்டே வருவார். ஆறுமுக

> நாவலர் வேறொரு பாஷையிலே நினைத்து மீளத் தமிழில் எழுதுகிறவரில்லை, வீண்சொல், அடை எதுவும் இல்லை. இன்னோசையை இவரின் நடை இயல்பாய்ப் பெறும்

என்று கூறுகின்றார்.

நாவலருக்கு இருந்தது சமயப்பற்று என்று கூறுவதைவிடச் சைவ வெறி என்று கூறுவதே பொருந்தும். நாவலரது தமையனார் தியாகராசர் இவரைச் சோதிக்க எண்ணி ஒரு நண்பர் மூலம் பெரியபுராணம் எல்லாம் கட்டுக்கதைகளே என்று சொல்லச் செய்தார். நாவலர் வெகுண்டு ஒரு கொடுவாளை எடுத்துக் கொண்டு தமையனாரை வெட்ட அவர் வீட்டிற்கு வந்தார் என்றும் வாசலில் உள்ளவர்கள் அவரைப் பிடித்து விலக்கினர் என்றும் கூறப்படுகிறது.

சைவ சமயத்தை மக்களிடையே பரப்புவதற்குப் பத்திரிகை ஒன்று வேண்டும் என்று விரும்பிய நாவலர் 'சைவோதய பானு' என்னும் பெயரில் யாழ்ப்பாணத்தில் இதழ் ஒன்றைத் தொடங்கினார்.

சிவாலய தரிசனம் செய்வோருக்குப் பக்தி உண்டாக்கும் வண்ணம் பண்ணோடு திருவாவடு துறையிலிருந்து வருவித்துப் பயிற்சி செய்வித்தவரும் நாவலரேயாம். சிதம்பர மூலட்டானவருக்கு முதன்முதல் பாற்காவடி தருமம் கொடுத்தவர் ஆறுமுக நாவலரேயாவர்.

'சைவத்தின் மேற் சமயம் வேறில்லை' என்பதில் அழுத்தமான கொள்கை கொண்டிருந்தார். சிவதீக்கையே வீட்டின்பப் பேறு நல்கவல்லது என்பதில் அசையா நம்பிக்கை உடையவர். தேவார, திருவாசகங்களில் தம் உள்ளத்தைப் பறி கொடுத்தவர். பண்டை நாயன்மார்களைப் போலச் சிவனடியார் வழிபாட்டிலும் தலைசிறந்தவர். "திருநீறு பூசியே எக்காலத்தும் வேலைக்கு வருவேன்" என்ற நிபந்தனையைப் பெர்சிவல் துரையிடம் செய்து கொண்டார். நாவலர், தம் தமையனாருக்கு எழுதிய மடல் ஒன்றில்,

> சிவவழிபாட்டிற்கு அங்கம் : பாவங்களை வெறுத்தலும், புண்ணியங்களைச் செய்தலும்! இவை யில்லாத வழிபாடு, அபத்தியத்[18]தைத் தள்ளாமலும், பத்தியம்[19] கொள்ளாமலும் தின்கிற மருந்துக்கும் சமம்!

என்று குறிப்பிடுவதால் சைவ சமயத்தவர்கள் என்றும் நல்லனவே செய்ய வேண்டும் என்று இவர் கருதுவதாகக் கொள்ள முடிகிறது.

சைவச் சான்றோராம் ஆறுமுக நாவலரை, மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை,

அவநெறியாய வனைத்துங் களைந்து
சிவநெறி வளர்க்கும் திவ்விய குணத்தர்

சைவமெனும் பயிர் வளர்க்கும் எழிலி போல்வார்!

*எனப் பாமாலை சூட்டிப் புகழ்வாராயினர்!*

**திருக்கோவையார்**

*திருக்கோவையார் நச்சினார்க்கினியர் உரையை நாவலர் 1861இல் பதிப்பித்துள்ளார். அதன் முகப்புப் பக்கம் வருமாறு :*

திருக்கோவையார் - சைவ சமயாசாரியராகிய மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச் செய்தது - இஃது மதுரையாசிரியர் பரத்துவாசி நச்சினார்க்கினிய ருரையோடு இராமநாதபுர ஜமீந்தாரவர்களின் மாநேஜராகிய ம-ள-ள-ஸ்ரீ பொன்னுசாமித் தேவரவர்கள் கேட்டுக் கொண்டபடி, யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலரால் பல பிரதிரூபங்களைக் கொண்டு பரிசோதித்து, சென்னப்பட்டணம் வித்தியாநு பாலன யந்திரசாலையில் அச்சிற் பதிப்பிக்கப் பட்டது.

*இந்நூல் ஆறு பதிப்புகளைப் பெற்றுள்ளது. இந்நூலுக்கு, வேதாகம சித்தாந்த சைவ சமயாசாரிய பீடமாய் விளங்காநின்ற திருவாவடுதுறையாதீன வித்துவான் தாண்டவராய சுவாமிகள், திரிசிரபுரம் ம-ள-ள-ஸ்ரீ மஹாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, தியாகராச செட்டியார், சோடசாவதானம் சுப்பராயச் செட்டியார், திரிசிரபுரம் முத்துச்சாமிப் பிள்ளை குமாரர் முருகையப் பிள்ளை ஆகியோர் சிறப்புப் பாயிரங்கள் அளித்துள்ளனர். திருவாதவூரர் வரலாறு, அவர்தம் சிறப்புப் பணிகள், நூலின் உட்பொருள் பெருமைகள், நூலாக்க வரலாறு, பதிப்பாசிரியர் பெருமைகள் அனைத்தும் பா நடையில் அமைந்துள்ளன.*

**கந்தபுராணம்**

*1865இல் வெளியிடப்பட்ட கந்தபுராணத்தின் முகப்புப் பக்கம் வருமாறு :*

கந்தபுராணம் - சுப்பிரமணியசுவாமி வரப்பிரசாதி யாயும் குமரகோட்டத் தருச்சகராயும் காஞ்சீபுரத்தில் எழுந்தருளியிருந்த கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் அருளிச்செய்தது - இஃது யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலரவர்களால் பல பிரதி ரூபங்களைக் கொண்டு பரிசோதித்து மேற்படியூர் சதாசிவப்

பிள்ளையால் சென்னப் பட்டணம் வித்தியாநுபாலன யந்திரசாலையில் அச்சிற் பதிப்பிக்கப்பட்டது.

## இலக்கணப் பணிகள்

இலக்கண நூல்களை இளஞ்சிறார்களும் விரும்பிப் படிக்கும் வகையில் எளிமைப்படுத்தினார். அவர் காலத்திற்கு முன்வரை கரடுமுரடாகவும் சுவை குறைந்தும் காணப்பட்ட வசன நடையைத் தம் பேச்சு நடையைப் போன்று ஆற்றொழுக்கு மிக்கதாகவும் ஆற்றல் உடையதாகவும் திருத்தி அமைத்தார். பல வசன நூல்களை இதற்காகவே எழுதிக் குவித்தார்.

'இலக்கண வினாவிடை' என்ற சிறிய நூலையும், 'இலக்கணச் சுருக்கம்' என்ற சற்றே பெரிய நூலையும் நாவலர் வெளியிட்டுள்ளார். 'இலக்கணச் சுருக்கம்' என்ற நூல் மாணவர் களை முன்வைத்துப் பதிப்பிக்கப்பட்டது. இந்நூலில் ஒரு குறிப்பிட்ட பகுதி முடிந்ததும் 'பரீக்ஷை வினாக்கள்' என வினாக்களை அடுக்கித் தருகின்றார். பாடப்பகுதிகள் அனைத்தும் உரைநடையில் உள்ளன. நூலின் இறுதிப்பகுதியில்,

> கொற்றனானவன் தன்னை எதிர்த்த பகைவரை வாளான்
> மாய வெட்டினான்

என்ற நீண்ட தொடரைத் தந்து ஒவ்வொரு சொல்லையும் அதன் இலக்கணக் குறிப்புகளுடன் விளக்கியுள்ளார்.

ஏனைய சமய நூல்களை முடிக்கும் பொழுது 'திருச் சிற்றம்பலம்' என்று கூறுவதுபோல இந்நூலில் 'பரமபதி துணை' என்று முடிக்கின்றார்.

'நன்னூல் காண்டிகையுரை' சிறந்த பதிப்பாகவும் பல பதிப்புகளையும் கண்டுள்ளது. அடிக்குறிப்பிடல் (ப. 86) பாடலின் செய்திக்குரிய பதவுரை கூறிய பிறகு அதையொத்த சிலவற்றை அடிக் குறிப்பில் வரிசைப்படுத்தல் (ப. 101) உரையின் நடுவே வரும் 'அருத்தாபத்தி' என்ற சொல்லுக்கான விளக்கத்தை உடுக்குறியிட்டு அடிக்குறிப்பில்,

> அருத்தாபத்தியாவது ஒரு பொருளைக் கூறிய மாத்திரத்தால் அதன் குறிப்பைக் கொண்டு கூறப்படாத மற்றொரு பொருளையும் அறிவது

என்று விளக்கியுள்ளார்.

பாடற்சொற்களை எழுதியபின், அச்சொற்களுக்குரிய பொருண்மையைப் பதவுரையாகக் கூறும் முன் சமன்பாட்டுக் குறியீட்டைப் (=) பயன்படுத்தியுள்ளார். ஒவ்வொரு நூற்பாவும் கூறும்

செய்திகள் தலைப்பாகக் கொடுக்கப்பட்டுள்ளன. அடுத்து நூற்பாவை அமைத்துள்ளார். சொல், சொற்றொடர்கள் கொடுக்கப்பட்டு அவற்றுக்குப் பதவுரையும், தொடர்ந்து வரலாறு, எடுத்துக்காட்டுகள் என்று தந்துள்ளார். எளிமைப்படுத்திப் பதிப்பிக்கும் முறைக்கு இந்நூல் ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

'நன்னூற் காண்டிகையுரை முற்றும்' என்பதையடுத்து - அடுத்த பக்கம் - இந்நூலின் பின்னிணைப்பாக இடம்பெற்றுள்ள 60 பக்கங்களில்,

1. அப்பியாசம்
2. பகுபத முடிவு
3. சொல்லிலக்கண சூசி
4. இலக்கணம் கூறிய உதாரணங்கள்
5. உபாத்தியாயருக்கு அறிவித்தல்

என்னும் பகுதிகளில் ஒரு பழைய நூலை இக்காலத்து மாணவர்களுக்கு எப்படிக் கற்பிக்க வேண்டும் என்ற குறிப்புகளும் அதற்கான எடுத்துக்காட்டுகளும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இன்றைய காலத்தில் கற்பித்தல் நெறிமுறைகளுக்கேற்ற விளக்கங்கள் உள்ளன. இப்பகுதி மாணாக்கர்களுக்கு மட்டுமின்றிப் பாடம் நடத்தும் ஆசிரியர்களுக்கும் துணைபுரிவதாக அமைந்துள்ளது. சான்றாக:

1. மேல்வரும் பெயர்கள் இன்ன, இன்ன ஏதுவால், இன்ன இன்ன பெயர் என்று எழுதுக - மலை, கடல், நிலம், பறவை, யாக்கை, சோறு, எழுத்து, பாட்டு, கறவை - இவ்வாறு 37 பெயர்கள் இடம் பெற்றுள்ளன.
2. இன்ன இன்னபடி அளபெடுத்தது என்று எழுதுக - 17 தொடர்கள் - இவ்வாறே, முற்றியலுகரம், மகரக்குறுக்கமன்று என்பன போன்று அறுபது வகைப் பயிற்சிகள் நூலின் முழுமையையும் நன்கு பயிற்சியளிப்பனவாக அமைந்துள்ளன.

இலக்கண நூல் பதிப்பாசிரியர்களுக்கு இப் பதிப்புமுறை நல்லதொரு துணையாக அமைகிறது.

**நடை**

நாவலரின் தமிழ் உரைநடைக்குப் பல சான்றுகளைத் தரலாம்.

அன்பானது, குடத்துள் விளக்கும் உறையுள் வாளும் போல ஒருவர் காட்டக் காணற்பாலதன்று; அவ்வன்புடைமையால் வெளிப்படும் செயல்களைக் கண்டவழி, 'இவை உண்மையால் இங்கே அன்பு உண்டு' என்று அநுமித்துக் கொள்ளற்பாலதாம் [20]

ஒருநாள் ஒரு நரி இரைக்காகத் திரியும் போது, நல்ல திராட்சைப் பழக்கொத்து ஒன்று எதிர்ப்பட்டது. அதைப் பறிக்கும்படி அந்த நரி வேண்டிய மட்டும் குதித்தும் எட்டவில்லை. அப்போது அது, 'சீ, புளிக்குமே!' என்று சொல்லிப் போய்விட்டது [21]

**புத்தகம்**

*'புத்தகம்' என்ற தலைப்பில் நாவலர் கூறிய கருத்துகள் சான்றுக்குத் தரப்படுகின்றன.*

கல்வியை விரும்பிக் கற்கும் மாணாக்கர்களும், கல்வியிலே தேர்ச்சியடைந்த வித்துவான்களும், இனிக்கற்க முயல்பவர்களுமாகிய எல்லாருக்கும் புத்தகங்கள் இன்றியமையாதனவாம். புத்தகங்க ளின்றிக் கற்கப் புகுவோர் கோலின்றி நடக்கக் கருதிய குருடர் போல்வர். யாதாயினும் ஒரு தொழிலைச் செய்பவனுக்கு அதனைச் செய்தற்குரிய ஆயுதம் இன்றியமையாததுபோல, கல்வி கற்கும் மாணாக்கர்களுக்கு அதனைக் கற்றற்குரிய புத்தகம் இன்றியமையாததேயாம். ஆதலால், வித்தையை விரும்பிக் கற்கும் சிறுவர்கள் புத்தகங்களைச் சம்பாதித்து, அவைகளைக் கிழியாமலும் அழுக்குப் படியாமலும் கெட்டுப் போகாமலும் சாவதானமாக[22]ப் பாதுகாத்து வைத்துப் படித்தல் வேண்டும். வேறு மாணாக்கர்களுக்காவது பிறருக்காவது புத்தகங்களைப் படிக்கக் கொடுத்தால், அவற்றை எழுதி வைத்திருந்து, மீள வாங்கி வைத்துக் கொள்ளல் வேண்டும். புத்தகங்களைப் பாதுகாத்துத் தருங் குணமில்லாதவர்களுக்கு அவைகளைக் கொடுக்க லாகாது.

புத்தகங்கள் ஏட்டுப்புத்தகம், கையாலெழுதப்பட்ட காகிதப் புத்தகம், அச்சிட்ட காகிதப் புத்தகம் என மூன்று வகையாக உள்ளன. தற்காலத்தில் அச்சுப் புத்தகங்களே மிகுதி. ஏட்டுப் பிரதிகள் வரவரக் குறைந்துவிட்டன. ஏடுகளைப் பார்த்து எழுதின காகிதப்

புத்தகங்கள் மிகச் சொற்பம். முற்காலத்தில் ஐம்பது ரூபா செலவழித்து மெய்யெழுத்து உயிர்மெய் யெழுத்துக்களின் பேதந் தெரியாமல் எழுதுவித்து வாங்கவேண்டிய ஒரு நூலைத் தற்காலத்தில் ஐந்து ரூபா விலையில் நல்ல அச்சுப் புத்தகமாக வாங்கலாம்.

கல்வியில் விருப்பமுடையவர்களாகிய வறிய பிள்ளைகளுக்குப் புத்தகம் வாங்கிக் கொடுத்தல் பெரும் புண்ணியம். அதிலும் ஞான சாஸ்திரங்களை விரும்பிக் கற்போர்க்கு அவைகளைச் சம்பாதித்துக் கொடுத்தால் ஞானதானம் எனப்படும் உத்தமோத்தம புண்ணியமாம். ஆதலால், நமது தேசத்து அரசர்களும், மடாதிபதிகளும், பிரபுக்களும், கருவி நூல்களையும் ஞான நூல்களையும் சம்பாதித்து வைத்து, ஊர்கடோறும் புத்தகசாலைகளைத் தருமத்தின் பொருட்டுத் தாபித்து, கல்வியில் விருப்பமுடைய யாவரும் எளிதில் வாசித்து ஈடேறும்படி அவைகளை நடாத்தி வருதல் உயர்வொப்பில்லாத பெரும் புண்ணியமாம்.

**கல்வி**

*கல்வி தொடர்பாக நாவலர் பின்வருமாறு கூறுகின்றார் :*

கல்வியை நல்லாசிரியரிடத்தே சந்தேகமும் விபரீதமும் அறக் கற்றல் வேண்டும். சந்தேகமாவது இதுவோ அதுவோ என ஒன்றிலே துணிவு பிறவாது நிற்றல். விபரீதமாவது ஒன்றை மற்றொன்றாகத் துணிதல். வியாதி வறுமைகள் இல்லாமையும், பொருள் இளமை முதலியவைகள் உண்மையும், கல்வி கற்றற்குச் சிறந்த கருவிகள். மிகச்சிறந்த கருவி ஆசிரியருடைய உள்ளத்திலே, அருள் உண்டாகும்படி நடத்தல். ஆதலினாலே, கல்வி கற்கும் மாணாக்கர் ஆசிரியரை விதிப்படி சிரத்தை யோடு வழிபட்டே கற்றல் வேண்டும். வழிபாடாவது, இன்சொற் சொல்லல், வணங்குதல், உற்றவிடத் துதவுதல் முதலாயின.

**எழுதிய நூல்கள்**

*நாவலர் அனுஷ்டான விதி (1896), இலக்கணச் சுருக்கம் (1874), இலக்கண வினாவிடை (1964-23), உடையவர் உபாயம் (பாடல்), குரு வாக்கியம் (1896), சிதம்பர மான்மியம் (1895-4), சிவக்ஷேத்திராலய மகோற்சவ உண்மை (1957), சிவபூசைத் திரட்டு (1926), சிவாலய தரிசன விதி (1890-6), சுப்பிரபோதம் (1853), சூசனம் (1970), சைவ சமயம் (1901),*

சைவ சமயம் - தலைமைப் பேருரை (1930-31), சைவ தூஷணப் பரிகாரம் (1921-2), சைவ வினாவிடை முதற் புத்தகம் (1921), சைவ வினாவிடை இரண்டாம் புத்தகம் (1870), நன்னெறி (1909), நித்திய கருமவிதி (1926), பால பாடம் முதற் புத்தகம் (1978-33), பால பாடம் இரண்டாம் புத்தகம் (1977-21), பால பாடம் மூன்றாம் புத்தகம் (1955-12), பால பாடம் நான்காம் புத்தகம் (1969-30), யாழ்ப்பாணச் சமயநிலை (1937), வள்ளியம்மை திருமணப் படலம் (1955) ஆகிய நூல்களை எழுதியுள்ளார்.

## உரை எழுதிய நூல்கள்

நாவலர் பதினாறு நூல்களுக்கு உரை எழுதிப் பதிப்பித்துள்ளார். அந்நூல்கள் வருமாறு :

| | | | |
|---|---|---|---|
| 1 | ஆத்திசூடியும் கொன்றை வேந்தனும் | ஔவையார் | 1933 (2) |
| 2 | நல்வழி | ஔவையார் | 1933 (2) |
| 3 | கோயிற் புராணம் | | 1868 (2) |
| 4 | சைவ சமய நெறி | மறைஞான சம்பந்த நாயனார் | 1955 (8) |
| 5 | திருச்செந்திநீரோட்டக யமகவந்தாதி | | 1924 (10) |
| 6 | திருத்தொண்டர் பெரியபுராணம் | சேக்கிழார் | 1955 |
| 7 | திருத்தொண்டர் பெரியபுராண வசனம் | சேக்கிழார் | 1953 |
| 8 | திருமுருகாற்றுப்படை உரை | நக்கீரர் | 1928 (14) |
| 9 | திருமுருகாற்றுப்படை உரை (நச்சினார்க்கினியர் உரைக் கருத்தைத் தழுவியது) | நக்கீரர் | 1935 (15) |
| 10 | திருமுருகாற்றுப்படை | நக்கீரர் | 1960 |
| 11 | திருவிளையாடற்புராணம் (வசனம்) | | 1957 (13) |
| 12 | பெரியபுராணம் | சேக்கிழார் | 1954 |

| | | | |
|---|---|---|---|
| 13 | பெரியபுராணம் என்று வழங்குகின்ற திருத்தொண்டர் புராணம் | சேக்கிழார் | 1852 |
| 14 | திருவிளையாடற்புராணம் | | 1910 |
| 15 | மறைசையந்தாதி | | 1930 (11) |
| 16 | விநாயக கவசம், சிவ கவசம், சக்தி கவசம், சரசுவதி தோத்திரம், இலக்குமி தோத்திரம் | | 1929 |

**பதிப்பித்த நூல்கள்**

ஆறுமுக நாவலர் 44 நூல்களைப் பதிப்பித்துள்ளார். அந்நூல்கள் வருமாறு : அருணகிரியந்தாதி (1931-11), இலக்கணக் கொத்து மூலமும் உரையும், உபநிடதம் மூலமும் உரையும் (1874-2), கந்தபுராணம் (1869), கந்தரலங்காரம், கந்தரநுபூதி (1925-17), காசித் துண்டி விநாயகர் திருவருட்பா (1935-5), சிங்கைச் சிலேடை வெண்பா (1927-3), சிதம்பர மும்மணிக்கோவை (1867), சிவஞான போதமும் பொழிப்புரையும் (1885), சிவதத்துவ விவேகம் (1913-4), சூடாமணி நிகண்டு மூலமும் உரையும் (1867), சேது புராண மூலம் (1866), சொரூபானந்தப் பொருளாகிய உபநிடதம் மூலமும் உரையும் (1874-2), தமிழ் வேதமாகிய திருக்குறள் மூலமும் உரையும் (1861), தருக்க சங்கிரகமும் அதனுடைய தருக்க சங்கிரக தீபிகையும் (1861), திருக்கருணை வெண்பாவந்தாதி (1927-5), திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி (1926-7), திருக்கோவையார் (1860), திருக்கோவையார் பரிசோதித்துப் புதுப்பித்தது, திருச்செந்தூரகவல் (1926-3), திருத்தொண்டர் பெரியபுராணம் (1933 - 1954-20), திருமுருகாற்றுப்படை (1913), திருவாசகம் - திருக்கோவையார் (1915), திருவேங்கடையர் செய்த உபமான சங்கிரகமும், புகழேந்திப் புலவர் செய்த இரத்தினச் சுருக்கமும் (1926), தெய்வானையம்மை திருமணப் படலம் (கந்தபுராணம்) உரையுடன் (1956), தேவாரத் திரட்டு 3 பகுதிகள், திருவாசகம் திருவிசைப்பா, தொல்காப்பியம் சொல்லதிகாரம் (பரிசோதித்தது) சி.வை. தாமோதரம் பிள்ளையால் பதிப்பிக்கப்பட்டது (1868), நன்னூல் காண்டிகையுரை (1968-25), நன்னூல் விருத்தியுரை சங்கர நமச்சிவாயர் உரை (1887), பட்டணத்துப் பிள்ளையார் அருளிச்செய்த திருப்பாடற்றிரட்டு (1922-12), பதினோராந் திருமுறை (1924-3), பிரயோக விவேக மூலமும் உரையும் (பரிசோதித்தது) (1882), பிரயோக விரூபகம் பரிசோதித்தது (1957), புட்பவிதி (1918-7), பெரியபுராணம் சுத்திய ரூபமாகச் செய்தது (1950-17), பெரியபுராணம் பரிசோதித்தது (1929-7), மகாபாரதம் (1908-8),

மருதூரந்தாதி உரையுடன் (1919), மறைஞான சம்பந்தர், சைவ சமய நெறி (1955-8), மெய்கண்ட தேவர் அருளிச்செய்த சிவஞான போதமும், வார்த்திகலமென்னும் பொழிப்புரையும் (பரிசோதித்துப் புதுப்பித்தது), வாக்குண்டாம், நல்வழி, நன்னெறி மூலமும் உரையும் (1907), வாக்குண்டாம், நல்வழி, நன்னெறி (i934), வில்லிபுத்தூராழ்வார் இயற்றிய மகாபாரதம் (1902-8).

நாவலர் 1860இல் பதிப்பித்த 'திருக்கோவையார்' நூலின் இறுதியில் தாம்வெளியிடவிருக்கும் நூல் பட்டியல் ஒன்றைத் தருகின்றார். அதில் புறநானூற்று உரை, கலித்தொகை உரை, சிலப்பதிகார உரை, சீவக சிந்தாமணி உரை, வளையாபதி போன்ற நூல்களைக் குறிப்பிட்டுள்ளார்.

மேலும் தேவாரம், தமிழ் அகராதி, தமிழ் சமஸ்கிருத அகராதி, தமிழ் இங்கிலீஷ் அகராதி, தருக்க பரிபாஷை, இரகு வம்சம், உபதேச காண்டம், சம்ஸ்கிருத வியாகரண சாரம் ஆகிய நூல்களை அச்சில் பதிப்பிப்பதற்காக எழுதத் தொடங்கியதாகவும் அவர் வரலாற்றின் மூலம் அறிந்துகொள்ள முடிகின்றது.

## நாவலரைப் போற்றிய பெருமக்கள்

'புதிய தமிழ் உரைநடையின் தந்தை' என்பார் மு.வரதராசன். 'உரைநடை நூலாசிரியர்களில் யாழ்ப்பாணத்து ஆறுமுக நாவலர் தலைசிறந்தவர்' என்பார் கா.சுப்பிரமணிய பிள்ளை. 'வசனநடை கைவந்த வல்லாளர்' என்பார் பரிதிமாற் கலைஞர்.

மன்னுபெருந் தமிழ்ப்பாடை யிலக்கணமும்
இலக்கியமும் வரம்பு கண்டோன்
பன்னு சிவபுராணங்கள் பல தெரிந்தோன்
சிவாகம நூற்பரவை மூழ்கி
உன்னு மனுபூதி எனும் விலை வரம்பிலா
மணிகைஉறக் கொண்டுள்ளான்
நின்னு நயகுணத்தினனாய்ச் சைவம் எனும்
பயிர்வளர்க்கும் எழிலி போல்வாள்

என்பார் மீனாட்சிசுந்தரம் பிள்ளை.

முன்னாள் உயர்நீதிமன்ற நீதியரசர் தி. சதாசிவ ஐயர் நாவலரைப்பற்றி,

நாவலரைப் போல முன்னும் இப்பொழுதும் தமிழ் வித்துவான்களில்லை. ஒருவேளை இருந்தாலும் அவரைப்போலத் தமிழ்மொழியையும் நல்லொழுக்கத்தையும் சைவ சமயத்தையும் வளர்த்து நல்ல தமிழ் வசன நடையில்

நூல்களை எழுதி அச்சிட்டு வெளிப்படுத்தித் தமிழ் நாட்டாருக்கு உபகாரஞ் செய்தவர் வேறொருவருமில்லை. பொருள் வரும்படிக்காகப் பிறரை வணங்காதவர் களும் அவரைப் போல் ஒருவருமில்லை

*என்று கூறுகின்றார். தி. செல்வக்கேசவராய முதலியார்,*

யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் அவர்கள் நல்ல நடையில் கதை, உரைநடை முதலிய எழுது வதற்கு நாவலர் தம், பெரியபுராண வசனம் என்னும் நூல் வழிகாட்டியாய் உள்ளது [23]

*என்று கூறுகின்றார். நாவலர் ச. சோமசுந்தர பாரதியார்,*

யாழ்ப்பாண நல்லூர் ஆறுமுக நாவலர் அவர்கள் ஓர் அவதார புருஷர். இடையிருட்கடைகாலத்தில் விடியுமுன் விசும்பில் விளங்கும் வெள்ளிபோலத் தமிழகத்தில் தளரும் சைவமும், தமிழும் தழைய, அவ்விரண்டிற்கும் புத்துயிர் வழங்கப் பிறந்த வள்ளலாராவர். முன்னே பல காலங்களிலும் தமிழகத்திலிருந்து தான் பெற்ற சிறு நன்மைகளை வட்டியுடன் பெருக்கி ஒரு காலத்து ஒருமுகமாகப் பழங்கடனைத் தீர்த்து, என்றும் தீர்க்கொணாவாறு தமிழகத்தை ஈழநாட்டிற்குக் கடமைப்படுத்திய பேருபகாரி நாவலர் என்றால் அது மிகையாகாது

*என்பார். அ.மு. பரமசிவானந்தம்,*

நாவலர் பெரியபுராணம், திருவிளையாடற்புராணம் முதலியவற்றை உரைநடையாக்கியுள்ளார். மற்றும் சிறுவர்களுக்குப் பயன்படக்கூடிய பால பாடம், சைவ வினாவிடை போன்றன இவர்தம் உரைநடை நூல்களாகும். இவை அனைத்தும் சைவ சம்பந்தமான நூல்களாய் அமைந்த காரணத்தால், பிறரால் நன்கு பயிலப்படாதனவாக அமைந்துவிட்டன என்னலாம். சைவர்களுக்குள்ளும் சமயப் பற்றுள்ளவர்களுங்கூட முதல் நூலைப் பயின்று அறியவேண்டுமென்ற உள்ளத்தோடு, முதல் நூல்களையும் அவற்றின் உரைகளையும் நாடி நிற்கின்றமையின், இவை அதிகமாக வளர்ச்சியுற வில்லை. அத்துடன் இவருடைய சமயக் கொள்கை உயர்ந்த நிலையிலே போற்றப் பட்டமையின், சாதாரண சைவசமயிகளுங்கூட இவருடையதைப் பின்பற்ற முடியவில்லை [24]

*என்கின்றார்.*

**நாவலரின் மறைவு**

சைவத்தையும், தமிழையும் இரு கண்களாகக் கருதிய நாவலரால்தான் தமிழ் உரைநடை ஏற்றமும் மாற்றமும் அடைந்தது. அச்சுயந்திரசாலையைச் சென்னையில் ஏற்படுத்தி எண்ணற்ற நூல்களை ஏட்டுச்சுவடியிலிருந்து அச்சிட்டு வெளியிட்டுத் தமிழுக்கு உயிரூட்டியவர்.

பதிப்புலகில் நாவலர் பதிப்பு சிறப்பிடத்தைப் பெற்ற துடன் மட்டும் அமையாமல் ஒவ்வொரு நூலும் பல பதிப்புகளைப் பெற்றன. இவருடைய இனிய சொற்பொழிவைக் கேட்ட மக்கள் மகுடி இசைக்கு மயங்கும் பாம்பினைப்போலக் கட்டுண்டிருந்தனர். பல தேவையற்ற பழக்கங்களில் ஈடுபட்டிருந்த மக்களை இவர்தம் இனிய சொற்பொழிவால் திருத்தியிருக்கின்றார்.

"என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்னும் அப்பர் வாக்கைத் தம் வாழ்விற் கடைப்பிடிக்க விழைந்தவராதலின், திருமணம் செய்து கொள்ளாமல் தூய துறவியாக இறுதிவரை வாழ்ந்தார்.

இவ்வாறு கணக்கிலாப் பணிகளை ஆற்றிய நாவலர் தம் 56ஆம் வயதில், அதாவது 16-11-1879ஆம் ஆண்டில் யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணையில், தாம் வாழ்ந்த இல்லத்திலேயே இறைவன் திருவடி எய்தினார்.

இவர் மறைந்தபின் சி.வை. தாமோதரம் பிள்ளை பாடிய பாடல் வருமாறு :

நல்லை நகர் ஆறுமுக நாவலர் பிறந்திலரேல்
சொல்லு தமிழ் எங்கே சுருதி எங்கே – எல்லவரும்
ஏத்து புராண ஆகமங்கள் எங்கே ப்ரசங்கம் எங்கே
யாத்தன் அறிவெங்கே அறை

ஆறுமுக நாவலர் தமிழுக்கு ஆற்றிய சமயப்பணி, கல்விப்பணி, மொழிப்பணி, பதிப்புப்பணி, உரையாசிரியப் பணி, பொதுநலப்பணி ஆகிய பன்முகப் பணிகளைப் பின்வருமாறு அட்டவணைப்படுத்தலாம்.[25]

ஆறுமுக நாவலரின் பன்முகத் தொண்டு (1822-1879)



சமயப்பணி




சமயச் சொற்பொழிவு நிகழ்த்துதல்

சிவாலய தரிசன விதி, குருபூசை நடத்தல்

சிவதீக்கை செய்து வைத்தல்

சமய இதழ் நடத்தல் (எ.டு.) சுப்பிரமணிய

போதம், வச்சிரதண்டம்

கல்விப்பணி




மொழிப்பணி



பதிப்புப்பணி

| இலக்கியங்களைப் பதிப்பித்தல் | உரைகளைப் பதிப்பித்தல் |
|---|---|
| சேது புராணம் | பரிமேலழகருரை |
| இலக்கணக் கொத்து | திருக்கோவையார் உரை |
| சூடாமணி நிகண்டு | சேனாவரையம் |
| கந்தரலங்காரம் | தருக்க சங்கிரக உரை |
| நமசிவாயமாலை கொலை மறுத்தல் | அபிராமியந்தாதி மூலமும் உரையும் |
| பெரியநாயகியம்மை திருவிருத்தம் | |

உரையாசிரியப்பணி

| சமய நூல்களுக்கு உரைகள் | இலக்கிய உரைகள் | இலக்கணஉரைகள் |
|---|---|---|
| கோயிற்புராணம், | திருமுருகாற்றுப்படை, | நன்னூல் |
| சைவ சமய நெறி, | திருச்செந்தில் நீரோட்டக யமகவந்தாதி, | காண்டிகை, |
| சிவதருமோத்தரம், | பெரியபுராண வசனம், | தொல்காப்பியச் |
| சிவஞானபோதம் | பெரியபுராண சூசனம், | சூத்திர விருத்தி |
| | திருவிளையாடற்புராண வசனம், மருதூரந்தாதி | |

பொதுநலப்பணி



சமூக விழிப்புணர்ச்சி ஏற்படுத்துதல்

உயிர்ப்பலி தவிர்த்தல்

இறைநிலம் மீட்டல்

ஒழுக்கம் பேணல்

கல்விச்சாலை அமைத்தல்

கோயில் திருப்பணி செய்தல்

ஆறுமுக நாவலர்தாம் தமிழில் நிறுத்தக் குறிகளை இடமறிந்து முதன்முதலில் நன்கு பயன்படுத்தியவர் என்று அறிஞர்களால் சொல்லப்படுகிறது. அவர் எந்த நூலை அச்சிட முனைந்தாலும், அந்த நூலுக்குரிய சுவடிகளை ஒப்புநோக்கிப் பார்த்து, உண்மையான பாடங்களைக் கண்டு தேர்ந்து வெளியிடுவார். இலக்கண வழு இல்லாமலும், இலக்கிய மரபு குன்றாமலும், மிகுந்த எச்சரிக்கையுடனும் நிதானத்துடனும் அச்சிட முனைந்தார். இருந்தாலும் இவரால் அச்சிட்டு வெளிப்படுத்திய இவரது பதிப்பிலும் குறை கண்டவர்கள் இவரது காலத்திலேயே இருந்திருக்கிறார்கள் என்பதையும் அறிந்து கொள்ள முடிகிறது.



# 2. சி.வை. தாமோதரம் பிள்ளை (1832 - 1901)

யாழ்ப்பாணத்துக்கருகில் அமைந்துள்ள புத்தூரைச் சார்ந்த சிற்றூர் சிறுப்பிட்டி. இவ்வூரில் வாழ்ந்த வைரவநாத பிள்ளை, பெருந்தேவியார் என்போருக்குத் தலைமகனாகச் சி.வை. தாமோதரம் பிள்ளை 12-09-1832இல் பிறந்தார். இவர் உடன்பிறந்த தம்பியர் அறுவராவர்.

**கல்வி கற்றல்**

சி.வை. தாமோதரம், தமிழ்ப் புலமை மிக்க தம் தந்தையாரிடம் தொடக்கக் கல்வியைக் கற்றார். அக்கால வழக்கப்படி ஆத்திசூடி, வாக்குண்டாம் முதலிய நீதி நூல்கள், சொற்பொருள் கூறும் சூடாமணி நிகண்டு முதலானவற்றைக் கற்றார். அதன்பின்னர்ச் சிறுப்பிட்டிக்கு அருகில் அமைந்துள்ள சுன்னாகம் என்ற ஊரில் முத்துக்குமார கவிராயரிடம் உயர் இலக்கண இலக்கியங்களைக் கற்றார்.

ஆங்கிலம் கற்கும் ஆர்வத்தினால் தெல்லிப்பழை ஆங்கிலக் கலாசாலையில் சேர்ந்து கற்றார். அதனைத் தொடர்ந்து யாழ்ப்பாண வட்டுக்கோட்டைச் சர்வகலாசாலையில் (Jaffna Seminary) கல்வி கற்றார். யாழ்ப்பாணப் பல்கலைக் கழகக் கல்லூரியில் சேர்ந்து தம் 12ஆம் வயதில் எட்டு ஆண்டுகள் (1844-1852) பயின்று கணிதம், தமிழ், ஆங்கிலம், தத்துவம், வானியல் போன்றவற்றைக் கற்றார்.

**ஆசிரியர்கள்**

தந்தையார் வைரவநாத பிள்ளை, முத்துக்குமார கவிராயர், கறல் விசுவநாத பிள்ளை, நெவின்ஸ் சிதம்பரம் பிள்ளை, சிரி. மில்ஸ் போன்றோரிடம் இவர் கல்வி கற்றார்.

**பணிநிலை**

யாழ்ப்பாணக் கோப்பாய் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் 1852இல் முதன் முதலில் ஆசிரியப் பணியை மேற்கொண்டார். பார்சிவல் பாதிரியார் அழைப்பின் பேரில் சென்னைக்குச் சென்றார். அங்குப் பார்சிவல் பாதிரியார் நடத்தி வந்த 'தினவர்த்த மானி' என்ற வார இதழின் துணை ஆசிரியர் பொறுப்பை ஏற்றார்.

சென்னையில் இருந்தபொழுது பேராசிரியர் பர்னல், லூசிங்டன், சர். வால்டர் எலியட் போன்ற மேலை நாட்டாருக்குத் தமிழ் கற்பித்து வந்தார். இவரது புலமையை அறிந்த அரசு சென்னை மாநிலக் கல்லூரியில் தமிழாசிரியராக இவரைப் பணி அமர்த்தியது.

சென்னைப் பல்கலைக்கழகம் தொடங்கப் பெற்றவுடன் நடத்திய நுழைவுத் தேர்விலும் அதனை அடுத்து நடந்த இளங்கலைப் (பி.ஏ.) பட்டத்திற்குரிய தேர்விலும் முதல் மாணவராகத் தேறினார். சென்னைப் பல்கலைக்கழகம் வழங்கிய முதல் பட்டதாரிகளில் இவரும் ஒருவர்.

கள்ளிக்கோட்டையிலுள்ள அரசினர் கல்லூரியில் உதவித் தமிழாசிரியராகவும், தலைமைத் தமிழாசிரியராகவும் பணியாற்றி னார். அதன்பின்னர், சென்னை அரசினர் வரவு செலவுக் கணக்கு நிலையத்தில் (Auditor General Office) கணக்காளராகப் பணியாற்றி னார். அப்பதவியை வகித்துக் கொண்டே சட்டக்கல்வி பயின்று 1871இல் அத் தேர்விலும் வெற்றி பெற்று வழக்கறிஞரானார். 1881இல் அரசு அலுவல்களிலிருந்து ஓய்வு பெற்று இளைப்பாறினார்.

சென்னையைவிடத் தென்பகுதியே ஏடு தேடுதற்கும் தொகுப்பதற்கும் பதிப்பிப்பதற்கும் ஏற்ற இடம் என்பதைத் தேர்ந்து, தம் பணியிடத்தைக் கும்பகோணத்திற்கு மாற்றிக் கொண்டார். கும்பகோணத்தில் சில ஆண்டுகள் வழக்கறிஞராகத் தொழிலாற்றினார். இத்தொழிலில் பெற்ற வருவாய் அனைத்தையும் தமிழ் நூல்களைப் பதிப்பிப்பதற்கே பயன்படுத்தினார்.

புதுக்கோட்டை அரசின் அமைச்சராக விளங்கிய சேசையர் என்பவரின் உதவியால் புதுக்கோட்டை அரசின் நீதிபதியாக நான்காண்டுகள் பணியாற்றினார். 1890இல் அப் பொறுப்பினின்றும் விலகினார்.

அதன் பின்னர், சென்னைப் பல்கலைக்கழகத்தின் பாடத் திட்டக் குழு உறுப்பினராகவும், தேர்வுக்குழுத் தலைவராகவும் விளங்கினார். பல்வேறு மொழி ஆய்வு நிறுவனங்களில் உறுப்பினராக விளங்கிய இவரது பணிகளைப் பாராட்டிய இந்திய அரசு 1895இல் இவருக்கு ‘இராவ்பகதூர்’ என்ற பட்டம் வழங்கிச் சிறப்பித்தது.

**சமய மாற்றம்**

சி.வை. தாமோதரம் பிள்ளை வாழ்ந்த காலத்தில் கிறித்தவர்களுக்கே மேலை நாட்டு ஆங்கிலக் கல்வி கற்பிக்கப் பெற்ற நிலை இருந்து வந்தது. அதனால் தாமும் கிறித்தவராக மதம் மாறி, மேலைக் கல்வியைக் கற்றார். சைவராகப் பிறந்த சி.வை. தாமோதரம்

*பிள்ளை கல்விக்காகக் கிறித்தவ சமயத்திற்கு மாறினார். ஆயினும் சைவ சமயக் காவலரான ஆறுமுக நாவலரின் தொடர்பு ஏற்பட்டவுடன் தாமோதரம் பிள்ளை கிறித்தவ சமயத்திலிருந்து சைவ சமயத்துக்கே மாறி, இறுதி வரையிலும் அச்சமயத்தையே மேற்கொண்டு ஒழுகினார். இந்நிகழ்ச்சி குறித்து ஆ.வேலுப்பிள்ளை கூறுவது இவண் அரண் சேர்க்கும்.*

> யாழ்ப்பாணத்திலே மேலைநாட்டுக் கல்வி பரவியதே இங்கே சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும். மேலை நாட்டுக் கல்வி பயின்றோருட் பலர் மேலை நாட்டு நாகரிகத்திலும் பயிற்சிப் பண்பிலும் மோகங் கொண்ட போதும், ஒருசிலர் தமிழர் பண்டைச் சிறப்பை அறிந்து கொள்வதிற் பேரூக்கங் காட்டினர். மேலை நாட்டுக் கல்வி அக்காலத்திலே கிறித்தவர் களுக்கு மட்டுமே அளிக்கப்பட்டு வந்தது. தாமோதரம் பிள்ளை, சி.எல்.டபிள்யூ. கிங்க்ஸ்பரி (C.L.W. Kingsbury) என்ற பெயரில் கிறித்தவராக இருந்து பின்பு ஆறுமுக நாவலர் செல்வாக்கால், சைவராக மாறியவரே. கிறித்தவராக இருந்து மேலை நாட்டுக் கல்வி பயின்ற தாமோதரம் பிள்ளை சைவராக மாறித் தமிழ்நூற் பதிப்புக்கும் வழி காட்டினார். ... மேலை நாட்டுப் பண்டை யிலக்கியங்களிற் பெற்ற பயிற்சியும், கண்ட சுவையும் தமிழ்ப் பண்டையிலக்கியங்களைத் தேடும் முயற்சிக்கு அவரை இட்டுச் சென்றிருக்க வேண்டும் [26]

*பின்னாளில் தம் மகன் சி.தா. அழகு சுந்தரம் கிறித்தவ சமயத்துக்கு மாறிய பொழுது அவரை இவர் ஒதுக்கிவைக்கு மளவுக்குச் சைவத்தின்மேல் இவருக்குப் பிடிப்பு இருந்தது.*

## இல்லறம்

*சி.வை. தாமோதரம் பிள்ளை இளவயதினராக இருந்த போதே தம் தந்தையாரை இழந்தார். தம் தம்பியர் அறுவரையும் காத்து, அவர்களுக்குக் கல்வி கற்பித்தும் தகுந்த பணியில் அவர்களை அமர்த்தியும், அவர்களுக்குத் திருமணம் செய்வித்தும் தம் கடமைகளைத் தந்தைக்குப் பதிலாகத் தாமே அவர்களுக்குத் தந்தையாகவே இருந்து செய்தார்.*

*பெரிய குடும்பத்தைக் காக்க வேண்டிய பொறுப்பும் கடமையும் தமக்கு இருப்பதை உணர்ந்த தாமோதரம் பிள்ளை உழைத்து உயர் பதவிகளையும் அடைந்து வந்தார். இதைக் கண்ட*

அவர்தம் உற்றாரும் உறவினரும் அவரைத் திருமணம் செய்து கொள்ளக் கேட்டனர். இல்லறமே நல்லறம் என்பதை உணர்ந்த சி.வை. தாமோதரம் பிள்ளை, தெல்லியம்பதி காலிங்கராயர் வழிவந்த வள்ளியம்மையை மணம் செய்து கொண்டார். அவர் இரு குழந்தைகளைப் பெற்றுத் திடீரென நோய்வாய்ப்பட்டு இயற்கை எய்தினார்.

எனவே அவர்தம் உடன்பிறந்தாராகிய நாகமுத்தம்மாளை 1860ஆம் ஆண்டு சி.வை. தாமோதரம் பிள்ளை மணம் செய்து கொண்டார். இவர்கள் இருவருக்கும் அறுவர் மக்களாய்ப் பிறந்தனர். கனகரத்தினம், அமிர்தலிங்கம், பொன்னம்மாள், சோம சுந்தரம், அழகுசுந்தரம், சிவபாக்கியம் ஆகியோராவர். இவர்களில் நால்வர் ஆண் மக்கள், இருவர் பெண் மக்களாவர்.

சி.வை. தாமோதரம் பிள்ளையின் இரண்டாவது மனைவியும் 1882ஆம் ஆண்டு இறந்தார். முதல் மனைவி இறந்த சிறிது காலத்திலேயே முதல் மனைவியின் குழந்தைகள் இருவரும் இறந்தனர். இந்நிலையில் குடும்பச் சூழல் கருதி மூன்றாவதாக ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார். இவர் மூலம் சிங்காரவேல், வெற்றிவேல் என்ற மக்கள் இருவர் பிறந்தனர்.

**பண்பு நலன்கள்**

பரிதிமாற் கலைஞர் இவரின் பண்பு நலன்கள் குறித்துப் பின்வருமாறு கூறுகின்றார் :

> இவரால் (பிள்ளையவர்களால்) ஆதரிக்கப் பட்டோரும் இவர்க்கு நண்பராய் நண்ணியோரும் பலதிறத்தினர். தென்னாடெங்கும் இவரை யறியாதார் எவருமில்லை. இவர் உண்மை தோன்ற வாதஞ் செய்வுழித் தமது நண்பர்களுக்காகச் சார்ந்து பேசியும், பிறருக்காக விலகிப் பேசியும் ஒழுகுமியல்புடைய சில போலி மாக்கள் போலாது, எப்பொழுதும் நடுவுநிலைமை குன்றாதவாறு நடந்து வந்த நற்றமிழாளர். தவறுநர் நண்பரேயாயினும் நொதுமலரேயாயினும், அவரை நல்லறிவூட்டித் தெருட்டுவார் இவர் [27]

**தமிழ்ப் பணிகள்**

சி.வை. தாமோதரம் பிள்ளை தம் வாழ்நாள் முழுவதும் தமிழ் இலக்கணங்களையும் இலக்கியங்களையும் பயின்றும் ஆய்ந்தும் இருந்திருக்கிறார். வாழ்நாள் முழுவதும் தமிழைக் கற்றாலும் அதற்காக வேறு எந்தப் பட்டத்தையும் அவர் விரும்பவில்லை. இதனை அவர் பதிப்பித்த தொல்காப்பியப் பொருளதிகாரப் பதிப்புரையில்,

> பண்டிதர் கவிராஜ பண்டிதர் மகாவித்துவான் புலவரென் றின்னன பெரும்பட்டச் சுமையைத் தலைமேலேற்றிக் கொள்ளாது இன்னும் பலகாலந் தமிழ் படித்தற் குரிமைபூண்டு நிற்கும் என்போலியரே. . . . [28]

என்று அவரே கூறுவதன் மூலம் அறிந்துகொள்ளமுடிகிறது.

இவர் பல்வேறு பணிநிலைகளில் இருந்த காலத்திலும் தமிழ்ப்பணி ஆற்றுவதிலேயே இவர் உள்ளம் ஈடுபட்டிருந்தது.

ஆசிரியர், நூலாசிரியர், பத்திராதிபர், பதிப்பாசிரியர், பாடசாலை நிறுவுநர், உரைநடை வல்லார், இலக்கிய வரலாற்றாசிரியர் ஆகிய நிலைகளில் இவர் தமிழுக்கு ஆற்றிய பணிகள் பன்முகப்பட்டன.

**நூலாசிரியர்**

கட்டளைக் கலித்துறை (இலக்கண நூல்), வசன சூளாமணி அல்லது திவிட்ட குமாரன் கதை (உரைநடை-1898), சைவ மகத்துவ போதம் (செய்யுளும் உரைநடையும்), நட்சத்திரமாலை, ஆறாம் வாசகப் புத்தகம், ஏழாம் வாசகப் புத்தகம், ஆதியாகம கீர்த்தனம், விவிலிய விரோதம் (1867), காந்த மலர் அல்லது கற்பின் மாட்சி (புதினம்) ஆகிய நூல்களை இவர் எழுதி ஒரு நூலாசிரியராக விளங்குகிறார்.

இவரது உரைநடை பொருளுக்கேற்ப இறுக்கமானதாகவோ எளிமையானதாகவோ அமைந்தது.

**பாடசாலை நிறுவுதல்**

ஏழாலையில் 1878இல் சைவப் பிரகாச வித்தியாசாலையை நிறுவினார். முருகேச பண்டிதர் என்பவர் தலைமை ஆசிரியராகப் பணியாற்றினார். குமாரசுவாமிப் புலவர் ஆசிரியராக இருந்தார்.

இப்பாடசாலை[29]யில் தொல்காப்பியம், நன்னூல், முல்லை அந்தாதி, கம்பரந்தாதி, தணிகைப் புராணம், கந்தபுராணம், இரகுவம்சம் முதலான நூல்கள் கற்பிக்கப்பட்டன. இப்பாடசாலை 1898இல் மூடப்பட்டது.

**இலக்கிய வரலாற்றாசிரியர்**

'வீரசோழியம்' என்ற நூலின் 'பதிப்புரை'யில் தமிழ் இலக்கிய வரலாற்றை,

1. அபோத காலம்[30] (வாய்மொழி இலக்கியக் காலம்)
2. அட்சர காலம் (ஆதி இலக்கியக் காலம்)
3. (முன்) இலக்கண காலம்

4. சமுதாய காலம் (முச்சங்க காலம்)

5. அநாதர காலம் (புத்தர் காலம்)

6. சமண காலம்

7. இதிகாச காலம்

8. ஆதீன காலம்

என்று எட்டு வகையாகப் பிரிக்கின்றார். பிற்காலத்தில் தமிழ் இலக்கிய வரலாற்றின் காலத்தைப் பிரிப்பதற்கு இவரது இப்பிரிவு ஒரு முன்னோடி முயற்சியாகும் என்பதில் தவறில்லை.

**பதிப்பாசிரியர்**

சி.வை. தாமோதரம் பிள்ளை பதிப்பித்த நூல்களை இலக்கியம், இலக்கணம் ஆகிய இரு பிரிவுகளின்கீழ் அடக்கலாம்.

நீதிநெறி விளக்கம் (உரைப் பதிப்பு) என்ற இந்நூலைத் தம் இருபதாம் அகவையில் முதன் முதலில் 1852இல் பதிப்பித்தார். கச்சியப்பரின் தணிகைப் புராணம் (1883), கலித்தொகை நச்சினார்க்கினியருரை (1887), சூளாமணி மூலம் மட்டும் (1889), அகநானூறு மணிமிடை பவளம் (1897) (பதிப்பு முயற்சி மேற் கொள்ளப்பட்டது. அதாவது ஓலைச்சுவடிகளைப் பரிசோதித்துக் கையெழுத்துப்படியைத் தயார் செய்தார். எனினும் இந்நூல் முற்றுப்பெறவில்லையாதலால் அதனைப் பதிப்பிக்கவில்லை) ஆகிய ஐந்து இலக்கிய நூல்களைப் பதிப்பித்துள்ளார்.

தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனாவரையருரை (1868), வீரசோழியம் மூலமும் பெருந்தேவனார் உரையும் (1881), இறையனாரகப்பொருள் நக்கீரருரை (1883), தொல்காப்பியம் பொருளதிகாரம் நச்சினார்க்கினியர், பேராசிரியர் உரை 3 பகுதிகள் (1885), இலக்கண விளக்கம் (1889), தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியருரை (1891), தொல்காப்பியம் சொல்லதிகாரம் நச்சினார்க்கினியருரை (1892) ஆகிய ஏழு இலக்கண நூல்களைப் பதிப்பித்துள்ளார்.

ஏட்டில் இருக்கும் பழந்தமிழ் இலக்கண இலக்கிய நூல்கள் இறந்துபடுதல் கூடா என்ற வேட்கை ஒன்றே சி.வை. தாமோதரம் பிள்ளையைப் பதிப்புப்பணியில் ஈடுபடச் செய்தது. பனைஓலை ஏட்டிலே இராமபாணத்துக்கும் கறையானுக்கும் இரையாகி அழியும் நிலையிலிருந்த ஏடுகளைத் தொகுத்து ஆராய்ந்து அச்சிற் பதிப்பித்து வெளியிடும் முயற்சியில் தீவிரமாக ஈடுபட்ட முதல்வராக ஆறுமுக

*நாவலர் விளங்குகிறார். அவருக்குப் பின்னர் அவருடைய வாழ்த்தோடு பதிப்பு முயற்சிகளில் சி.வை. தாமோதரம் பிள்ளை ஈடுபட்டார். இவருக்குப் பின்னர்ப் பல நூல்களைப் பதிப்பித்த உ.வே. சாமிநாதையருக்குப் பதிப்புத்துறையில் இவர் முன்னோடியாகவும் ஊக்கமூட்டுபவராகவும் அமைந்தார்.*

*சி.வை. தாமோதரம் பிள்ளை பதிப்பித்த 'கலித்தொகை'ப் பதிப்புரையில்,*

> பழைய சுவடிகள் யாவும் கிலமாய் ஒன்றொன்றாய் அழிந்து போகின்றன. புது ஏடுகள் சேர்த்து அவற்றை எழுதி வைப்பாரும் இலர். துரைத்தனத்தாருக்கு அதன்மேல் இலட்சியமில்லை. சரஸ்வதியைத் தம்பால் வசிக்கப்பெற்ற வித்வான்களை அவள் மாமி எட்டியும் பார்க்கிறாளில்லை. திருவுடையீர்! நும் கருணை இந்நாள் தவறினால் பின்பு தவம் புரிந்தாலும் ஒரு தரம் அழிந்த தமிழ் நூல்களை மீட்டல் அரிது. யானை வாய்ப்பட்ட விளம்பழத்தைப் பின் இலண்டத்துள் எடுத்துமென்? ஓடன்றோ கிட்டுவதே? காலத்தின் வாய்ப்பட்ட ஏடுகளைப் பின் தேடி எடுப்பினும் கம்பையும் நாராசமும்தான் மீறும். அரைக் காசுக்கு அழிந்த கற்பு ஆயிரம் பொன் கொடுத்தாலும் வாராது. சங்க மரீஇய நூல்களுள் சில இப்போது தானும் கிடைப்பது சமுசயம். முப்பால் அப்பாலாய்விட்டது. என் காலத்தில் யான் பார்க்கப் பெற்ற ஐங்குறுநூறு இப்பொழுது தேசங்கள் தோறும் தேடியும் அகப்பட்டிலது, எத்தனையோ திவ்ய மதுர கிரந்தங்கள் காலாந்தரத்தில் ஒன்றன் பின் ஒன்றாய் அழிகின்றன. சீமான்களே! இவ்வாறு இறந்தொழியும் நூல்களில் உங்களுக்குச் சற்றாவது கிருபை பிறக்கவில்லையா! ஆச்சரியம்! ஆச்சரியம்! அயலான் அழியக் காண்கினும் மனம் தளம்புகின்றதே. தமிழ் மாது நும் தாயல்லவா! இவள் அழிய நமக்கென்ன என்று வாளா இருக்கின்றீர்களா? [31]

*இவ்வாறு அக்கால ஏடுகளின் நிலை இருந்ததைக் கலித்தொகைப் பதிப்புரையில் கூறிச் செல்கின்றார். அதேபோன்று ச. வையாபுரிப் பிள்ளை இவர் பதிப்புத்துறையில் காட்டிய ஈடுபாட்டை,*

> **ஸ்ரீ ஆறுமுக நாவலர் சைவ சமய நூல்கள் குறள் பாரதம் வெளியிடுவதோடு அமைந்து விட்டார்கள். வித்துவான் தாண்டவராய முதலியார் திவாகரம் முதலிய**

> நூல்களையும் பள்ளி மாணவர்களுக்கு வேண்டும் வசன நூல்களையும் அச்சியற்றுவதில் ஒடுங்கி விட்டார்கள். மழவை மகாலிங்கையர் தொல்காப்பியம் எழுத்ததிகாரத்தை நச்சினார்க்கினியர் உரையோடு பதிப்பித்து வேறு சில நூல்களையும் வெளியிட்டு அத்துடன் நின்றுவிட்டார்கள். களத்தூர் வேதகிரி முதலியார் நாலடி நைடதம் முதலிய நூல்களை வெளியிட்டு அவ்வளவில் திருப்தியுற்றார்கள். திருத்தணிகை விசாகப் பெருமாளையர் முதலியோர் குறளுக்குத் தெளி பொருள், பிரபுலிங்க லீலை, சூடாமணி நிகண்டு முதலியவற்றைப் பிரசுரித்து அவ்வளவில் தங்கள் முயற்சியைச் சுருக்கிக் கொண்டார்கள். திருவேங்கட முதலியார், இராச கோபாலப்பிள்ளை முதலானவர்கள் இராமாயணம் வெளியிடுவதிலும் நாலடி முதலியன பதிப்பித்தலிலும் ஈடுபட்டு நின்றனர். ஸ்ரீ உ.வே. சாமிநாத ஐயரவர்கள் அப்பொழுதுதான் சீவகசிந்தாமணிப் பதிப்பு முயற்சியில் போராடிக் கொண்டிருந்தார்கள். ஆகவே நமது பிள்ளையவர்கள் தன்னந்தனியாய்ப் பண்டைத் தமிழ்ச் செல்வப் புதையலைத் தமிழ் மக்களுக்கு அகழ்ந்தெடுத்து உதவும் பெருமுயற்சியை மேற் கொண்டனர் [32]

*என்று கூறுகின்றார். இதில் அக்காலத்தில் யார் யாரெல்லாம் எந்தெந்த நூல்களைப் பதிப்பித்தனர் என்பதையும், எந்தெந்த முயற்சிகளில் ஈடுபட்டனர் என்பதையும், சி.வை. தாமோதரம் பிள்ளைக்குப் பதிப்புத்துறையில் எந்த அளவுக்கு ஈடுபாடு ஏற்பட்டது என்பதையும் கூறுவதைக் காணமுடிகின்றது. ஒரு சிறிய பதிப்பு வரலாற்றையே ச. வையாபுரிப்பிள்ளை இதில் கூறிச் செல்கின்றார்.*

*தாம் பதிப்பிப்பதற்காக எடுத்துக் கொண்ட நூல் தொடர்பாக எங்கெங்கெல்லாம் சுவடிகள் இருக்கின்றன என்பதை முதலில் தேடிக் கண்டுபிடித்துள்ளார். இவ்வாறு இவர் சுவடிகள் சேகரித்தல் தொடர்பாகத் தொல்காப்பியப் பொருளதிகாரப் பதிப்புரையில்,*

> இந்நூலைப் பரிசோதித்து அச்சிட முயன்றபின் தமிழ் நாடுகளில் ஆங்காங்குத் தேடிப் பல பிரதிகள் சம்பாதிப்பது பெரும் பிரயாசையும் நெடுங்கால வேலையுமாயிருந்தது. இது தமிழ் நாட்டுக்கு ஓர் பேருபகாரமான முயற்சியென்று கண்டு ஸ்ரீ கைலாச பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து மகா

> சன்னிதானமும், தம்மை அடைந்தோர்க்குப் பெருங் கருணைத் திருவுருவமாகிய ஸ்ரீ ல ஸ்ரீ சுப்பிரமணிய மூர்த்திகளும் சைவ சமயாபிமானியும் செந்தமிழ்ப் பரிபாலனருமாகிய ஸ்ரீமத் யாழ்ப்பாணம் ந.க. சதாசிவப் பிள்ளையவர்களும் எனது அதிசிஷ்டராகிய திருநெல்வேலித் தாசில்தார் ஸ்ரீ கணித சிங்கம் வை. சின்னத்தம்பியா பிள்ளையவர்களும் பழைய ஏட்டுப் பிரதிகளை அழைப்பித்துத் தந்தனர். இவர்கள் செய்த நன்றியை எஞ்ஞான்றும் மறக்கற் பாலனல்லேன். இப்பிரதிகளோடு ஸ்ரீ திருத்தணிகைச் சரவணப் பெருமாள் ஐயர் பௌத்திரர் துரைசாமி ஐயர் பிரதி யொன்றும் புரசபாக்கம் ஸ்ரீ சாமுவேற் பண்டிதரவர்கள் தமது சொந்தக் கையினாலே எழுதி வைத்திருந்த பிரதியொன்றும் அடியேன் வசமிருந்த தொல்காப்பியம் வரதப்ப முதலியார் பிரதியொன்றும் மதுரைப் பிரதி யொன்றில் சேர்த்து, இவற்றுட் திருநெல்வேலிப் பிரதி, மதுரைப் பிரதி இரண்டு, தஞ்சாவூர்ப் பிரதி மூன்று, சென்னப்பட்டணப் பிரதி மூன்று, யாழ்ப்பாணப் பிரதி இரண்டாகப் பன்னிரண்டு பிரதி சேர்த்து என் விருப்பத்தை ஒருவாறு நிறை வேற்றினேன்

*என்று கூறுகின்றார்.*

> . . . . தூக்கினாலன்றோ தெரியும் தலைச்சுமை. பரிசோதனாசிரியர் படுங்கஷ்டமும் ஓர் அரிய பழைய நூலைச் சுத்த மனச்சாட்சியோடு பரிசோதித்து அச்சிட்டார்க்கன்றி விளங்காது. எனக்கு வே. சாமிநாதையரும் அவருக்கு நானுமே சாட்சி

*என்ற கூற்றிலிருந்து சி.வை. தா.வின் பதிப்பு முயற்சியைத் தெரிந்து கொள்ள முடிகிறது. அடுத்து, சுவடியைப் பதிப்பிக்கின்ற பொழுது பல்வேறு சிக்கல்கள், இடையூறுகள் நேர்ந்தனவற்றையும் அந்தந்த நூலின் 'பதிப்புரை'யில் சி.வை.தா. சுட்டிச் செல்வதைக் காண முடிகின்றது. அந்த வகையில்,*

> தேடுவாரும் பரிபாலிப்பாருமின்றி ஒன்றொன்றாய் அழிந்து போகும் அருமையான பழைய தமிழ் நூல்களைப் பாதுகாத்தற் பொருட்டு அடியேன் ஏட்டுப் பிரதிகள் தேடிப் பரிசோதித்து அச்சிடுவதிற் புத்தகங்கள் விலை போகாமல் நேரிடும் கஷ்டம் . . . . . பணக்குறைவினால் எனது முயற்சி மிகத் தாமசப்பட்டு நடைபெறுகின்றது.

> லோகோபகாரமாய் யான் கையிட்ட இத்தொழிலைத் தற்காலம் சர்வகலா சோதனைச் சங்கத்தில் எனக்கு வரும் பரீட்சா நிவேதனம் ஒன்றைக் கொண்டே நடத்தி வருகின்றேன். அது பிரதிகள் தேடி அப்பப்போ யான் செல்லும் பிரயாணங்களுக்கே முன்னோ பின்னோ என்று கட்டி வருகிறது

*என்று சி.வை.தா. கூறும் கூற்றில் அவர் எந்த அளவுக்கு ஒரு நூலைப் பதிப்பிப்பதற்காகத் தொல்லைப்பட்டார் என்பதை அறிய முடிகிறது.*

## பதிப்பித்த முறை

*உ.வே.சா.வைப் போன்று குரு-மாணவர் முறையிலான கல்வியைப் பெறாத சி.வை.தா. சுவடிகளிலிருந்து அச்சில் பதிப்பிக்கும் நுட்பங்களை ஆறுமுக நாவலரிடமிருந்துதான் கற்றுக் கொள்கிறார். சி.வை.தா. பதிப்பித்த முறை குறித்து,*

> ஏட்டுச் சுவடிகளில் ஒன்றிலாவது காணப்படாத மாற்றம் எதுவும் தாம் வெளியிடும் பதிப்புகளில் இடம் பெறக்கூடாது என்பதில் தாமோதரனார் கண்ணுங் கருத்துமாக இருந்தார். 'வீரசோழியம்' என்னும் நூலில் தமக்கு விளங்காத பகுதிகள் வந்தவிடத்தும், நிச்சயமாகப் பிழை என்று துணிந்தவிடத்துங்கூட இவர் திருத்தம் அல்லது மாற்றம் செய்யவில்லை. 'சூளாமணி'ப் பதிப்பின் போது தம்முடைய இலக்கண இலக்கிய அறிவின் காரணமாகவும், சமண மதத்தினரின் உதவியைக் கொண்டும், ஏற்புடைய சில மாற்றங்களைச் செய்திருப்பதாகவும், 'கலித் தொகை' யில் சிற்சில இடங்களில் நல்ல பாடம் என்று கண்டவிடத்துச் சில திருத்தங்களைச் செய்திருப்பதாகவும் இவரே வெளிப்படையாகத் தெரிவித் துள்ளார் [33]

*என்று மா.சு. சம்பந்தன் கூறுகின்றார். இவர் பதிப்பித்த நூல்களிலிருந்து காணப்படும் சில பொதுத் தன்மைகள் :*

1. மூலங்களை ஏட்டுச் சுவடிகளைக் கொண்டு பரிசோதித்து முதல் முறை அச்சில் பதிப்பித்து வெளியிட்டவர்.

2. ஏட்டுச் சுவடிகளில் ஒன்றிலாவது காணப்படாத மாற்றம் எதுவும் தாம் வெளியிடும் பதிப்புகளில் இடம்பெறக் கூடாது என்பதில் மிகவும் கவனமாக இருந்தார்.

3. இவரது தமிழ் நடை சற்றுக் கடினமான பண்டித நடையாக இருந்தது.

4. மூலபாடம் பெரிய எழுத்திலும், உரை இதனின் வேறான வடிவத்திலும் அமைந்தன.

5. நூற்பாவின் கருத்து, விளக்கம், பொருள், சான்றுகள் ஆகியன தனித்தனிப் பத்திகளில் அமைந்து தெளிவைத் தந்தன.

6. சொற்களிடையே இடைவெளி விட்டும், ஓரளவு சந்திகள் பிரித்தும், நிறுத்தற் குறியீடுகள் அமைந்தும் விளங்கின.

7. இலக்கண விளக்கப் பதிப்புரை மிகவும் திட்பமும் தருக்கவாதமும் மிக்கதாயுள்ளது.

8. கலித்தொகைப் பதிப்புரை நாவலரின் கண்டன நடையை ஒத்ததாக உள்ளது.

9. இவர்தம் பதிப்புரைகளில் நூற்பதிப்பு அனுபவங்களை எடுத்துரைக்கும்போது வாசகருடன் நேரே உரையாடுவது போன்ற எளிய நடையைப் பயன்படுத்தியுள்ளார்.

10. தாம் பதிப்பித்த நூல்களில் பிழைகள் கண்டு பிடிப்போருக்கு நூல் பரிசளிப்பதாக அறிவித்தார்.

*தாம் பதிப்பித்த ஒவ்வொரு நூலின் பதிப்புரையிலும் முதலில் தம் ஆசிரியர் சுன்னாகம் முத்துக்குமாரரை உளமாறத் துதித்துப் பாக்கள் எழுதி அதன் பின்னரே பதிப்புரையைத் தொடங்குகின்றார்.*

*சி.வை.தா. தம் பதிப்பில் ஏற்படும் பிழைகளை யாராவது கண்டுபிடித்துச் சொன்னால் அப்பிழையை அடுத்த பதிப்பில் திருத்திக் கொள்வதோடு அவரது பெயரையும் வெளிப்படுத்துவேன் என்று கூறினார். அதற்கேற்ப, தி.த. கனகசுந்தரம் என்பார் இறையனார் அகப்பொருளில் உள்ள பிழைகளைச் சுட்டிக் காட்டினார். 1899இல் வெளியிடப்பட்ட இறையனார் அகப் பொருள் இரண்டாம் பதிப்பில் அவரது பெயரை மிகுந்த மரியாதையோடு குறிப்பிட்டு அவருக்கு நன்றியும் தெரிவிக்கிறார்.*

*உ.வே.சா. மறுபதிப்பில் பிறர் கண்டனங்களால் திருத்தங் களைச் செய்து கொண்டாலும் அவர்களின் பெயரைக் கூடக் குறிப்பிடுவதில்லை என்று ச. வையாபுரிப்பிள்ளை கூறுவதையும் இவண் எண்ணிப் பார்க்க வேண்டும்.*

மூலபாடத்தைப் பொறுத்த அளவில் "உ.வே.சா.வைவிடச் சி.வை.தா.விடமே மூலபாட ஆய்வுத்திறம் அதிகமாகக் காணப்படுவ தாக"க் க. கைலாசபதியும் குறிப்பிட்டுள்ளார்.[34]

இவரால் பதிப்பிக்கப்பட்ட நூல்கள் ஒவ்வொன்றையும் தனித்தனியாக எடுத்து இப்பகுதி ஆராய்கிறது.

**நீதிநெறி விளக்கம்** : குமர குருபரர் இயற்றிய இந்நூலை சி.வை.தா. தம் இருபதாம் அகவையில் முதன் முதல் 1852இல் தாமே எழுதிய எளிய உரையுடன் பதிப்பித்தார். இதில் சி.வை.தா.வின் கிறித்தவப் பெயரான சி.எல்.டபிள்யூ. கிங்ஸ்பெரி என்ற பெயரே காணப்படுகிறது. இப்பதிப்பு, வட்டக்கோட்டை முத்துக்குமாரர் புதல்வர் சிதம்பரப் பிள்ளை, குமாரசுவாமி முதலியார் புதல்வர் கதிரைவேற்பிள்ளை ஆகியோரால் பார்வையிடப்பட்டது.

**தொல்காப்பியச் சொல்லதிகாரம்** : ஆறுமுக நாவலர் ஆராய்ந்து கொடுத்த தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனாவரையம் நாவலரின் வழிகாட்டலுடன் அவரது மேற்பார்வையில் 1868இல் சி.வை.தா. பதிப்பித்தார். இதனை,

> இது நாவலரவர்களால் பரிசோதிக்கப்பட்டதாயினும், பிள்ளையவர்கள் தமக்குச் சாவகாசம் நேரும் போதெல்லாம் கூடவிருந்து தம்மாலியன்ற உதவி யாவும் புரிந்தே சில வேலையை நிறைவேற்றின ரென்பதற்குப் போதிய சான்றுளது [35]

என்ற கூற்றின்மூலம் அறிந்து கொள்ள முடிகிறது. இந்நூலில் பதிப்புரை, முன்னுரை ஆகியன இல்லை.

இப்பதிப்பில் நூற்பா பெரிய எழுத்திலும், உரை சற்றுச் சிறிய எழுத்திலும் பதிப்பிக்கப்பட்டுள்ளன. நூற்பா, சந்திப் பிரிப்பின்றி அமைக்கப்பட்டுள்ளது. ஆனால் சீருக்குச் சீர் இடைவெளி விடப்பட்டுள்ளது. பதவுரை முன்னும் தெளிவுரை பின்னும் பத்தி பிரித்து அமைக்கப்பட்டுள்ளன. நூற்பாவைத் தொடங்கும் பொழுது அதிகாரத் தொடர் எண்ணும் உரை முடிவில் இயலின் வரிசை எண்ணும் இடப்பட்டுள்ளன. அடிக்குறிப்புகள் சில இடங்களில் தரப்பட்டுள்ளன.

நூலின் இறுதியில் நூற்பா முதற்குறிப்பகராதி, இயலடைவு அமைந்துள்ளன. பொருளடக்கம் அக்கால வழக்கப்படி 'சூசி பத்திரம்' என்று உள்ளது. எண்கள் தமிழிலேயே தரப்பட்டுள்ளன.

இடையியல் என்பது இடைச்சொல்லியல் எனவும், உரியியல் என்பது உரிச்சொல்லியல் எனவும் பதிக்கப்பட்டுள்ளன. பாடவேறுபாடுகள் போன்றவை கொடுக்கப்படவில்லை.

**வீரசோழியம்** : புத்தமித்திரனார் இயற்றிய வீரசோழியத்தைப் பெருந்தேவனார் உரையுடன் 1881இல் பதிப்பித்தார். பதிப்புரை 30 பக்கத்தில் உள்ளது. அதிகாராதி, பொருளடக்கம், செய்யுளகராதி போன்றவை உள்ளன. வீரசோழியம் மூலமும் பதவுரையும் தனித்தனியே மூலம் பெரிய எழுத்திலும் பதவுரை சற்றுச் சிறிய எழுத்திலும் அச்சிடப்பட்டுள்ளன. நூல் முழுவதும் 55 அடிக்குறிப்புகள் உள்ளன. இவை சொற்களுக்குப் பொருள் விளக்கம் தருவனவாக அமைகின்றன. இந்த நூலில்தான் விரிவான பதிப்புரையைத் தந்துள்ளார். இதற்கு முன்னர் எவரும் இவ்வாறான பதிப்புரையைத் தந்ததில்லை. இதில் இந்நூலைப் பதிப்பிப்பதற்கான காரணம், நூலின் காலம், அதனைப் புலமையாளர்கள் எதிர்கொண்ட விதம், பயில்வு மரபு, சுவடிகள் எங்கிருந்து பெறப்பட்டன, பாடவேறுபாடுகளைப் பற்றிய தரவுகள் முதலான பல்வேறு செய்திகள் காணப்படுகின்றன.

**தணிகைப் புராணம்** : கச்சியப்ப முனிவர் இயற்றிய தணிகைப் புராணத்தை (மூலம் மட்டும்) 1883இல் பதிப்பித்தார். பதிப்புரை இடம்பெறவில்லை. ஆனால் முதல் பக்கத்தில் எங்கு, யாரால், எந்த ஆண்டு பதிப்பிக்கப்பட்டது என்பன போன்ற விவரங்கள் தரப்பட்டுள்ளன. நூலாசிரியராகிய கச்சியப்ப முனிவர் வரலாறு நான்கு பக்கங்களில் உள்ளது. இரு பக்கங்களில் பிழை திருத்தம் உள்ளது. ஒரு செய்யுளுக்கும் அடுத்த செய்யுளுக்கும் இடையில் இடைவெளிவிட்டு, படலத் தலைப்பு பெரிய எழுத்திலும் செய்யுள் சிறிய எழுத்திலும் அமைந்துள்ளன.

**இறையனாரகப்பொருள்** : நக்கீரர் இயற்றிய உரையுடன் இறையனாரகப் பொருளை 1888ஆம் ஆண்டில் பதிப்பித்தார். இதில் பதிப்புரை, முன்னுரை ஆகிய எதுவும் இடம்பெறவில்லை. நூல் தொடக்கத்திலேயே பிழை திருத்தம் உள்ளது. நூற்பாக்கள் சற்றுப் பெரிய எழுத்திலும் உரை சற்றுச் சிறிய எழுத்திலும் பத்தி பிரிப்புகளுடன் அச்சிடப்பட்டுள்ளன. இந்நூலைப் பார்த்தவுடன் நூற்பா எது, உரை எது, உதாரணச் செய்யுள் எது, மேற்கோள் செய்யுள் எது என்று தனித்தனியே தெரியும் வகையில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. தவிர ஒவ்வொரு பக்கத்தின் மேல் வலப்பகுதியில் 1வது சூத்திரம், 2வது சூத்திரம் என்று சூத்திர எண்ணும் தரப்பட்டுள்ளது.

**தொல்காப்பியப் பொருளதிகாரம்** : நச்சினார்க்கினியர் உரையுடன் மூன்று பகுதிகளாக 1885இல் பதிப்பித்தார். முதல் பகுதியில் அகத்திணையியல், புறத்திணையியல்; இரண்டாம் பகுதியில் களவியல், கற்பியல், பொருளியல், மெய்ப்பாட்டியல், உவமயியல்; மூன்றாம் பகுதியில் செய்யுளியல், மரபியல் ஆகியன உள்ளன.

> முற்பகுதிக்குரிய நச்சினார்க்கினியர் உரையையும், பிற்பகுதிக்குரிய பேராசிரியர் உரையையும் முதன் முதலில் பதிப்பித்து உதவியவர் அறிஞர் சி.வை. தாமோதரம் பிள்ளை அவர்கள் ஆவர். அவர் பதிப்பித்துதவிய ஆண்டு 1885 ஆகும் [36]

என்று கு. சுந்தரமூர்த்தி கூறுவது கொண்டு சி.வை.தா. பதிப்பித்தபோது நச்சினார்க்கினியர் உரை என்று எண்ணியிருந்தாலும் அவர் பதிப்பித்தது முதல் ஐந்து இயல்களுக்கு நச்சினார்க்கினியமும் பின்னான்கு இயல்களுக்குப் பேராசிரியமும் என்பது தெளிவாகின்றது.

நூற்பா ஒருவகை எழுத்திலும் உரை பிறிதொரு வகை எழுத்திலும் அச்சிடப்பட்டுள்ளன. ஒவ்வொரு பக்கத்திலும் இடையிலும் ஒரு வெள்ளைத்தாள் வைத்து இரு பக்கம் நூற்பகுதி இரு பக்கம் வெள்ளைத்தாள் என்று கட்டப்பட்டுள்ளது. இது, நூலைப் படிப்போர் குறிப்புகள் எழுதப் பயன்படும் என்ற நோக்கத்தாலோ அல்லது பக்கங்களைத் திருப்பும்போது விரைவில் கிழியாமல் இருக்கும் நோக்கத்தாலோ அமைக்கப்பட்டிருக்கலாம். இந்நூலில் மட்டுமே இம்முறை கையாளப்பட்டுள்ளது.

பன்னிரண்டு பக்கத்தில் பதிப்புரை உள்ளது. பன்னிரண்டு பக்க அளவில் சூத்திர அகராதி, நான்கு பக்கத்தில் பிழை திருத்தம் ஆகியன உள்ளன.

**கலித்தொகை** : சங்க இலக்கிய வரிசையில் இவர் பதிப்பித்த இந்நூல்தான் பதிப்பு வரலாற்றில் முதலில் வெளிவந்த பதிப்பாகும். 1887இல் நல்லந்துவனாரால் இயற்றப்பட்டதும், சங்க நூல்களில் ஒன்றானதுமான கற்றோர் ஏத்துங் கலித்தொகையை ஏட்டிலிருந்து படியெடுத்துப் பிரதிரூபங்களை ஒப்பிட்டுப் பார்த்துப் பரத்துவாசி நச்சினார்க்கினியர் உரையுடன் சென்னை ஸ்காட்டிஷ் பிரஸ்ஸில் அச்சிட்டார். இந்நூலைப் பதிப்பிக்கும் பொழுது மூலநூலில் உள்ளவாறு அச்சிடாமல், சிற்சில இடங்களில் தம் அறிவுக்குச் சரியென்று தோன்றியவாறு வெளியிட்டதால் இவர் மீது குறைகள் கூறப்பட்டன.

*ஏறத்தாழ 34 பக்கங்களில் 'பதிப்புரை' ஒன்றை எழுதி யுள்ளார். இதில் மூன்று பக்கங்களில் நச்சினார்க்கினியர் குறித்து எழுதியுள்ளார். இக் கலித்தொகைப் பதிப்பில் சி.வை.தா. பதிப்பித்த முறை வருமாறு :*

1. பாட்டுக்கள்தோறும் முதலிலே அவ்வப் பாட்டின் முதற் குறிப்பைச் சொல்லி இது இன்ன துறை என்று கூறிப் பின் பாட்டு வரும். அதனை மாற்றி, முதலில் பாட்டை அச்சிட்டு அதன்கீழ் இது இன்ன கிளவி எனக் கூறும் கருத்துரையை அமைத்துள்ளார்.

2. பாட்டுக்கள் முழுவதும் ஒருங்கே வராது, உரைக்கு ஏற்பத் துண்டு துண்டாகக் கிடந்ததை மாற்றிப் பாட்டுக்களை ஒரே தொடராக வரச்செய்து, அவ்வப்பகுதியை முதலும் ஈறும் காட்டி மீளவும் பகுத்து அப்பகுதியின் உரையைப் பதிப்பித்துள்ளார்.

3. விசேட உரைகள், உரையின் முன் பின் இடை என வருவதை மாற்றி முதலில் பாட்டு, பின் உரை என அமைந்ததன் பின் விசேட உரை வருமாறு அமைத்துள்ளார்.

4. தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம் என நிகழும் பாட்டு உறுப்புகளின் மூலம் ஒன்றிலும் உரை வேறோரிடத்திலும் பிறழ்ந்து கிடந்ததை இரண்டும் ஓரிடத்தாம்படி உரையிடத்தை மாற்றி அமைத்துள்ளார்.

5. தேவைக்கேற்பப் புணர்த்திய இடங்களைப் பட்டியல் போட்டுக் காட்டியுள்ளார்.

**இலக்கண விளக்கம்** *: இந்நூலை 1889இல் இருபது பக்கப் பதிப்புரையுடன் பதிப்பித்துள்ளார். இந்நூலைத் தாம் பதிப்பித்த நோக்கம் குறித்து,*

> இக்காலத் தமிழிலக்கணங் கற்போர் பெரும்பாலும் நன்னூ லொன்றையே கற்றுப் பொருள் யாப்பணி களின் பயிற்சி குன்றிப் போவதால், இலக்கண விளக்கம் ஐந்திலக்கணமுஞ் சேர்ந்திருப்பதனாலும், பேரறிவினர்க்கே புலப்படுந் தகைத்தாய தொல் காப்பியம் போலாகாது சாதாரண மாணவர்களுக்கும் உபயோகமாதற்

> **பாலதாதலானும், அது கற்போர்க்கு எளிதின் அகப்படாது ஏட்டுப் பிரதிகளில் மிக அருமையாக மறைந்து கிடத்தலானும், அதனை அச்சிட்டாற் றமிழ் நாடனைத்திற்கும் பேருபகார மென்று எண்ணினேன்**

*என்று சி.வை.தா. பதிப்புரையில் கூறுவது இவண் குறிக்கத்தகும்.*

**சூளாமணி** *: பதினேழு பக்கப் 'பதிப்புரை'யுடன் இந்நூலை 1889இல் பதிப்பித்தார். கலித்தொகைப் பதிப்புரையில்,*

> **பஞ்ச காவியங்களுட் சிறந்த சூளாமணி, இ∴து யாப்பருங்கலக் காரிகையுரைக் குணசாகர முனிவர் முதலியோராற் றமக்கு மேற்கோளாக எடுத்தாளப்பட்ட மாண்பினையுடையதோர் அரிய பூர்வக் கிரந்தம்**

*என்று சி.வை.தா.வால் பாராட்டப்பட்ட நூல். இதன் முகப்புப் பக்கத்தில்,*

> **இரண்டாவது காவியம், தோலாமொழித்தேவர் இயற்றியருளிய சூளாமணி. இ∴து யாழ்ப்பாணம் சி.வை. தாமோதரம் பிள்ளையால் பல பிரதிகளைக் கொண்டு பரிசோதித்து, இறங்கூனிலிருக்கும் சில தமிழ்ப் பிரபுக்களது காருண்ய திரவியோபகார சகாயத்தினால், சென்னப்பட்டணம் வித்தியாநு பாலன யந்திர சாலையில் பதிப்பிக்கப்பட்டது. விரோதி வருடம் கார்த்திகை மாதம். 1889. இதன் விலை ரூபா.1-50**

*என்று காணப்படுகிறது.*

**தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியம்** *: இந் நூல் மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியருரையோடும் சி.வை.தா.வால் பலநாட்டுப் பிரதிகளைக் கொண்டு பரிசோதித்து 1891இல் வெளியிடப்பட்டது. நான்கு பக்கத்தில் பதிப்புரை உள்ளது.*

**தொல்காப்பியம் சொல்லதிகாரம் நச்சினார்க்கினியம்** *: சென்னை விக்டோரியா ஜூபிலியந்திர சாலையில் 1892இல் இந் நூலைப் பதிப்பித்தார். இதில் பதிப்புரை இல்லை. நன்றி கூறல், விளம்பரம் ஆகியவை உள்ளன.*

### பதிப்பின் சிறப்பு

*சுவடிப் பதிப்பு வரலாற்றில் முதன் முதல் 'பதிப்பாசிரியர்' என்ற சொல்லைச் சி.வை.தா.வே பயன்படுத்தினார் என்பதை அறியமுடிகிறது. ஏடுகளைத் தேடுதல், தொகுத்தல், ஆராய்தல்,*

பதிப்பித்தல் என்ற நிலைகளில் இவர்தம் பதிப்புகள் அமைகின்றன. இவர் பதிப்பித்த சிறப்புக் குறித்துப் பல்வேறு அறிஞர்கள் கூறிச் சென்றுள்ளனர். அவற்றுள் ஒருசில வருமாறு :

> இலக்கண இலக்கியங்களிலே மிக வல்லவரும் சென்னை முதல் ஈழ மீறாகவுள்ள தமிழ்நாட்டு வித்துவான்களில் தமக்கு இணையில்லாதவரு மாகிய தாமோதரம் பிள்ளை

என்று இவரைப்பற்றி ஆறுமுக நாவலர் கூறுகின்றார்.

> சி.வை.தா. அவர்களது சரித்திரம் தமிழ்ச் சரித்திர மாகவே முடிந்திருக்கிறது

என்பார் பண்டிதமணி.

> சென்னப் பட்டணத்தில் சி.வை. தாமோதரம் பிள்ளை என்று ஒரு மகாவித்துவான் இருந்தாரே, கேள்விப் பட்டதுண்டா? அவர் சூளாமணி என்னும் காவியத் துக்கு எழுதிய முகவுரையை யாரைக் கொண் டேனும் படிக்கச் சொல்லியாவது கேட்டதுண்டா?

என்று பாரதியார் தாம் எழுதிய 'சின்னச் சங்கரன் கதை'யில் கூறுகின்றார்.

இவரது பதிப்புப்பணி பரிதிமாற்கலைஞரைக் கவர்ந்தது. சி.வை.தா. 01-01-1901ஆம் ஆண்டு இவ்வுலக வாழ்வை நீத்தபோது,

> காமோதி வண்டர் கடிமலர்த்தேன் கூட்டுதல் போல்
> நாமோது செந்தமிழின் நன்னூல் பலதொகுத்த
> தாமோ தரம்பிள்ளை சால்பெடுத்துச் சாற்றவெவர்
> தாமோ தரமுடையார் தண்டமிழ்ச்செந் நாப்புலவீர்

என்று பாடினார்.

> பிள்ளையவர்கள் பதிப்பித்தவற்றுள் பெரும்பாலன இன்னும் ஏற்றுக்கொள்ளக் கூடியனவாய் இருத்தல் ஒன்றே இவர் புலமைக்குச் சான்று. . . .நூலை ஏட்டுப் பிரதிகளின் போக்கிலே விடாமல் அறிவு துணையாக வரிசைப்படுத்தியும் கோவைப்படுத்தியும் பதிப்பித்த பெருமை பிள்ளையவர்கட்கே உரியது. . . .

என்று அ. சிதம்பரநாதன் செட்டியார் கூறுவார். மாயூரம் வேதநாயகம் பிள்ளை,

நீடிய சீர்பெறு தாமோதர மன்ன, நீள்புவியில்
வாடிய கூழ்கள் மறைமுகங் கண்டென மாண்புற நீ
பாடிய செய்யுளைப் பார்த்தின்ப வாரி படிந்தனன் யான்
கோடிப் புலவர்கள் கூடினும் நின்புகழ் கூறலரிதே

என்று பாடியுள்ளார். இப்பாடலின் இறுதியில் கோடிப் புலவர்கள் கூடினாலும் சி.வை.தா.வின் புகழுக்கு ஈடில்லை என்று கூறுவதைக் காணமுடிகிறது.

## பிள்ளையின் மறைவு

01-01-1901ஆம் ஆண்டு செவ்வாய்க் கிழமை முற்பகல் 9.30 மணிக்கு சி.வை.தா. தம் உடன்பிறந்தாராகிய சி.வை. சின்னப்பாவும், மகனாராகிய அழகுசுந்தரமும், சுற்றத்தாரும் நட்பினரும் சூழ்ந்திருக்க இவ்வுலக வாழ்வை நீத்தார்.

சி.வை.தா.வின் வாழ்வு தமிழ் வாழ்வாகவே இருந்தது. தமிழ்நூற் பதிப்பு வரலாற்றில் இவர் ஆற்றிய பங்களிப்பு காலத்தால் என்றென்றைக்கும் நிலைத்து நிற்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. இவர் மறைவின்போது உ.வே.சா. பாடிய இரங்கற்பா கற்போர் நெஞ்சை உருக்குவதாக அமைந்துள்ளது.

தொல்காப் பியமுதலாந் தொன்னூல் களைப்பதிப்பித்(து)
ஒல்காப் புகழ்மேவி யுய்ந்த பண்பின் – நல்காத
தாமோ தரச்செல்வன் சட்டகநீத் திட்டதுன்பை
யாமோ தரமியம்ப வே



# 3. உ.வே. சாமிநாதையர் (1855 - 1942)

ஒரு காலத்தில், தமிழ்நாட்டில் வாழ்ந்த பெரும் புலவர்கள் கூடச் சங்க நூல்கள் என்று பெயரளவிலேயே தெரிந்து கொண்டிருந்தார்களே தவிர அந் நூல்கள் எவைஎவை என்பது அவர்களுக்குத் தெரியாது. உவே. சாமிநாதையர்கூடத் திருவாவடுதுறை ஆதீனத்தில் எட்டுத்தொகையை ஏட்டுத்தொகை என்றுதான் படித்தார். அதேபோன்று கோவலன், கண்ணகி, மாதவி என்று மூவரைமட்டுமே அறிவார்களே அன்றிச் சிலப்பதிகாரத்தையும், அதிலுள்ள பாத்திரங்களையும் அறிய மாட்டார்கள். மணிமேகலை எந்தச் சமயத்தைச் சார்ந்த நூல் என்பதும் அவர்களுக்குத் தெரியாது.

ஐம்பெருங்காப்பியங்கள் என்றுதாம் தெரியுமே தவிர அக் காப்பியங்கள் என்னென்ன, அவற்றின் கதை என்ன என்பதை யெல்லாம் அறியமாட்டார்கள். அக்காலத்துக் கோயில்களிலும், மடங்களிலும் ஓலைச்சுவடிகள் எல்லாம் முடங்கிக் கிடந்தன. இத்துயர நிலையை நீக்குவதற்கும் தமிழின் உயர்வை உலகுக்கு எடுத்துச் சொல்வதற்கும் தமிழ்த்தாய் திருவுளம் கொண்டு உ.வே.சா. என்னும் தமிழறிஞரை உலகுக்குத் தந்தாள்.

### பிறப்பு

தஞ்சாவூர் மாவட்டத்தில் பாபநாசம் தாலுகாவிலுள்ள உத்தமதானபுரத்துக்கு அருகிலுள்ள சூரியமூலை எனும் ஊரில் வாழ்ந்து வந்த இசையறிஞர் வேங்கடசுப்பையர், சரசுவதி அம்மாள் ஆகியோருக்கு 19-02-1855ஆம் ஆண்டில் உவே.சாமிநாதையர் பிறந்தார். இவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் 'சாமிநாதன்' என்பதாகும். வீட்டில் எல்லோரும் இவரைச் 'சாமா' என்றுதான் அழைப்பர். மூன்றாண்டுகளுக்குப்பின் ஒரு பெண் குழந்தை பிறந்து சில ஆண்டுகள் வாழ்ந்திருந்து இறந்து போயிற்று.

### பெற்ற கல்வி

இவருக்கு ஐந்து வயதானபோது பாட்டனார் இவருக்கு அரிச்சுவடி சொல்லித் தந்தார். அதன் பின்னர் இவரை உத்தமதான புரத்திலுள்ள நாராயண ஐயரிடம் சில மாதங்கள் கல்வி கற்க அனுப்பி வைத்தார். தமிழில் கீழ்வாயிலக்கம், நெல் இலக்கம், எண்சுவடி

முதலியவற்றையும், வடமொழியில் சில நூல்களையும் படித்தார். பள்ளிக்கூடத்தில் படிப்பதோடு வீட்டிலும் இவரது பாட்டனார், தந்தையார், சிறிய தகப்பனார் ஆகியோரிடம் கல்வி கற்றார். அந்தக் காலத்தில் பெரும்பாலும் ஆசிரியர் வீட்டுத் திண்ணைகளில்தாம் பள்ளிக்கூடங்கள் நடக்கும். உ.வே.சா.வும் திண்ணைப் பள்ளிக்கூடத்தில்தான் படித்தார். ஏட்டில் எழுத நாராயண ஐயரிடம் கற்றுக் கொண்டார்.

சிறிய தந்தையாரிடம் சரளி வரிசையையும், சாமிநாதையரிடம் இசை, வடமொழி, தமிழ், கணக்கு ஆகியவற்றையும் கற்றுக் கொண்டார். சம்க்ஷேப ராமாயணம், விஷ்ணு சகஸ்ரநாமம், நீதி சாரம், அமரம் மூன்று காண்டங்கள் ஆகியவற்றைக் கற்றுக் கொண்டார். அனைத்தும் மனப்பாடமாக இருந்தன. பின்பு அரியலூர் சடகோப ஐயங்காரிடம் இசையும், தமிழும் கற்றார்.

அன்றைய காலக்கட்டத்தில் கிராமப் பள்ளிக்கூடங்களில் தமிழ் எண்களே வழக்கத்தில் இருந்தன. இவற்றை உ.வே.சா. இளமையிலேயே கற்றுக் கொண்டார்.

உத்தமதானபுரத்தில் சிவஸ்வாமி ஐயர் என்பவரிடம் ஆங்கிலம் கற்றுக் கொண்டார்.

தமிழ் இலக்கியத்தில் நல்ல பழக்கமுடைய கிருஷ்ண வாத்தியாரிடம் ஆத்திசூடி, மூதுரை, மணவாள நாராயண சதகம் முதலிய சதகங்கள், இரத்தினசபாபதி மாலை, நாலடியார், குறள் முதலியவற்றையும் கணக்கையும் கற்றுக் கொண்டார். இவரிடம் பாடம் கற்றது தொடர்பாக உ.வே. சாமிநாதையர்,

> நாலடியார் குறளென்னும் நூல்கள் அவ்வளவு இளம் பிராயத்தில் நன்றாகப் பொருளறிந்து கற்பது சாத்திய மன்று. ஆயினும் அவற்றை மனப்பாடம் செய்யும்படி கிருஷ்ண வாத்தியார் மாணாக்கர்களை வற்புறுத்து வார். எழுத்தாணியால் ஏடுகளில் எழுதியும் கறடா (மட்டி)க் காகிதத்தில் கொறுக்காந் தட்டைப் பேனாவால் எழுதியும் திருத்தமாக எழுதிக் கற்றுக் கொண்டோம். கையெழுத்து நன்றாக இராவிட்டால் குண்டெழுத்தாணியால் கட்டை விரலில் உபாத்தியாயர் அடிப்பார். அவரிடம் படித்தவர் யாவரும் எழுதுவதில் நல்ல பழக்கத்தைப் பெற்றனர். அவரிடம் படித்த நூல்களெல்லாம் எனக்கு மனப்பாடமாயின. வீட்டிலும் என் தந்தையார் தினந்தோறும் பாடங்களைப் பற்றி விசாரிப்பார். நாளுக்கு ஐந்து செய்யுட்கள் பாடம் பண்ணி

> அவரிடம் ஒப்பிக்க வேண்டும். இல்லையெனில் அவரது தண்டனைக்கு உட்பட நேரும் (ப. 68) [37]

என்று குறிப்பிடுகின்றார்.

முத்து வேலாயுத பண்டாரம் என்னும் வீரசைவரிடம் தெலுங்கு கற்கத் தொடங்கி, கணிதம் முதலியனவும் வேமன்ன சதகம், இராமதாச சதகம் என்னும் சிறு நூல்களையும் கற்றார். அதன் பின்னர், தந்தையாரே வீட்டில் சதகங்கள், வேறு சில நூல்கள், இசையில் சரளி வரிசை, அலங்காரம் முதலியவற்றைக் கற்றுத் தந்தார்.

அதன்பின்னர்ப் பள்ளிக்கூடத்தில் படிப்பதை விட்டு வீட்டிலேயே படித்து வந்தார். அரியலூரில் இருந்த தில்லைக் கோவிந்தப்பிள்ளை என்பவரிடம் கிராமக் கணக்கு வேலையைக் கற்றுக் கொண்டார். அட்டையில் கொறுக்காந்தட்டைப் பேனாவால் எழுதும் பழக்கத்தையும் செய்து வந்தார்.

உ.வே. சாமிநாதையர் தம் ஏழாம் வயதில் சடகோபையங் காரிடம் தமிழ் கற்றார். இவரைப்பற்றி,

> எனக்குத் தமிழில் சுவை உண்டாகும் வண்ணம் கற்பித்த முதற் குரு சடகோபையங்காரே. பொம்மை (பாவை)களைக் காட்டிக் குழந்தைகளைக் கவர்வது போலத் தமிழ்ச் செய்யுட்களின் நயத்தை எடுத்துக் காட்டி என் உள்ளத்துக்குள் அந்த இளம் பருவத்தில் தமிழ் விதையை விதைத்தவர் அவரே (ப. 71)

என்று கூறுகின்றார். இந்த வயதில் அவர் சிறிது சிறிதாக ஊட்டிய தமிழமுதத்தின் சுவையை அவர் வாழ்நாள் முழுவதும் மறக்க வில்லை என்கிறார்.

இவரிடம் சடகோபையங்கார் இயற்றிய ஆலந்துறையீசர் பதிகம், சகானா இராகக் கீர்த்தனம், வேறு பல கீர்த்தனங்கள், தமிழில் திருவேங்கடத்தந்தாதி, திருவேங்கடமாலை ஆகியவற்றைக் கற்றுக் கொண்டார்.

அதே வயதில் வீட்டில் சூடாமணி நிகண்டு, மணவாள நாராயண சதகம், அறப்பளீசுவர சதகம், குமரேச சதகம், இரத்தினசபாபதி மாலை, கோவிந்த சதகம், நீதி வெண்பா என்னும் நீதி நூல்கள், நன்னூற் சூத்திரங்கள் போன்றவற்றை மனப்பாடம் செய்து தம் தந்தையாரிடம் ஒப்பித்து வந்தார்.

சிறிய பாட்டனாராகிய ஐயாக்குட்டி ஐயரிடம் கௌரீ மந்திரத்தையும் அதை உச்சரிக்கும் முறையையும் கற்றுக் கொண்டார்.

குன்னத்தில் சிதம்பரம் பிள்ளை என்பாரிடம் சில சிறு நூல்கள், திருவிளையாடற்புராணம் ஆகியவற்றைக் கற்றார். திருக்குறள் தெளிபொருள் விளக்கவுரை நூல் ஒன்றையும் படித்தார். இவரிடத்தில் கிராமக் கணக்கு வேலையையும் பழகி வந்தார்.

அக்காலத்தில் குன்னத்திற்குப் பல்வேறு பகுதிகளிலிருந்தும் பல்வேறு புலவர்கள் வந்து தங்கள் புலமையை வெளிப்படுத்தி நன்கொடை பெற்றுச் செல்வர். அவ்வாறு புலவர்கள் வருகின்றபொழுது அவர்கள் கூறும் செய்யுட்களைக் கேட்டு உ.வே. சாமிநாதையர் பாடம் பண்ணிக் கொள்வதுண்டு. அவர்களுடைய பழக்கம் உ.வே.சா.வின் தமிழ்ப் பசியை அதிகமாக்கியது.

குன்னத்திற்கு அடிக்கடி வந்த வித்துவான்களில் கதிர்வேற் கவிராயர் என்பவரிடம் ஏற்பட்ட பழக்கத்தால் பல தமிழ்நூற் பெயர்களை உ.வே.சா. தெரிந்து கொண்டார். அந்த ஊரில் ஆசிரியராக இருந்த குமாரசாமிக் கவிராயரின் மாணவரிடம் சில தமிழ்ச் செய்யுட்களைப் பாடம் கேட்டார்.

கார்குடியிலுள்ள கஸ்தூரி ஐயங்காரிடம் நன்னூல், விசாகப் பெருமாளையர் இயற்றிய காண்டிகையுரை - கருத்துரை - விசேட உரை முதலியன, நவநீதப் பாட்டியல், வேங்கட வெண்பா முதலிய சில சிற்றிலக்கியங்கள் போன்றவற்றைக் கற்றார்.

சாமி ஐயங்காரிடம் கம்பராமாயணம் சுந்தர காண்டம், திருவரங்கத்தந்தாதியில் முதல் 27 பாடல்கள் மட்டும் பாடம் கேட்டார். பிறகு தாமாகவே ஆத்திசூடி, கொன்றை வேந்தன், வெற்றி வேற்கை, மூதுரை, நல்வழி, நன்னெறி, நீதிநெறி விளக்கம், நைடத மூலமும் உரையும், நாலடியார் உரை ஆகிய நூல்களைப் பெற்றுப் படித்து மனப்பாடமாக்கிக் கொண்டார்.

பாபநாசத்திலுள்ள இராகவையரிடம் நன்னூல் காண்டிகையுரை பாடம் கேட்டார். செங்கணத்திலுள்ள விருத்தாசல ரெட்டியாரிடம் 1869இல் நான்கு மாதங்கள் யாப்பருங்கலக் காரிகை உரையும் மேற்கோள் செய்யுளும், சித்திரக் கவிகளின் இலக்கணம், பொருத்த இலக்கணம், பிரபந்த இலக்கணம் ஆகியவற்றைக் கற்றுக் கொண்டார். இலக்கணமென்றால் கடினமானதென்ற நினைவே இல்லாமல் சுலபமாகவும் மனத்துக்கு உற்சாகம் உண்டாகும் வண்ணமும் ரெட்டியார் பாடம் சொன்னார்.

தாமாகவே தண்டியலங்காரம், திருக்குறள், திருக் கோவையார், கம்பராமாயணத்தில் பல பகுதிகள், தத்தாத்திரேயப் பாட்டியல் ஆகிய நூல்களைக் கற்றுக் கொண்டார். சபாபதி பிள்ளை மூலம் பெற்ற தஞ்சைவாணன் கோவையைத் தாமே படித்தார்.

அரியலூரில் இருந்த சடகோப ஐயங்காரிடம் திருவரங்கத் தந்தாதியில் எஞ்சியிருந்த பாடல்களுக்குரிய பொருள், முன்புள்ள செய்யுட்களில் உள்ள ஐயங்களையும் கேட்டுத் தெரிந்து கொண்டார்.

தியாக சமுத்திரத்திலுள்ள நீலகண்ட ஐயர் ஸ்ரீ வல்லப கணபதி மந்திரம், ஸ்ரீ நீலகண்ட மந்திரம், ஸ்ரீ சுப்பிரமணிய ஷடாக்ஷரம் ஆகியவற்றை உபதேசித்தார்.

அக்காலத்தில் தமிழ் வித்துவான்களிலேயே தலைசிறந்தவ ராக மதிக்கப் பெற்றவர் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை ஆவார். அவரிடம் படிப்பதைத் தங்களின் பிறவிப் பலன் என மாணவர்கள் கருதியிருந்த காலம் அது. சிறிதளவு தமிழ்ப்பற்று இருந்தவர்களைக்கூடப் பெரிதும் பாராட்டும் பண்புடையவர் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள். அவரிடம் மாணாக்கராகச் சேர்வது அவ்வளவு எளிதான செயல் அல்ல. இத்தகைய பெருந்தகையாளரிடம் கல்வி கற்பதற்காக உ.வே.சா. சென்றார்.

திரசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையிடம் 1871 ஏப்பிரல் மாதத்தில் கல்வி கற்பதற்காக உவே. சாமிநாதையர் வந்து சேர்ந்தார். 'என் சரித்திரம்' நூலின் பல்வேறிடங்களில் தம் ஆசிரியரின் பெருமைகளை உ.வே.சாமிநாதையர் கூறியுள்ளார். 'உயிருள்ள புத்தகசாலை'(ப. 205) என்று தம் ஆசிரியரைப்பற்றிக் கூறியுள்ளார். இவரிடம் தம் வாழ்க்கைக்குத் தேவையான அனைத்துவிதமான கல்விகளையும் கற்றார். குருகுலக் கல்வி முறையில் தாம் கற்றவற்றை 'என் சரித்திரத்'தில் கூறியுள்ளார்.

**தம் ஆசிரியரிடம் கற்ற நூல்கள் வருமாறு :** நைடதம், திருக்குடந்தைத் திரிபந்தாதி, பழமலைத் திரிபந்தாதி, திருப்புகலூர்த் திரிபந்தாதி, மறைசையந்தாதி, தில்லை யமகவந்தாதி, துறைசை யமகவந்தாதி, திருவேரகத்து யமகவந்தாதி, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ், செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ், அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ், அஷ்டப் பிரபந்தங்களில் ஐந்தாறு, சீகாழிக் கோவை, பெரிய புராணம், திருக்குற்றால யமகவந்தாதி, திருநாகைக்காரோணப் புராணம், மாயூரப் புராணம், காசிக் கலம்பகம், சோழமண்டலச் சதகம், பிக்ஷாடண நவமணி மாலை, அம்பர்ப் புராணம், திருவானைக்காப் புராணம், சீகாளத்திப் புராணம், திருநாகைக் காரோணப் புராணம், கந்த புராணம், தஞ்சைவாணன் கோவை, நன்னூல் விருத்தியுரை, நன்னூல் காண்டிகையுரை, திருச்சிற்றம்பலக் கோவையார், விசாகப் பெருமாளையர் எழுதிய பாலபோத இலக்கணம், கம்பராமாயணம்

முதலான நூல்களைப் பாடம்கேட்டார். இந்நூல்களுள் தம் ஆசிரியர் இயற்றிய நூல்களும் அடங்கும்.

தம் ஆசிரியரிடம் பாடம் கேட்டதைக் குறித்துப் பல்வேறிடங்களில் உ.வே.சாமிநாதையர் கூறியுள்ளார். அவற்றுள் ஒருசில அவர் கூற்றின் வாயிலாகவே காண்பது பொருந்தும்.

> ஒரு நூலை இயற்றிய ஆசிரியரிடமே அதனைப் பாடம் கேட்பது எவ்வளவு பெரிய அதிர்ஷ்டம் என்று எண்ணி எண்ணி இன்புற்றேன் (ப. 184)

> பண்டைக் காலத்தில் பதங்களைப் பிரித்துப் பழகு வதற்கும் பலவகையான பதங்களைத் தெரிந்து கொள்வதற்கும் மனனம் செய்வதற்கும் அனுகூலமாக இருக்குமென்று கருதி அந்தாதிகளை மாணாக்கர்களுக்குப் பாடம் சொல்லி வந்தார்கள்" (பக். 185-186)

> நான் பாடங்கேட்டு வந்ததை என்னாலேயே நம்ப முடியவில்லை. இப்படி நான் பாடம் கேட்கும் காலம் ஒன்று வருமென்று கனவிலும் நான் எதிர்பார்க்க வில்லை" (ப. 186)

> ஒவ்வொரு பிரபந்தமும் கேட்டு முடிந்தவுடன் அதனைச் சிந்தித்து இன்புற்று அந்தத் திருப்தியிலே, 'என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே' என்று பெருமிதம் அடைந்தேன் (ப. 186)

> என் ஆசிரியர் பாடம் சொல்லும்போது கையிலே புஸ்தகம் வைத்துக் கொள்ளும் வழக்கமில்லை. அப்பெரியாருக்கு அவ்வளவு செய்யுட்களும் மனப்பாடமாகவே இருந்தன; சிறிதேனும் தடை யின்றிப் பாடல்களைச் சொல்வதும், பொருள் சொல்வதும், பதசாரம்[38] சொல்வதுமாகவே அவர் பெரும்பாலான நேரத்தைக் கழிப்பார். 'இவர்கள் இதற்காகவே உதித்தவர்கள்' என்ற எண்ணம் எனக்கு உண்டாயிற்று. பாடம் சொல்வதில் அவருக்குச் சலிப்பே ஏற்படாது (ப. 186)

> பிள்ளையவர்கள் பாடம் சொல்லுகையில் விஷயங்களை விரிவாக உபமான உபமேயங்க ளோடு சொல்லுவதில்லை (ப. 182)

> சீகாழிக் கோவையைப் பாடம் சொல்லும்போது அங்கங்கே பிரபந்த இயல்பையும் அகப்பொருள்

இலக்கண நுணுக்கங்களையும் புலப்படுத்திக் கொண்டே சென்றார் (ப. 195)

பிள்ளையவர்கள் தம் வீட்டிற்குப் பின்புறத்திலுள்ள குளத்தின் படித்துறையில் இருந்து பிற்பகலில் பாடம் சொல்லுவார். மேலே ஓடு வேயப்பட்டிருந்தமையின் வெயிலின் கடுமை அங்கே இராது. அப் படித் துறையில் குளிர்ந்த நிழலில் இருந்து பாடம் சொல்வதில் அவருக்கு விருப்பம் அதிகம். சீகாழிக் கோவையைப் பெரும்பாலும் அங்கேயே பாடங் கேட்டேன் (ப. 196)

என் ஆசிரியர் எந்தச் சமயத்திலும் பாடம் சொல்லும் வழக்கமுடையவர் (ப. 206)

தம் ஆசிரியர் வாழ்ந்து வந்த இறுதிக்காலம்வரை அவருடனேயே இருந்து அவர் அன்பைப் பெற்றுப் பல்வேறு இலக்கண, இலக்கிய நூல்களை அவரிடமிருந்து கற்றுக் கொண்டார்.

பிள்ளை மயிலாடுதுறையில் இருந்த காலத்தில் இயற்றிய நூல்களில் சாத்திரக் கருத்துகள் அதிகமாக இல்லை. திருவாவடு துறையில் இருந்த காலத்தில் இயற்றிய நூல்களில் எவ்வளவோ அரிய கருத்துகள், சாத்திரக் கருத்துகள் அமைந்துள்ளன.

உ.வே. சாமிநாதையர் எப்பொழுதும் ஏட்டையும் எழுத்தாணியையும் தம்கைகளில் வைத்துக் கொண்டே இருப்பார். தம்ஆசிரியர் சொல்லச் சொல்ல அவற்றை ஏடுகளில் எழுதுவது வழக்கம். ஆசிரியர் சொல்லும் புதிய பாடல்களையும் கடிதங்களையும் எழுதுவது வழக்கம். ஒருமுறை அவர் பாடல் சொல்லுவதை ஏட்டில் எழுதுவதும் பிறகு எழுதியதைப் படித்துக் காட்டி அவர் சொல்லிய திருத்தங்களைக் குறித்துக் கொண்டு மீண்டும் வேறு ஏட்டில் நன்றாக எழுதுவதுமாகிய வேலைகளைச் சாமிநாதையரே பார்த்து வந்தார்.

பிள்ளை இயற்றிய புராணங்களுள் சிறந்தது நாகைக் காரோணப் புராணம் என்று அவர்தம் மாணவர்களும் பிறரும் சொல்லுவதுண்டு. பிள்ளை பாடும் புராணங்களில் நாட்டுச்சிறப்பு, நகரச்சிறப்பு முதலிய வருணனைகள் கற்பனைத்திறம் விளங்க அமைந்திருக்கும்.

'நைடதம்' பாடம் சொன்னபோது பிள்ளை,

நைடதம் படித்தால் கலிபீடை நீங்குமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். உமக்குக் கலி இன்றோடு நீங்கி விட்டது. இனிமேல் கவலைப்பட வேண்டாம் (ப. 260)

என்று சொன்னார். உண்மை அன்புடையோர் சொல்லும் வார்த்தைகளுக்குக் கண்டிப்பாகப் பயன் இல்லாமல் போகாது என்பது உ.வே.சா.வின் நம்பிக்கை.

ஆசிரியர் 'திருஅம்பர்ப் புராணத்'தைச் சொல்லச் சொல்ல உ.வே.சா. ஏட்டில் எழுதினார். அப்பொழுது தம் ஆசிரியர் குறித்து,

> ஒரு வரலாற்றை அமைத்துத் தொடர்ச்சியாகப் பேசுவது போலவே செய்யுட்கள் செய்வதென்பதைக் கதையில்தான் கேட்டிருந்தேன். கம்பர் ஒருநாளில் எழுநூறு செய்யுட்கள் பாடினாரென்று சொல்லு வார்கள். 'அவ்வளவு விரைவில் செய்யுள் இயற்ற முடியுமா? அது கட்டுக் கதையாக இருக்க வேண்டும்' என்று நான் நினைத்திருந்தேன். அன்றைத் தினம் ஆசிரியர் செய்யுட்களை இயற்றிய வேகத்தையும் அதற்குப் பின் பல சமயங்களில் அவருடைய கவிதை வெள்ளம் பெருக்கெடுத்து வருவதையும் நேரே அறிந்த எனக்கு அப்பழைய வரலாறு உண்மை யாகவே இருக்குமென்ற நம்பிக்கை உண்டாயிற்று (ப. 279)

என்று கூறுகின்றார்.

தம் ஆசிரியருக்கு யாரிடமேனும் கோபம் வந்தால் அவரிடம் பேசாமல் இருந்து விடுவார். இது அவரது வழக்கம்.

அக்காலத்தில் ஒருவரது தமிழ்ப் புலமையைச் சோதித்து அறியவேண்டுமென்றால் அவர்களிடம் கல்லாடத்திலிருந்து கேள்விகள் கேட்பது வழக்கம். சங்கச் செய்யுட்கள் வழங்காத அக்காலத்தில் கல்லாடமே தமிழ் வித்துவான்களின் புலமைக்கு ஓர் அளவு கருவியாக இருந்தது. அதனால்தான் 'கல்லாடம் கற்றவ ரோடு சொல்லாடாதே' என்ற பழமொழியும் எழுந்தது போலும்!

திருவாவடுதுறை ஆதீனக் குருமுதல்வர் சீர்வளர் சீர் சுப்பிரமணிய தேசிகர் உ.வே. சாமிநாதையருக்குப் பல நூல்களைக் கற்பித்தார். அதாவது பிள்ளையவர்கள் இவ்வுலக வாழ்வை நீத்த பின்னர் தேசிகர் இவருக்குப் பாடம் சொல்லித் தந்தார்.

**உ.வே. சாமிநாதையர் தேசிகரிடமிருந்து கற்ற பாடங்கள் வருமாறு:** இலக்கண நூல்கள், சைவ சித்தாந்த சாத்திரங்கள், சில இலக்கியங்கள், இலக்கணக் கொத்து, நன்னூல் விருத்தியுரை, யாப்பருங்கலக்காரிகை, தண்டியலங்காரம், அணியிலக்கணம், தொல்காப்பியம் எழுத்ததிகாரம் இளம்பூரணர் உரை, சொல்லதிகாரம் சேனாவரையர் உரை, இலக்கண விளக்கம். திருச்சிற்றம்பலக் கோவையார், சிதம்பரச்

*செய்யுட்கோவை, திருக்குறள் பரிமேலழகர் உரை, சிவஞானபோதச் சிற்றுரை, சிவஞான சித்தியார் உரை முதலான சித்தாந்த நூல்கள்.*

*திருவாவடுதுறையில் முதன்முதல் தேசிகரைக் கண்டபோது உ.வே. சாமிநாதையருக்கு ஏற்பட்டதைப் பின்வரும் அவர் கூற்றின் வாயிலாகவே தெரிந்து கொள்வது பொருந்தும்.*

> மடத்தின் உட்புறத்தில் ஒடுக்கத்தின் வடபுறத்தே தென்முகம் நோக்கியபடி ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் அமர்ந்திருந்தார். மடத்தில் பண்டார சந்நிதிகள் இருக்குமிடத்திற்கு 'ஒடுக்கம்' என்று பெயர். சுப்பிரமணியருடைய தோற்றத்திலே ஒரு வசீகரம் இருந்தது. நான் அதுகாறும் அத்தகைய தோற்றத் தைக் கண்டதே இல்லை. துறவிகளிடம் உள்ள தூய்மையும் தவக்கோலமும் சுப்பிரமணிய தேசிகரிடம் நன்றாக விளங்கின. கவலை என்பதையே அறியாத செல்வரது முகத்தில் உள்ள தெளிவு அவர் முகத்தில் பிரகாசித்தது. அவரது காவியுடை, ருத்திராட்ச மாலை, தலையில் வைத்துள்ள ஜபமாலை ஆகிய இவைகள் அவரது சைவத் திருக்கோலத்தை விளக்கின. காதில் அணிந்திருந்த ஆறுகட்டி,[39] சுந்தர வேடம்,[40] விரல் களில் உள்ள அங்குஷ்டம்[41] பவித்திரம்[42] என்பவைகள், தேகத்திலிருந்த ஒளி, அந்த மேனியிலிருந்த வளப்பம் எல்லாம் அவர் துறவிகளுள் அரசராக விளங்கியதைப் புலப்படுத்தின. அவருடைய தோற்றத்தில் தவப்பயனும் செல்வப் பயனும் ஒருங்கே விளங்கின. அவர் முகமலர்ச்சியிலே, அவருடைய பார்வையிலே, அவர் அமர்ந்திருந்த நிலையிலே, அவரது கம்பீரமான தோற்றத்தி லே ஓர் அமைதியும், கண்டாரைக் கவரும் தன்மை யும், இயல்பாகவே அமைந்திருக்கும் தலைமையும், ரஸிகத்துவமும் புலப்பட்டன. அவரைச் சுற்றிலும் பலர் உட்கார்ந்திருந்தனர். எல்லோருடைய முகத்திலும் அறிவின் தெளிவு மலர்ந்திருந்தது. (பக். 211-212).

*சுப்பிரமணிய தேசிகரிடம் பாடம் கேட்டபோது அவர் கூறியனவற்றுள் ஒருசில வருமாறு :*

> நன்னூலுக்கு முதலில் சங்கர நமச்சிவாயர் உரை எழுதினார். பிறகு சிவஞான முனிவர் அதைத் திருத்தியும் புதுக்கியும் விருத்தியுரையை அமைத்தார். அவர் தாம்

எழுதிய சிவஞானபோத திராவிட மகாபாஷ்யத்தில் அமைந்துள்ள அரிய வடமொழி தென்மொழிப் பிரயோகங்களை எளிதிற் பிற்காலத்தவர்க்குப் புலப்படுத்த நினைந்து இலக்கணக் கொத்து, தொல்காப்பியச் சூத்திர விருத்தி, இலக்கண விளக்கச் சூறாவளி என்னும் நூல்களிலும் பிறவற்றிலும் உள்ள முக்கியமான சிலவற்றை அவ்வுரையில் அங்கங்கே சேர்த்தார். சில இடங்களில் சிலவற்றைக் குறைத்தும் சிலவற்றை மாற்றியும் எழுதி நிறைவேற்றினார். இலக்கணக் கொத்து முதலிய மூன்றையும் பாடம் கேட்ட பிறகுதான் விருத்தியுரை தெளிவாக விளங்கும். (பக். 403-404)

சேனாவரையர் உரை எழுதுவதைப் போல் இலக்கண நூலுக்கு யாரும் எழுதமுடியாது. ஸம்ஸ்கிருத ஞானம் நன்றாக இருப்பதால் பல அருமையான விஷயங்களைக் காரண காரியத்தோடு நியாயங் காட்டி எழுதுகிறார். (ப. 404)

காரிகையிலுள்ள இலக்கணங்களுக்கு இலக்கிய மாக ஸ்ரீ குமரகுருபரர் சிதம்பரச் செய்யுட்கோவை என்ற பிரபந்தம் ஒன்றை இயற்றியிருக்கிறார். சைவ சம்பந்தமான நூலாதலின் நன்றாக விளங்கும். செய்யுளிலக்கணத்தைத் தெரிந்து கொள்ள அந்த நூல் மிக உபகாரமாக இருக்கும். (ப. 405)

இலக்கண நூல்களுக்கு உரை செய்வதில் சேனாவரையர் எப்படி இணையற்றவரோ அப்படியே இலக்கிய நூல்களுக்கு உரை எழுதுவதில் பரிமேலழகர் இணையற்றவர்.... இந்த இடத்தில் ஒரு விசேஷமும் இராதென்று நாம் ஒரு குறளைப் பார்த்து நினைப்போம். அங்கே பரிமேலழகர் ஏதேனும் ஒரு விசேஷத்தை எடுத்துக் காட்டுவார். பதசாரங்களை எழுதுவதிலும் சுருக்கமாக விஷயங்களைத் தெரிவித்தலிலும் அவருக்கு மிஞ்சியவர்கள் இல்லை. (ப. 405)

*பரமசிவத் தம்பிரானிடம் நன்னூல் விருத்தியுரை முழுவதையும் பாடம் கேட்டார். அதன் பின்னர் நமச்சிவாய தேசிகரிடம் காஞ்சிப்புராணம், பேரூர்ப்புராணம், பிற தமிழ் நூல்கள் போன்றவற்றைப் பாடம் கேட்டார்.*

### ஆசிரியர் மேல் அளவற்ற பற்று

உ.வே.சா. தமக்குக் கல்வி கற்றுத் தந்த ஆசிரியர்மீது தாயைவிட மிகுந்த பற்று வைத்திருந்தார். இதை,

> தன் குழந்தை வயிறு வாடப் பாராத தாயின் அன்புக்கும், என் ஆசிரியர் காட்டிய அன்புக்கும் வேற்றுமையே இல்லை. இதை நான் மனமார அறிந்தவன். கோட்டூரில் இருந்த காலத்தில் ஒருமுறை பிள்ளையவர்களைப் பற்றிப் பேசும்போது 'பெற்ற தாயாரைவிட மிகவும் அன்பாக நடத்துகிறார்' என்று என் தாயாரிடம் சொன்னேன். அந்த வார்த்தைகளை என் தாயார் கேட்டு 'என்ன அப்பா அப்படிச் சொல்கிறாய்!' 'தாயாரைக் காட்டிலும் ஒருவர் அதிக அன்பு காட்ட முடியுமா?' என்று கேட்டார். என் வார்த்தைகளால் அவர் சிறிது வருத்தத்தையே அடைந்தார். பெற்ற தாய்க்கு அன்பு இருக்கும்; ஆனால், அதைச் செயலில் காட்ட இயலாதபடி அவள் நிலை இருக்கும். என் ஆசிரியருடைய அன்போ அவ்வப்போது செயல்களாகப் பரிணமித்தது. அச் செயல்கள் மற்றவர்களுக்குச் சிறியவையாகத் தோற்றலாம். நான் அவற்றைப் பெரியனவாகவே கருதுகிறேன் (ப. 273).

என்று உ.வே.சா. கூறுவதைக் கொண்டு அறிந்து கொள்ள முடிகிறது. இதுதான் குருபக்தி என்பது. தம்வாழ்நாளில் ஒருபோதும் தம் ஆசிரியர் பெயரைச் சொல்லியதே இல்லை.

### பெற்ற இசைக் கல்வி

இசை இவரது குடும்பச் சொத்து. தம்ஆறாம் வயதிலேயே தந்தையாரிடமிருந்து இசை கற்றுக் கொண்டார். பிறகு இளமையில் சாமிநாதையர் என்பவரிடம் இசையையும் கணக்கையும் வடமொழி யையும் அறிந்து கொண்டார். இவரது குடும்பத்துக்குச் சொந்தமான இசையில் இயல்பாகவே இவருக்கு ஆர்வம் மிகுந்து ஈடுபாடு ஏற்பட்டது. இவரது குடும்பத்தினர் இசையில் தேர்ச்சி வேண்டி, இவரைத் தெலுங்கு மொழியைக் கற்றுக் கொள்ள வற்புறுத்தினர். அதனால் முத்துவேலாயுத பண்டாரம் என்பவரிடம் தெலுங்கு கற்றுக் கொள்ள முற்பட்டார். இருந்தாலும், இசையிலும் தமிழிலும் இவருக்கு விருப்பம் உண்டானதுபோலத் தெலுங்கில் ஆர்வம் ஏற்படவில்லை. சிறிது காலம் கோபாலகிருட்டிண பாரதியாரிடம் இசைப் பயிற்சி பெற்றார். அவரிடமிருந்து பல கீர்த்தனங்களைக் கற்றார். தம் ஆசிரியர்,

> **இசையில் அதிகப் பழக்கம் வைத்துக் கொண்டால் இலக்கண இலக்கியங்களில் தீவிரமாகப் புத்தி செல்லாது (ப. 192)**

என்று கூறியதைக் கேட்ட பின்னர் இசைப் பயிற்சி செய்வதை விட்டுவிட்டார்.

திருவாவடுதுறை ஆதீனத்தில் இருந்தபொழுதும் அதற்குப் பின்னரும் இவர் பெற்ற இசைக் கல்வி மிகவும் இவருக்குப் பல நிலைகளில் உறுதுணை புரிந்தது.

**ஆசிரியர் பணிநிலை**

இரு நிலைகளில் இவர்தம் ஆசிரியப் பணி அமைகிறது. முதல்நிலையில் திருவாவடுதுறை ஆதீனத்தில் இருந்த காலத்தில் தேசிகர் கட்டளைப்படி ஆசிரிய நிலையிலிருந்து அங்கிருந்த குட்டித் தம்பிரான்களுக்கும் மற்றவர்களுக்கும் தமிழ் நூல்களைக் கற்பித்துள்ளார். மடத்திற்குப் புதிதாகப் பாடம் கேட்கவும் கற்கவும் வருகின்றவர்களுக்குப் பழைய மாணவர்கள் சிலர் பாடம் சொல்வதுண்டு. அந்த வகையில் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் முதன் முதலில் கல்வி கற்க வந்த உ.வே.சா.வுக்கு அங்கிருந்த சவேரிநாத பிள்ளை என்பவர்தான் பாடம் சொல்லி வந்தார் என்பது குறிக்கத்தக்கது. உ.வே.சா.வும் மடத்திற்கு வந்த புதிய மாணவர்களுக்குப் பாடம் சொல்லித் தந்தார்.

> நான் பாடம் சொல்லுகையில் கவனித்த ஆசிரியர், 'சாமிநாதையர் புராணப் பிரசங்கம் செய்த பழக்கத் தால் நன்றாக விஷயங்களை விளக்குகிறார்' என்று அருகிலிருந்தவர்களிடம் கூறினார் (ப. 374)

என்பதிலிருந்து தம்ஆசிரியர் தமக்கு வழங்கிய நற்சான்றிதழையும் காணமுடிகிறது.

தம்ஆசிரியர் காலமானதிற்குப் பின்னர்,

> படிப்பதற்காக இங்கே வந்திருப்பவர்களுக்கு அவர்கள் எந்த எந்த நூலைப் பாடங் கேட்க விரும்புகிறார்களோ அவற்றை அறிந்து தகுதிக்கேற்றபடி பாடஞ் சொல்லி வாருங்கள். பாடஞ் சொல்லுவதால் உங்கள் கல்வி அபிவிருத்தி அடையும் (ப. 403)

என்று தேசிகர் சொன்னார். அத்துடன் திருவாவடுதுறை ஆதீன வித்துவானாகவும் உ.வே.சா.வை அமர்த்தினார். தேசிகர் கட்டளைப்படி அங்கிருந்த தம்பிரான்களுக்கும் மற்றையோருக்கும்

பாடம் சொல்லி வந்தார். சில மாணவர்களுக்குக் காஞ்சிப் புராணம் சொல்லி வந்தார். பாடம் சொல்வதும், படிப்பதும், படித்தவர்களோடு பழகுவதும் நாள்தோறும் நடைபெற்றன.

இரண்டாவது நிலையில் கும்பகோணம் அரசு கல்லூரியில் வித்துவான் தியாகராச செட்டியார் மூலமாகத் தமிழ்ப் பண்டிதராக 16-02-1881 முதல் 1903ஆம் ஆண்டு வரை பணிபுரிந்தார். அதன் பின்னர் 1903ஆம் ஆண்டின் முடிவில் சென்னை மாநிலக் கல்லூரிக்கு மாறுதலானார். இங்கே 16 ஆண்டுகள் தமிழாசிரியர் பணியை ஆற்றினார். 1919ஆம் ஆண்டில் இக்கல்லூரியிலிருந்து பதவி விலகினார்.

ஏறத்தாழ 40 ஆண்டுக்காலம்வரை பாடம் சொல்லுவதில் தம்மை முழுவதுமாக ஈடுபடுத்திக் கொண்டார்.

பின்னர், செட்டி நாட்டரசர் அண்ணாமலைச் செட்டியாரின் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டு சிதம்பரம் மீனாட்சி தமிழ்க் கல்லூரியின் தலைமைப் பொறுப்பை 1924இல் ஏற்றார். மூன்றாண்டுகள் திறம்பட நடத்திவிட்டுச் சென்னைக்கு மீண்டும் திரும்பினார்.

**பாடம் கேட்டலின் பயன்**

ஒருவர் புத்தகத்தைப் படிப்பதனால் மட்டுமே அவருக்கு முழுமையான அறிவு ஏற்படாது; அறிந்தவர்களிடம் பாடம் கேட்க வேண்டும். இதனால் பயன்கள் பலவகைப்படும். இதனைத் தம் ஆசிரியர் பாடம் நடத்துவதன் மூலம் பின்வருமாறு கூறுகின்றார் :

> நூலுக்குப் பொருளுரைப்பதோடு நூலாசிரியர் சம்பந்தமான வரலாறுகளையும் சொல்வார். பல தனிப் பாடல்களைச் சொல்வார். இன்னும் சந்தர்ப்பத்திற்கேற்ற பல விஷயங்களை இடையிடையே எடுத்துரைப்பார். அவைகளெல்லாம் மிகவும் உபயோகமுள்ள செய்திகளாகவே இருக்கும். நாங்கள் கேட்ட பாடங்களைச் சிந்திக்கும்போதுகூட அவர் அருகிலேயே இருப்போம். அவர் எங்களிடம் அன்போடு பேசுவதும் எங்கள் சௌகரியங்களை அடிக்கடி விசாரிப்பதும் எங்கள் உள்ளத்தைப் பிணித்தன (பக். 186-187)

**பாடம் கேட்டவர்கள்**

உ.வே.சா.விடம் பாடம் கேட்டவர்கள் பலராவர். திருவாவடுதுறை ஆதீனத்தில் இருந்த காலத்தில் அவரிடம் பாடம் கேட்டவர்களுள் விசுவலிங்கத் தம்பிரான், மு. பொன்னுசாமி

செட்டியார், சொக்கலிங்கத் தம்பிரான், சுந்தரலிங்கத் தம்பிரான், பொன்னம்பலத் தம்பிரான், மகாலிங்கத் தம்பிரான், வானம்பாடி சுப்பிரமணியத் தம்பிரான், சிவக்கொழுந்துத் தம்பிரான், பெரியப்பு, சின்னப்பு, குழந்தை வேலுப்பிள்ளை, சதாசிவ செட்டியார், குமாரசாமி ஐயர், இராமலிங்க பண்டாரம், சாமி பண்டாரம், கிருஷ்ணசாமி உடையார் முதலான ஒருசிலராவர்.

கி.வா. ஜகந்நாதன் உ.வே.சா.விடம் 1928இலிருந்து 1942 வரை பாடம் கேட்டு வந்தார். கி.வா. ஜகந்நாதனிடம் குடிகொண்டிருந்த ஆர்வம், முயற்சி, உழைப்பு ஆகியவையே உ.வே.சா.விடம் நீண்ட காலம் கல்வி பயில வைத்தன. உ.வே.சா.விட மிருந்து பதிப்பு முறைகளை முற்றும் தெரிந்து கொண்டார். உ.வே.சா. ‘தக்கயாகப்பரணி’ ‘முகவுரை’யில்,

> இந்நூலைப் பதிப்பித்து வரும் நாள்களில் உடனிருந்து எழுதுதல், ஆராய்தல், ஒப்புநோக்குதல் முதலிய உதவிகளை அன்புடன் செய்தவர் ... மோகனூர்த் தமிழ்ப் பண்டிதர் சிரஞ்சீவி கி.வா. ஜகந்நாத ஐயரும் ஆவர். இவர்களுள் ஜகந்நாத ஐயர் எடுத்துக்கொண்ட உழைப்புப் பாராட்டத் தக்கது

என்று எழுதியுள்ளார்.

உ.வே.சா. தம் அனுபவ அறிவையும் மனிதப் பண்பாட்டை யும் கி.வா. ஜகந்நாதனுக்கு உணர்த்தினார். உ.வே.சா.வின் பரிந்துரையின் பேரில் ‘கலைமகள்’ இதழாசிரியராகப் பொறுப்பேற்றார். இதழ்ப் பணிகளுக்கிடையில் கி.வா. ஜகந்நாதன் தம்ஆசிரியர் உ.வே.சா.வுடன் சைவ மடங்கள், நிறுவனங்கள், சங்கங்கள் எனப் பல்வேறு இடங்களுக்குச் சென்றார்; சான்றோர் பலரைச் சந்தித்தார்; அவர்களின் பாராட்டையும் பெற்றார்.

உ.வே.சா.வின் இறுதிக்காலத்தில் கி.வா. ஜகந்நாதன் தம் ஆசிரியருடன் இருந்து வரலானார். உ.வே.சா. எழுதி நிறைவேறாமல் இருந்த ‘என் சரித்திரத்’தின் பிற்பகுதியை இவரும், உ.வே.சா.வின் மகனுமான கலியாணசுந்தரமையரும் சேர்ந்து நிறைவு செய்தனர். கி.வா.ஜகந்நாதன் தம் ஆசிரியரின் வரலாற்றை ‘என் ஆசிரியப் பிரான்’ என்ற பெயரில் நூலாக எழுதி வெளியிட்டார்.

## செய்யுள் இயற்றல்

யாப்பு கற்ற காரணத்தினால் பல்வேறு நிலைகளில் பல செய்யுள்களை இயற்றும் வாய்ப்பை உ.வே.சா. பெற்றார். அந்த வகையில் இவர் இயற்றிய செய்யுள்களில் ஒருசில விவரம் வருமாறு:

சுப்பிரமணிய தேசிகர்மீது பரமசிவத் தம்பிரான் இயற்றிய மும்மணிக்கோவை என்ற நூலில் 2 சிறப்புப் பாயிரங்கள், வரவேற்புப் பாடல்கள், பாராட்டுப் பாடல்கள், செவந்திபுரத்தில் சுப்பிரமணிய தேசிக விலாசம் என்ற கட்டடத் திறப்பு விழாவின்போது பாடிய 8 செய்யுள்கள், மாவட்ட ஆட்சித் தலைவரைப் பாராட்டிப் பாடிய பாடல், நாள்தோறும் கோமுத்தீசுவரர்மீது 1 செய்யுள், சமயோசிதப் பாடல்கள், வினாச் செய்யுள், ஊற்றுப் பாட்டு, ரெயில் பாட்டு, கடிதப் பாடல்கள், தேசிகரையும் இராமலிங்கத் தம்பிரானையும் புகழ்ந்து பல பாடல்கள், தியாகராச செட்டியார்மீது 10 பாடல்கள், சில நேரங்களில் கடிதம் முழுவதையும் செய்யுளாகவே எழுதியவை, தோத்திரங்கள், ஊசல் பாடல்கள், தாலாட்டுப் பாடல்கள் போன்றவை.

இவர் இயற்றிய செய்யுள்களைச் சில நேரம் இவர் ஆசிரியரும், தேசிகரும் இவர் பாடியே கேட்டதுண்டு. இவர் இயற்றிய செய்யுள்களைக் கேட்ட தேசிகர்,

> நன்றாயிருக்கின்றன; எல்லாம் பிள்ளையவர் களுடைய செய்யுட்களின் போக்கு (ப. 437)
>
> பிள்ளையவர்களுடைய போக்கை நன்றாகக் கற்றுக் கொண்டிருக்கிறீர். உம்முடைய செய்யுட்கள் அவர்களுடைய ஞாபகத்தை உண்டாக்குகின்றன (ப. 478)

என்று கூறினார். இவற்றைக் கேட்ட உ.வே.சா. அனைத்தும்,

> பிள்ளையவர்கள் இட்ட பிச்சையே எனது தமிழறிவு (ப. 478)

என்று பதிலுரைத்தார். சான்றுக்கு ஒருசில பாடல்கள் :

அற்றார்க்குத் தாயனைய துறைசையிற்சுப் பிரமணிய
அமலன் றன்பால்
கற்றார்க்குக் குறையுளதோ மற்றவன்றன் திருமுகத்தைக்
கண்ணிற் காணப்
பெற்றார்க்குத் துயருளதோ வுரைப்பமிக வினிக்குமவன்
பெயரை வாயால்
சொற்றார்க்குத் துயருளதோ யிரும்புவியி னாவலர்காள்
சொல்லு வீரே

இப்பாடல் சுப்பிரமணிய தேசிகர்மீது பாடிய பாடல்களுள் ஒன்று.

வாய்ந்தபுகழ் படைத்திலங்கு மீனாட்சி
சுந்தரநா வலவன் பாலே
ஏய்ந்ததமிழ் ஆய்ந்தமுறைக் கியைவுறநீ
இதுகாறும் இனியீதன் வேய
ஆய்ந்தவள நகர்க்குடந்தைக் காலேஜில்
நின்னிடமெற் களித்தல் நன்றே
வேய்ந்ததமிழ் முதற்புலமைத் தியாகரா
சப்பெயர்கொள் மேன்மை யோனே

*அறுசீர் விருத்தத்தில் இப் பாடலைப் பாடிக் கும்பகோணம் அரசுக் கல்லூரியில் தமிழ்ப் பண்டிதராகப் பணியை ஏற்றார்.*

## தமிழில் மொழிபெயர்த்தல்

*உ.வே.சா. தமிழ், வடமொழி, தெலுங்கு ஆகிய மொழிகளைத் தெரிந்தவர். ஆயினும் வடமொழியிலிருந்து பல சுலோகங்களைத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். சாகுந்தலத்திலிருந்து ஒருசில சுலோகங்களை மொழி பெயர்த்துள்ளார்.*

*திருவாவடுதுறை ஆதீனத்திற்கு வருகின்ற பல புலவர்கள், வித்துவான்களுள் வடமொழி தெரிந்த பண்டிதர்களும் வருவர். தேசிகர் வடமொழியிலும் புலமை பெற்ற காரணத்தினால் வடமொழிப் பண்டிதர்கள் தேசிகரைப் புகழ்ந்தும் வேறுசில வடமொழிச் சுலோகங்களையும் பாடிப் பரிசில் பெறுவதுண்டு.*

*சான்றுக்கு உ.வே.சாமிநாதையர் வடமொழிச் சுலோகம் ஒன்றைத் தமிழில் மொழிபெயர்த்தது வருமாறு :*

மீகாமன் செயல்முறையும் பிறழ்ந்தது வீழ்ந்
தனதுடுப்பு மீன்றோன் றாமல்
ஆகாய மறைத்தபுயல் அம்புதியோ
கடக்கரிதால் அந்தோ மார்க்கம்
ஏகாத விதமலைக ளுடையதுநௌ
விதைக்கரைப்பால் ஏகச் செய்து
நீகாவ லதுகவிழிவ் விரண்டுமுன்றன்
கையனவாம் நிகழ்த்துங் காலே

*[மீகாமன் - மாலுமி. மீன் - நக்ஷத்திரம். அம்புதி - கடல். நௌ - ஒருவகைத் தோணி. காலே - காற்றே.]*

*புயற்காற்றினால் கடலில் அலைப்புண்ட ஒரு கப்பலில் தத்தளிப்பவன் காற்றைப் பார்த்துச் சொல்வதுபோல அமைந்தது இந்தச் சுலோகம்.*

உ.வே.சா. பல்வேறு காலக்கட்டங்களில் இயற்றிய, எழுதிய கவிதைகள் 784 ஆகும். இவற்றை இவரது மாணவர் கி.வா. ஜகந்நாதன் தொகுத்துத் தலைப்புகளுடன் குறிப்புரைகள் எழுதித் 'தமிழ்ப்பா மஞ்சரி' என்ற தலைப்பில் இரண்டு பகுதிகளாக 1961, 1962களில் வெளியிட்டுள்ளார்.

## சொற்பொழிவாளர்

உ.வே.சா.வின் தந்தையார் பல ஊர்களுக்கும் சென்று சொற்பொழிவு செய்து தம் வாழ்க்கையை நடத்தி வந்தார். உ.வே.சா. தம் பெற்றோருடன் 1874ஆம் ஆண்டு இறுதியில் செங்கணத்துக்குச் சென்றார். அங்கிருந்த விருத்தாசல ரெட்டியாரின் உதவியினால் காரைக்குப் பயணமாயினர். காரையில் முதன் முதல் உ.வே.சா. திருவிளையாடற்புராணச் சொற்பொழிவை நிகழ்த்தினார்.

இவர் சொற்பொழிவு செய்யத் தொடங்கிய காலத்தில் அப்பகுதியில் மழையே இல்லை. ஒருநாள் உ.வே.சா. சொற்பொழிவு செய்து வரும் பொழுது பெருமழை பெய்தது. அங்குள்ள பூமியையும் மனிதர் உள்ளங்களையும் குளிர்வித்தது. திருவிளையாடற்புராணம் தொடங்கியதனால்தான் மழை பெய்தது என்ற பேச்சு அங்குள்ள மக்களிடம் பரவியது. இதனால் உ.வே.சா.வுக்கு எதிர்பாராதபடி மதிப்பு உயர்ந்தது.

நாள்தோறும் இரவில் ஏழு மணி முதல் பத்து மணிவரை அங்குள்ள பிள்ளையார் கோயிலில் சொற்பொழிவு நடந்தது. சொற்பொழிவில் இவர் பெற்ற இசைப் பயிற்சி, தமிழ் நூற் பயிற்சி ஆகியவற்றை நன்றாகப் பயன்படுத்திக் கொண்டார். உ.வே.சா. கற்ற நூல்களிலிருந்து மேற்கோள்களை எடுத்துச் சொல்லிப் பொருள் உரைப்பார். கேட்பவர்கள் ஏராளமான நூல்களைப் படித்திருக்கிறார் என்று ஆச்சரியமடைவர். சொற்பொழிவில் புராணத்தின் ஒவ்வொரு பதத்துக்கும் பொருள் சொல்லிச் சிறந்த முறையில் பொழிவை நிகழ்த்துவார்.

அந்தக்காலத்தில் ஒரு தொடர் சொற்பொழிவு நிறைவுறும் நாளன்று பெரிய திருவிழாபோல நடத்தி அப்பொழிவை நடத்தியவருக்குப் பெரிய அளவில் பொருள் கொடுப்பது வழக்கம். அந்த வகையில் திருவிளையாடற்புராணத்தின் இறுதிப் படலம் குறிப்பிட்ட நாளில் நடைபெற்றது. சொற்பொழிவு நிகழ்ந்த பிள்ளையார் கோயிலுக்குமுன் மிகப்பெரிய பந்தல் ஒன்று போடப்பட்டது. வாழை, கமுகு, கூந்தற்பனை, இளநீர்க்குலை, மாவிலைத் தோரணங்கள், தேர்ச் சீலைகள் முதலியவற்றைக் கட்டிப் பந்தல் அலங்கரிக்கப்பட்டது. ஒரு பெரிய திருவிழாவைப்போல

அனைவரும் மகிழ்ச்சியுடன் இருந்தனர். சொற்பொழிவு வாழ்த்தோடு நிறைவுற்றதும் பலவகையில் பொருள்கள், ஆடைகள், பணம் போன்றவை கிடைத்தன. இருநூறு ரூபாய்வரையில் பணம் கிடைத்தது.

அதன்பின்னர்த் திருவானைக்காப் புராணச் சொற் பொழிவையும் நிகழ்த்தியுள்ளார். இவ்வாறு உ.வே.சா. ஒரு சிறந்த சொற்பொழிவாளராக இருந்துள்ளார்.

## இல்லற வாழ்வு

உ.வே. சாமிநாதையருக்கு இளமையிலேயே திருமணம் செய்விக்கப்பட்டது. அதாவது 16-06-1868இல் மதுராம்பாள் என்பவரைத் தம்வாழ்க்கைத் துணையாகக் கொண்டார். இவரது இல்வாழ்க்கையின் பயனாகக் 'கல்யாணசுந்தரம்' என்ற மகன் பிறந்தார். 08-05-1917இல் இவரது மனைவி இவ்வுலக வாழ்வை நீத்தார்.

## எழுதிய நூல்கள்

மத்தியார்ச்சுன மான்மியம் (1886), பௌத்த மும்மணிகள் (புத்த சரித்திரம், பௌத்த தருமம், பௌத்த சங்கம்) (1898), மணிமேகலைக் கதைச் சுருக்கம் (1898), உதயணன் சரித்திரச் சுருக்கம் (1924), சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும் (1929), மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம் பகுதி 1 (1933), மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம் பகுதி 2 (1934), கனம் கிருஷ்ணையர் (1936), கோபாலகிருஷ்ண பாரதியார் (1936), திருநீலகண்ட நாயனார் சரித்திரம் (1936), திருவள்ளுவரும் திருக்குறளும் (1936), நான் கண்டதும் கேட்டதும் (1936), புதியதும் பழையதும் (1936), மகா வைத்தியநாதையர் (1936), நல்லுரைக் கோவை பகுதி 1 (1937), நல்லுரைக் கோவை பகுதி 2 (1937), நல்லுரைக் கோவை பகுதி 3 (1938), நல்லுரைக் கோவை பகுதி 4 (1939), நினைவு மஞ்சரி பகுதி 1 (1940), நினைவு மஞ்சரி பகுதி 2 (1942), வித்துவான் தியாகராச செட்டியார் (1942).

அனுமான், ஆடல் பாடல், ஆனந்த போதினி, ஆனந்த விகடன், கலைமகள், சில்ப ஸ்ரீ, சுதேசமித்திரன், தனவணிகன், தாருல் இசுலாம், தினமணி, மணிக்கொடி, ஜெய பாரதி, ஜோதி ஆகிய இதழ்களில் பல கட்டுரைகள் வெளிவந்துள்ளன. இக் கட்டுரைகளே பின்னர் நூல் வடிவம் பெற்றன.

உ.வே.சா. எழுதிய உரைநடை நூல்களைப் படித்தால் இக்காலச் சிறுகதையைப் படித்தது போன்ற உணர்வு ஏற்படும். படித்து முடிந்ததும் பல புதிய நல்ல செய்திகளைத் தெரிந்து கொண்ட மகிழ்ச்சியை உண்டாக்கும். உ.வே.சா. எழுதிய உரைநடை நூல்களை

வாழ்க்கை வரலாறுகள், ஏடு தேடிய வரலாறுகள் என்ற இரு வகையில் கி.வா. ஜகந்நாதன் பிரிக்கின்றார் (ப.71).

'மத்தியார்ச்சுனம்' என்பது 'திருவிடைமருதூரை'க் குறிக்கும். இத்தலத்தின் அனைத்துவகைச் சிறப்புகளையும் உ.வே.சா. எளிய இனிய உரைநடையில் அமைத்து 'மத்தியார்ச்சுன மான்மியம்' என்ற நூலை எழுதியுள்ளார்.

சென்னைப் பல்கலைக்கழகத்தில் உ.வே.சா. 1927ஆம் ஆண்டில் ஆற்றிய பத்துச் சொற்பொழிவுகளின் சுருக்கத்தைச் 'சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும்' என்ற தலைப்பில் 1929இல் வெளியிட்டார்.

இளமைக் காலத்தில் கோபால கிருஷ்ண பாரதியாரிடம் சிறிது இசைப் பயிற்சி பெற்றார். தம்முடைய இசையாசிரியரைப் பற்றி உ.வே.சா. 'கலைமகள்' இதழில் எழுதியது 1936இல் தனியொரு நூலாக வெளிவந்தது.

'கனம்' என்பது இசை வழிகளில் ஒன்று. அந்த வழியில் சிறந்த புலமையும் திறமையும் பெற்ற கிருஷ்ணையரின் வாழ்க்கையை உ.வே.சா. எழுதிய நூலே 'கனம் கிருஷ்ணையர்' என்பதாகும். இவர் உ.வே.சா.வின் தந்தை வழிப்பாட்டியின் அம்மான் என்பதும் இவண் சுட்டத்தகும்.

தமிழகத்தில் சிறந்து விளங்கிய இசையறிஞர்களுள் மகா வைத்யநாதையரும் ஒருவர். இவர் வரலாற்று நூல் 1936இல் வெளிவந்தது.

உ.வே.சா. தம் வாழ்நாளில் கேட்ட சுவையான செய்திகளைக் கட்டுரை வடிவில் கலைமகள், ஆனந்தவிகடன், சுதேச மித்திரன், தினமணி ஆகிய இதழ்களில் எழுதினார். இக் கட்டுரைகளை எல்லாம் தொகுத்து 'நான் கண்டதும் கேட்டதும்' என்ற தலைப்பில் 1936இல் வெளியிட்டார். இதில் நகைச்சுவை மிகுதியாக உள்ளது; சிந்தித்துச் சிரித்து மகிழக் கூடிய செய்திகள் அதிகம்.

'புதியதும் பழையதும்' என்ற நூல் 1936இல் வெளிவந்தது. இதில் ஒன்பான் சுவைகளும் அடங்கி, நகைச்சுவையே மிகுதியாக உள்ளது. இந்நூல் பல பதிப்புகளைப் பெற்றுள்ளது.

சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் திருவள்ளுவர் திருநாளின்போது உ.வே.சா. ஆற்றிய சொற்பொழிவு 1936இல் 'திருவள்ளுவரும் திருக்குறளும்' என்ற பெயரில் நூலாக வெளிவந்தது. இதில் திருக்குறள், திருவள்ளுவர், உரையாசிரியர்கள், குறள் கருத்துகளை எடுத்தாண்ட பழைய நூலாசிரியர்களைப் பற்றியும் கூறியுள்ள கருத்துகள் அனைவரும் கற்று உணரவேண்டியனவாம்.

'நல்லுரைக் கோவை' 4 பகுதிகளாக வெளிவந்துள்ளது. தமிழ் ஆராய்ச்சியில் தாம் அறிந்த பல செய்திகள், வரலாற்றுச் செய்திகள், உயரிய ஆராய்ச்சிக் கருத்துகள் போன்றவை அடங்கி யுள்ளன.

## பதிப்பித்த நூல்கள்

*நீலி இரட்டை மணிமாலை (1874), வேணுவனலிங்க விலாசச் சிறப்பு (1878), திருக்குடந்தைப் புராணம் (1883), மத்தியார்ச்சுன மான்மியம் (1885), சீவக சிந்தாமணி (1887), கச்சி ஆனந்தருத்திரேசர் வண்டுவிடு தூது (1888), திருமயிலைத் திரிபந்தாதி (1888), பத்துப்பாட்டு மூலமும் உரையும் (1889), தண்டபாணி விருத்தம் (1891), சிலப்பதிகாரம் (1892), திருப் பெருந்துறைப் புராணம் (1892), புறநானூறு (1894), மணிமேகலை (1898), ஐங்குறுநூறு (1903), சீகாழிக் கோவை (1903), திருவாவடு துறைக் கோவை (1903), வீரவனப் புராணம் (1903), சூரைமாநகர்ப் புராணம் (1904), திருக்காளத்தி நாதருலா (1904), திருப்பூவணநாத ருலா (1904), பதிற்றுப்பத்து (1904), திருவாரூர்த் தியாகராசலீலை (1905), திருவாரூருலா (1905), திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் (1906), தனியூர்ப் புராணம் (1907), தேவையுலா (1907), மண்ணிப்படிக்கரைப் புராணம் (1907), திருப்பாதிரிப் புலியூர்க் கலம்பகம் (1908), மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பிரபந்தத் திரட்டு (1910), திருக்காளத்திப் புராணம் (1912), திருத்தணிகைத் திருவிருத்தம் (1914), நன்னூல் மயிலைநாதருரை (1918), பரிபாடல் (1918), நன்னூல் சங்கரநமச்சிவாயருரை (1925), தக்கயாகப்பரணி (1930), தமிழ்விடு தூது (1930), பத்துப்பாட்டு மூலம் (1931), மதுரைச் சொக்கநாதருலா (1931), கடம்பர் கோயில் உலா (1932), சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்கள் (1932), பத்மகிரிநாதர் தென்றல்விடு தூது (1932), பழனிப் பிள்ளைத்தமிழ் (1932), மதுரைச் சொக்கநாதர் மும்மணிக்கோவை (1932), சங்கரலிங்க உலா (1933), திருக்கழுக்குன்றச் சிலேடை வெண்பா (1933), பாசவதைப் பரணி (1933), சங்கரநயினார் கோயிலந்தாதி (1934), வலிவல மும்மணிக் கோவை (1934), விளத்தொட்டிப் புராணம் (1934), ஆற்றூர்ப் புராணம் (1935), உதயண குமார காவியம் (1935), கலைசைக் கோவை (1935), களக்காட்டுச் சத்தியவாகீசர் இரட்டை மணிமாலை (1935), திரு இலஞ்சி முருகன் உலா (1935), பழமலைக் கோவை (1935), பழனி இரட்டை மணிமாலை (1935), இயற்பகை நாயனார் சரித்திரக் கீர்த்தனை (1936), திருமயிலை யமகவந்தாதி (1936), புறநானூறு மூலம் (1936), மான்விடு தூது (1936), குறுந்தொகை (1937), சிராமலைக் கோவை (1937), தமிழ்நெறி விளக்கம் (1937), திருவாரூர்க் கோவை (1937), அழகர் கிள்ளைவிடு தூது (1938), சிவசிவ வெண்பா (1938), திருக்கழுக்குன்றத்துலா (1938),*

திருக்காளத்திநாதர் இட்டகாமிய மாலை (1938), திருமலையாண்டவர் குறவஞ்சி (1938), குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு (1939), தணிகாசல புராணம் (1939), புகையிலைவிடு தூது (1939), மகர நெடுங்குழைக் காதர் பாமாலை (1939), கபாலீசுவரர் பஞ்சரத்தினம் (1940), திருக்குற்றாலச் சிலேடை வெண்பா (1940), வில்லைப் புராணம் (1940), செவ்வைச் சூடுவார் பாகவதம் (1941).

இவர் முதன் முதல் பதிப்பித்த புத்தகம் 'வேணுவனலிங்க விலாசச் சிறப்பு' என்பதாகும். 32 பக்கங்களைக் கொண்ட இந் நூலில் வேணுவனலிங்கத் தம்பிரான் வரலாற்றுச் சுருக்கம், திருவாவடுதுறை குமாரசுவாமித் தம்பிரான் இயற்றிய தோத்திரச் செய்யுட்கள், வேதநாயகம் பிள்ளை சுப்பிரமணிய தேசிகரைப் பாராட்டிப் பாடிய பாடல்கள் போன்றவை இருந்தன. இந்நூலின் முகப்புப் பக்கத்தில் இருந்தவை வருமாறு :

> உ. கணபதி துணை. திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்தைச் சேர்ந்த செவந்தி புரத்தில் மேற்படி ஆதீனம் பெரிய காறுபாறு வேணுவனலிங்க சுவாமிகள் இயற்றுவித்த சுப்பிர மணிய தேசிக விலாசச் சிறப்பு. மேற்படி திருவாவடு துறையில் மேற்படி சுவாமிகளியற்றுவித்த கொலு மண்டபமென்னும் வேணுவனலிங்க விலாசச் சிறப்பு. இவை பல வித்துவான்களாற் பாடப்பட்டு மேற்படி ஆதீன அடியார் குழாங்களிலொருவராகிய ஆறுமுக சுவாமிகளாலும் மேற்படி திருவாவடுதுறை வேங்கட சுப்ப ஐயரவர்கள் புத்திரராகிய சாமிநாத ஐயரவர்க ளாலும் பார்வையிடப்பட்டு, திருநெல்வேலி முத்தமிழாகர அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டன. வெகுதான்ய ஹு ஆனி மீ".

### பதிப்புப்பணி

உ.வே.சா. சங்க இலக்கியம், காப்பியங்கள், தல புராணங்கள், சிற்றிலக்கியங்கள், இலக்கணங்கள் என்ற வகையில் சுவடிகளைப் பதிப்பித்துள்ளார்.

சங்க இலக்கியத்தில் பத்துப்பாட்டு, புறநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், குறுந்தொகை ஆகிய ஆறு நூல்களை உரைகளோடு பதிப்பித்துள்ளார். குறுந்தொகைக்குப் பழைய உரை கிடைக்காததால், பிற்காலத்தில் ஐயரே புதிய உரை ஒன்று எழுதி, பதிப்பித்து வெளியிட்டுள்ளார். அகநானூறு, நற்றிணை,

கலித்தொகை ஆகிய மூன்று நூல்களை ஐயர் ஆராய்ந்து வைத்திருந்தும் அவற்றை வெளியிடவே இல்லை.

ஐம்பெருங்காப்பியத்தில் சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவக சிந்தாமணி ஆகிய மூன்றையும் உரைகளுடன் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். வளையாபதி ஏட்டுச்சுவடியைத் திருவாவடு துறை மடத்துப் புத்தகசாலையில் தாம் முதலில் ஏடுகள் தேடும் போது கண்டதாகவும், மறுபடியும் அதற்காகத் தேடிப் போகும்போது அது கிடைக்காமற் போய் விட்டது என்றும் தெரிவித் திருக்கிறார். ஆறுமுகநாவலர் தாம்பதிப்பிப்பதாக வெளியிட்டிருந்த பட்டியலிலும் வளையாபதி இடம்பெற்றிருந்தமை குறிக்கத்தகும். அக்காலத்தில் சிலப்பதிகாரம் புகார்க் காண்டம் பாடமாக இருந்தது. இந்நூலை இயற்றியவர் இளங்கோவடிகள் என்பது தெரியவில்லை. ஸ்ரீநிவாசராகவாசாரியர் என்பார் 'சேரமான் பெருமாணாயனார் இயற்றிய சிலப்பதிகாரம் புகார்க் காண்டம் மூலம் மட்டும்' என்று அச்சில் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்.

உ.வே.சா. காலத்தில் தமிழில் கோவைகளும், உலாக்களும், சிறு பிரபந்தங்களும், பக்தி நூல்களும், பெரியபுராணம், திருக்குறள் போன்ற இலக்கியங்களும், சில இலக்கண நூல்களுமே பெரு வழக்காகப் படிக்கப்பட்டு வந்தன.

திருவாவடுதுறை ஆதீனத்தில் இருந்த ஏடுகளெல்லாம் மிகப் பழமையானவை; எடுத்தால் கையில் ஒட்டிக்கொள்ளக் கூடியவை. ஒரு கட்டில் 'ஏட்டுத்தொகை' என்றும் 'சங்கநூல்போல் தோற்றுகிறது' என்றும் எழுதிக் குமாரசாமித் தம்பிரான் கட்டி வைத்திருந்தார் (ப. 555). ஒரு பழைய பாட்டிலிருந்து அந்த எட்டின் பெயர்களும் எனக்குத் தெரிய வந்தன (ப. 556). 'பத்துப் பாட்டு' என்ற பெயரோ, அதில் அடங்கியவை இன்ன பாட்டுக்கள் என்பதோ அக்காலத்தில் தெரிந்து கொள்ள இயலவில்லை (ப. 556).

மேலும் சங்க நூல்கள் ஓலைச்சுவடியில் உறங்கிக் கொண்டிருந்தன. அவற்றின் பெயர்களைக்கூடப் பாடம் சொல்வோர் உரைப்பதில்லை. அறிந்த சிலர் 'இறைச்சி நூல்கள்' என்று அவற்றை ஒதுக்கி வைத்த நிலையே அக்காலத்தில் இருந்ததாக உ.வே.சா. மிக வருந்திக் கூறுகின்றார். இந்த நிலையில்,

> சங்க இலக்கியங்களைப் பற்றிச் சேலம் இராமசாமி முதலியாரவர்கள் தெரிவித்த செய்திகளும் கொடுத்த சிந்தாமணி ஏட்டுப் பிரதியும், ஐயரவர் களின் மனக்கண்ணைத் திறக்கச் செய்தன. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய

> **சங்க இலக்கியங்களைப் பெறுவதற்கும், அவற்றை ஆராய்ந்து அச்சிடு வதற்கும் ஐயரவர்களைத் தூண்டி ஊக்கப் படுத்தியது முதலியார் அளித்த சிந்தாமணி ஏட்டுச்சுவடி** [43]

ஒருவகையாகப் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்னும் மூன்று தொகுதிகளில் அடங்கிய நூல்கள் இன்னவை என்று புலப்படுத்தும் பாடல்களைக் கண்டுணர்ந்த உ.வே.சா. அவற்றைத் தாம் முதன் முதலில் பதிப்பித்த சீவக சிந்தாமணியில் நச்சினார்க்கினியர் வரலாற்றில் சேர்த்திருந்தார். இவற்றைத் தஞ்சை சீனிவாச பிள்ளை பார்த்துப் பிரமித்து விட்டதாக என் சரித்திரத்தில் (ப. 620) உ.வே.சா. குறிப்பிடுகின்றார்.

சங்க இலக்கியங்களைப் படித்து அவற்றால் ஏற்பட்ட தோய்வினால் தமக்கு ஏற்பட்ட விளைவை,

> சங்க நூல்களாகிய உலகத்தின் காட்சிகள் பனி மூடிய மலை போல் என் கண்ணுக்குத் தோன்ற லாயின. பனிப் படலம் படர்ந்திருந்தாலும் மலையி னுடைய உயரமும் பருமையும் கண்ணுக்குப் புலப்படுதல் போல, தெளிவாக விளங்காவிட்டாலும் அந்தச் சங்க நூற் செய்யுட்கள் பொருளமைதியால் நிலத்தினும் பெரியனவாகவும், கடல் நீரினும் ஆழமுடையனவாகவும் தோன்றின

என்று கூறுகின்றார்.

உ.வே.சா. பதிப்பித்தலில் ஈடுபடுவதற்கு முன்னர், பிறரால் வெளியிடப்பட்ட நூல்களில் பெரும்பாலும் மூலம் மட்டுமே இருந்துள்ளது. 'முகவுரை' இல்லை. சில நூல்களில் 'விசய சூசிகை' என்னும் 'பொருளடக்கம்' ஒரே சங்கிலித் தொடராக அச்சிடப் பட்டிருக்கும். நூலின் முகப்புப் பக்கத்தில் இன்னார் இயற்றிய நூலை, இன்ன புலவரின் மாணவர், இன்னாரின் பொருளுதவியைக் கொண்டு, இன்னார் அச்சகத்தில், இன்னாரால் பரிசீலிக்கப்பட்டு, இன்ன ஆண்டு, இன்ன மாதம், இன்ன தேதியில் பதிப்பிக்கப்பட்டது என்ற விவரம் தரப்பட்டிருக்கும். நூலாசிரியரின் புகழைவிடப் பதிப்பித்தவரின் பெயர்தான் பெரிய எழுத்தில் அச்சிடப் பட்டிருக்கும். யார் பரிசீலித்து வெளியிடப்பட்டது என்பதுதான் அக்காலத்தில் சிறப்பாகக் கொள்ளப்பட்டு வந்தது.

ஒரு நூலைத் திருத்தமாகப் பதிப்பிக்க வேண்டுமென்றால் அவ்வளவு எளிதான செயலன்று. எந்த நூலைப் பதிப்பிக்கின்றோமோ அந்த நூலுக்குரிய சுவடிகளைத் தேடிச் சேகரித்தல் வேண்டும். சுவடிகள்

கிடைப்பது மட்டும் போதாது. ஏட்டில் இருப்பது அவ்வளவும் திருத்தமாக இராது. பல காலமாகப் பிழையாகவே வழங்கி வந்த பாடல்களை அவற்றில் பார்க்கலாம்; அவற்றுள் இதுதான் சுத்த பாடம் என்று தெரிந்து கொள்வதற்குப் படும் தொல்லை மிக அதிகம்.

உ.வே.சா. பதிப்பித்த முயற்சியை மட்டுமே அந்தந்த நூலின் முகவுரையில் அல்லது பதிப்புரையில் எடுத்துரைப்பது வழக்கம். தம் பதிப்புக்கு முன் அந்த நூலின் வேறு பதிப்புகள் வெளிவந்திருந்தால் அவற்றைப்பற்றிக் கூறும் வழக்கம் இல்லை.

உ.வே.சா. வெளியிட்ட சீவக சிந்தாமணி, பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம் ஆகிய பதிப்புகளில் காணப்பட்ட குறைகளை அவர்தம் அடுத்த பதிப்பில் களைந்து தெளிவுபடுத்தி வெளியிட்டார்.

உ.வே.சா. பதிப்பித்த நூல்களில் மேற்கொண்ட முறைகள் வருமாறு :

1. தமக்குக் கிடைத்த ஏட்டுச் சுவடிகளில், தாம் வெளியிட நினைக்கும் ஏட்டுப்படிகளை ஒருங்கே வைத்துக் கொண்டு ஒப்புநோக்கி, பாட பேதங்களைக் குறித்துக் கொண்டு, எது சரியான பாடம் என்பதைப் பலகால் எண்ணிச் சிந்தித்து, பலவகைகளிலும் சரியானதுதான் என்ற முடிவுக்கு வந்த பிறகே, சுத்த பாடமாக எழுதியும் எழுதுவித்தும் ஒழுங்கு படுத்தினார்.

2. ஒரு நூலைப் பதிப்பிக்கத் தீர்மானித்த உடனே, அதை எவ்விதமெல்லாம் பதிப்பிக்கலாம் என்று சிந்தித்து, ஆராய்ந்து, புதிய புதிய துறைகளிலும் புதிய புதிய முறைகளிலும் தகவல்களைச் சேகரித்து, நூலைப் பதிப்பிக்கும் வேலையில் ஈடுபடுவார்.

3. சீவக சிந்தாமணி நூலில் உள்ள சமண சமயக் கருத்துகளைச் சமணப் பெண்மணி வாயிலாகக் கேட்டறிந்தார்.

4. இவர் அமைத்துள்ள நூலாராய்ச்சி சிறப்பு வாய்ந்தது.

5. மூலநூலைப் பதிப்பிக்கும் நூலின் உரையைப் பாடத்தின்கீழ் எழுதி, அடிக்குறிப்பில் அந்தப் பக்கத்திலேயே பாடபேதம், மேற்கோள் முதலியவற்றைக் குறித்து விடுவார்.

6. இவர் பதிப்பித்த நூல்களில் விரிவான முகவுரை அமைப்பு காணப்படும். இதில் நூல் அமைப்பு, பெயர்க் காரணம், இலக்கணம், வரலாறு ஆகிய வற்றைக் கூறி, பின்னர் அந்த நூலைத் தாம்பெற்ற வரலாறு, தமக்குச் சுவடிகள் கிடைத்த விவரம், தாம் ஆராய்ந்த முறைகளின் விளக்கம், அந்தப் பதிப்புக்குப் பொருளுதவி புரிந்தவர்கள், உடனிருந்து உதவியவர்கள் அனைவருக்கும் நன்றியும் வாழ்த்தும் கூறி அமைத்திருப்பார்.

7. நூலைச் சுருங்கிய அளவில் தொகுத்து, எளிய உரைநடையில் அமைப்பார்.

8. நூலாசிரியர், உரையாசிரியர் ஆகியோரின் வரலாறு இடம் பெற்றிருக்கும்.

9. தொகை நூல்களில் பாடினோர் வரலாறு, பாடப் பட்டோர் வரலாறு, உரையாசிரியர் வரலாறு எனத் தொகுத்து எழுதியிருப்பார்.

10. பெயரகராதி, சொல்லகராதி, மேற்கோள் அகராதி, விளங்காத மேற்கோள் அகராதி, செய்யுள் முதற் குறிப்பு அகராதி, ஆய்வுக்குப் பயன்பட்ட அகராதி, நூலாலும் உரையாலும் அறியப்படும் அரசர் முதலியோர் பெயர்களை வகைப்படுத்தி எளிதாக உணர்ந்து கொள்ளும் வகையில் தயாரித்த அகராதி, பொய்கைகள், தெய்வங்கள், புலவர்கள் பெயர்களுக்குத் தனித்தனி அகராதி, தொகை அகராதி, அபிதான விளக்கம் ஆகியன இடம் பெறும். இவையெல்லாம் நூலைப் பயில்வோர் பயன்பெற வேண்டும் என்ற நோக்கில் அமைத்திருப்பார்.

*உ.வே.சா.வின் பதிப்பு நூலின் 'முகவுரை'யைப் படித்தாலே அந்த நூல் முழுவதையும் தெரிந்து கொள்ளும் வகையில் விரிவான அளவில் முகவுரையை அவர் அமைத்திருப்பார். இவ்வாறு உ.வே.சா. சிறப்பான முறையில் உழைத்து, பதிப்பித்துள்ளதற்குக் காரணம் அவரே பதிப்பாசிரியராகவும் பதிப்பாளராகவும் இருந்தமையே ஆகும். நூற்பதிப்புக் குறித்து,*

> நூற்பதிப்பு விஷயத்தில் வரவரப் பாடங்கள் திருந்துவதும், உண்மைப் பொருள் தெளிவாவதும், புதிய புதிய செய்திகள் புலப்படுவதும் புதியனவல்ல. எடுத்த

எடுப்பிலே முற்றத் திருந்திய பதிப்பை வெளியிடுவதென்பது இயலாத காரியம். என் முதற் பதிப்புக்களில் அமைந்திருந்த பல பிழைகளைப் பிற்காலத்தில் நானே திருத்திப் பதிப்பித்திருக் கிறேன். புதிய புதிய ஆராய்ச்சி செய்யும்போது கிடைக்கும் அறிவால் பல காலமாகத் திருந்தாத செய்திகள் திருந்தியதுமுண்டு (ப. 653)

என்று உ.வே.சா. கூறுவதும் இவண் சிந்திக்கத்தகும்.

ஐங்குறுநூற்றைச் சுருக்கமான முறையில் 1902இல் உ.வே.சா. வெளியிட்டார். இதைக் கண்ணுற்ற யாழ்ப்பாணத்து அன்பர்,

இப்படி எல்லாவற்றையும் சுருக்கிக் கொள்வீர்கள் என்று நான் நினைக்கவில்லை. தங்களிடமிருந்து பெற்றிருக்க வேண்டிய பெரும் பயனைத் தமிழ்நாடு இழந்துவிட்டது. அதற்காக நான் மிகவும் வருந்து கிறேன்

என்று ஒரு கடிதம் எழுதினார்.

ஒரு நூலைப் பதிப்பிப்பதற்குப் பல ஆண்டுகள் எடுத்துக் கொண்டுள்ளார். 'பெருங்கதை' நூலைப் பதிப்பிப்பதற்கு ஏறத்தாழ 46 ஆண்டுகள் எடுத்துள்ளார். பொறுமையாக இருந்து, அந் நூலைப் பற்றிய அனைத்து விவரங்களையும் கருத்துகளையும் திரட்டித் தாம் நன்கு கண்டு தெளிந்த பிறகே அதனை வெளியிடத் தீர்மானித்தார்.

அதேபோன்று 268 கண்ணிகளை உடைய 'தமிழ்விடு தூது' நூலைக் குறிப்புரையுடன் பதிப்பிப்பதற்கு 17 ஆண்டுகள் எடுத்துள்ளார். ஒற்றைப் பிரதிமட்டும்தான் இந்நூலுக்குக் கிடைத்தது. ஒப்பிட்டுப் பார்ப்பதற்குக்கூட வேறு பிரதியே கிடைக்கவில்லை. அந்நூலில் கூறும் செய்திகளைத் தொகுக்கவும், குறிப்புகளை ஆராயவும், பதிப்பு வரையறை செய்து கொள்ளவும் அவருக்கு இத்தனை ஆண்டுகள் தேவைப்பட்டன.

நூல் பதிப்பைப் பொறுத்த அளவில் மூலம் பெரிய எழுத்திலும், உரை அதற்கடுத்த சிறிய எழுத்திலும், இவருடைய குறிப்புரை, ஒப்பு, மேற்கோள் முதலியன அதனினும் சிறிய எழுத்திலும், பிரதிபேதம் வேறுபட்ட எழுத்திலும் அமைந்திருக்கும். இம்முறையினால், ஒவ்வொரு பிரிவையும் வேறுபடுத்தி அறிவது எளிதாகும்.

இவ்வாறு ஒவ்வொரு பகுதியையும் நுட்பமாகப் பார்த்துப் பார்த்து அச்சிட்டமையால், மேல் நாட்டுப் பதிப்புகளுக்கு நிகராகவும் சிலசமயம் மேலானவையாகவும்கூட இவர் பதிப்புகள் விளங்கின.

இவரது குறுந்தொகைப் பதிப்பு மேல்நாட்டுப் பதிப்புகளிலும் சிறந்து விளங்குவதாக அறிஞர் கூறுவர்.

உ.வே.சா.வின் பதிப்புப்பணிக்கு உதவியவர்கள் பலராவர். ஏம்பலை பொன்னுசாமிப் பிள்ளை, திருவாவடுதுறை பொன்னுச்சாமி செட்டியார், மணலூர் சொக்கலிங்கத் தம்பிரான், வே.வேங்கடராஜுலு ரெட்டியார் முதலானோர் உதவியவர்களாவர். சுவடியைப் பிரதி செய்து கொடுத்தவர்களுள் கிருஷ்ணசாமி நாயுடு முக்கியமானவர். மயிலை அருணாசல உபாத்தியாயர், அ. சண்முகம் பிள்ளை, பரங்கிப்பேட்டை இலட்சுமணப் பிள்ளை, சுவாமிநாத பண்டிதர் முதலானோர் பிரதிகள் பெற்று உ.வே.சா.வுக்கு உதவியுள்ளனர்.

உ.வே.சா. தாம் பதிப்பிக்க எடுத்துக்கொண்ட நூலுக்கான சுவடிகளைத் தேடித் தொகுத்தல், நூல் தொடர்பான புறத்தகவல்களைத் திரட்டல், பாட வேறுபாடு தருதல், பாடம் தொடர்பான ஏராளமான ஒப்பீட்டுக் குறிப்புகளைத் தருதல், நூலின் முன்னும் பின்னும் தருகின்ற பல்வேறு இணைப்புகள், திருத்தியும் விரிவாக்கியும் வரும் அடுத்தடுத்த பதிப்புகளில் காட்டும் தொடர் கவனம், பதிப்பாசிரியருக்கே இருக்க வேண்டிய பொறுமை, நிதானம், காலங்கருதாது உழைத்தல் போன்றவை அவரது கடின உழைப்புக்குச் சான்று கூறுகின்றன. மரபான தமிழ்ப் புலமையைக் கொண்டு தொடர்ச்சியான பயிற்சியின் மூலமாக மட்டுமே பதிப்பு நுட்பங்களை உள்வாங்கியவர். மூலத்தை அடி பிரித்துச் சீர் பிரித்தல் என்பது நவீன பதிப்பு முறையின் ஒரு கூறாகும். இம்முயற்சியானது புலமைத் தளத்திலிருந்து பொது மக்கள் படிப்பதற்குரிய தளத்திற்கு அந்த நூலை எடுத்துச் செல்லும் வழிமுறையாகும்.

இவரது தொடக்கக்காலப் பதிப்புக்கும் பிற்காலப் பதிப்புக்கும் பல புதிய புதிய மாற்றங்களைக் காணமுடிகின்றது. இது பதிப்புத்துறையின் வளர்ச்சியாகும். ஒரு நூலை முதலில் பதிப்பித்த போது அவருக்குக் கிடைத்த ஏடுகள், பிற செய்திகள் போன்றவற்றை அதே நூலின் அடுத்தடுத்த பதிப்பில் ஈடுபடும்போது கிடைத்த தகவல்கள், ஏடுகள் போன்றவற்றின் அடிப்படையில் அந்தந்த நூலின் பதிப்பு முறையில் மாறுதல்கள் ஏற்பட்டிருப்பதைக் காணமுடிகின்றது.

உ.வே.சா. பதிப்புக்கு முன்பெல்லாம் நூல்களைப் பதிப்பிடும் தொழிலில் ஈடுபட்ட தமிழறிஞர்களில் பெரும்பாலோர் தமக்குக் கிடைத்த இரண்டொரு பிரதிகளை வைத்துக்கொண்டு, அவற்றிலுள்ள 'கரலிகித வழுஉக்களை'க் களைந்து திருத்தியும் புதுக்கியும் நூல்களை அச்சிடுவதை வழக்கமாகக் கொண்டிருந் தனர். ஆனால் உ.வே.சா. இந்த முறையைப் பின்பற்றவில்லை. பல

இடங்களில் இருந்தும் பல பிரதிகளை முயன்று தேடிப் பெற்று அவற்றைத் தொகுத்து வைத்துக் கொள்வதை முதலாவது வேலையாகச் செய்து கொண்டார். அதன் பின்னர் அவற்றுள் சிறந்த ஒன்றைத் தாளில் பெயர்த்தெழுதி மற்ற பிரதிகளோடு ஒப்பிட்டுப் பாட வேறுபாடுகளைக் குறித்துக் கொள்வார். இவ்வாறு குறித்துக் கொண்டபின் அந்த நூலைப் பன்முறையும் வாசித்துப் பொருளையும் நன்கு தெரிந்து கொள்ள முயல்வார். இதற்குப் பின் இந்நூற்பொருள்பற்றி எழுந்த பிற நூல்களையும் கற்றுப் பொருள் விளக்கம் செய்ய முற்படுவார். பின்னும் தெரியாதன உளவாயின் வடமொழி, தென்மொழி நூல்களிலே வல்லவர்களையும் நூல் எந்தச் சமயத்திற்குரியதோ அந்தச் சமயச் சாத்திரங்களில் வல்லவர்களையும் அடுத்து விசாரித்துப் பொருள் தெரிந்து கொள்வார். விளக்கத்திற்குரிய அனைத்தையும் முறைப்படக் குறித்து வைத்துக் கொண்டு அச்சிடுவதுதான் சிறந்த முறை என்று கருதி அவ்வாறே செய்து வந்தார்.

தமிழ் நூல்களைப் பலரும் வாங்கிப் படிக்கவேண்டுமென மிகக் குறைந்த விலையில் அவற்றை அச்சிட்டு வெளியிட்டது ஒரு சிறப்பாகும். தாம் 44 ஆண்டுகள் வரை ஆய்ந்து வெளியிட்ட 'தக்கயாகப்பரணி' (552 பக்கங்கள்) நூலுக்கு விலை ரூ 4-00 என்றும், தாம் 46 ஆண்டுகள் வரை ஆய்ந்து வெளியிட்ட 'பெருங்கதை' (1132 பக்கங்கள்) நூலுக்கு விலை ரூ 7-50 என்றும் வழங்கியது இவர்தம் தமிழுணர்வைக் காட்டும். இவ்வாறே பிற பதிப்புகளையும் இவர் குறைந்த விலைக்கே அமைத்தார்.

### ஏடு தேடுதல்

உ.வே.சா. தாம்பதிப்பித்த நூல்களுக்குரிய சுவடிகளைத் தமிழகத்தின் பல்வேறு ஊர்களுக்கும் களப்பணியாகச் சென்று ஏடு தேடும் பணியைச் செய்துள்ளார். ஏறத்தாழ ஐம்பது ஊர்களுக்கும் மேல் சென்று ஏடு தேடியதாக அவரே குறிப்பிடுகின்றார்.

திருவாவடுதுறை ஆதீனத்தில் பல சுவடிகள் இருந்தன. அத்துடன் வித்துவான்கள், புலவர்கள், கவிராயர், ஜமீன்தார், ஆதி சைவர்கள், வீர சைவர்கள், சித்த மருத்துவர்கள் ஆகியோரது இல்லங்களிலும், கோயில்களைச் சார்ந்த புத்தகசாலைகளிலும், தருமபுரம், திருப்பனந்தாள், வானமாமலை முதலான மடங்களிலும், சென்னையிலுள்ள அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்திலும், தஞ்சைச் சரசுவதி மகால் நூலகம், மதுரைத் தமிழ்ச் சங்கத்திலும் இருந்த சுவடிகளைத் தம்பதிப்புப் பணிக்காக உ.வே.சா. பெற்றுள்ளார்.

கும்பகோணம், திருநெல்வேலி, திருச்சிராப்பள்ளி, அம்பாசமுத்திரம், சேலம், தஞ்சாவூர், பாகற்பட்டி, தாரமங்கலம்,

கரிவலம்வந்த நல்லூர், களக்காடு, குன்றக்குடி, குழித்தலை, பாளையங்கோட்டை, திருவைகுண்டம், பெருங்குளம், ஆறுமுகமங்கலம், ஆழ்வார் திருநகரி, அம்பாசமுத்திரம், நாங்குனேரி, திருப்பெருந்துறை, மிதிலைப்பட்டி, செவ்வூர், சிறுவயல், விக்கிரமசிங்கபுரம், கடையநல்லூர், ஊற்றுமலை, குற்றாலம், சொக்கம்பட்டி, வாசுதேவநல்லூர், புளியங்குடி, தென்காசி, சென்னை முதலான தமிழ்நாட்டின் பல்வேறு ஊர்களுக்கு உ.வே.சா. ஏடு தேடுவதற்காகச் சென்றுள்ளார்.

ஏடு தேடிச் சென்றபோது உ.வே.சா.வுக்குப் பல அனுபவங்கள் கிடைத்தன. ஒருசில இடங்களில் ஏடுகளை அவ்வளவு சுலபமாகக் காட்டவில்லை. இப்போதெல்லாம் அவற்றைத் தொட முடியாது. கலைமகள் வழிபாட்டின்போதுதான் ஏடுகளை அடுக்கி அர்ச்சனை செய்து வழிபட்டு அதன்பிறகுதான் அவற்றை எடுக்க வேண்டும் என்று கூறினர். பல இடங்களில் கிடைத்ததைக் கிடைத்த நேரத்தில் சாப்பிட்டு விட்டு ஏடுகளைத் தேடியுள்ளார். சில நேரங்களில் எதுவும் சாப்பிட முடியாமல் பட்டினி கிடக்க நேர்ந்த அனுபவமும் உண்டு. சிலரிடம் எவ்வளவோ நயந்து கெஞ்சிப் பிணை கொடுத்துச் சுவடிகளைப் பெற்றார்.

ஏடு தேடுதல் தொடர்பாக உ.வே.சா.,

> தமிழ் ஆராய்ச்சியில் நான் ஈடுபட்ட பிறகு தமிழ் ஏட்டுச் சுவடிகளைத் தேடுவது என் வாழ்க்கையில் ஒரு முக்கியமான வேலையாகிவிட்டது. அச்சிட்ட புத்தகமோ, அச்சிடாததோ எதுவானாலும் சுவடியின் உருவத்திலே காணும்பொழுது ஏதோ ஒரு தெய்வத்தின் உருவத்தைக் காண்பது போலவே நான் எண்ணுவது வழக்கம். சுவடிகளைத் தேடி, அவை இருக்குமிடம் சென்று மூலை முடுக்குகளிற் கிடக்கும் அவற்றைத் தொகுத்து ஆராய்வதில் என் உள்ளம் ஒரு தனி இன்பத்தை அடையும். என் உடலில் முதுமைப் பருவத்தின் தளர்ச்சி ஏறிக் கொண்டே வந்தாலும், என் உள்ளத்தில் மட்டும் ஏட்டுச் சுவடிகளிலுள்ள பற்று இறங்கவே இல்லை. ஏட்டுச் சுவடிகளைத் தேடி வருவதை முறையாகவே செய்து வந்தேன். எனக்கு அதுவே தீர்த்த யாத்திரை யாகவும் தல யாத்திரையாகவும் உள்ளது!

என்று கூறுகின்றார். இதிலிருந்து சுவடி தேடுவதில் உ.வே.சா.வுக்கு இருந்த ஈடுபாடு எத்தகையது என்பதை உணரமுடிகின்றது.

**ஏடுகளின் நிலை**

ஏடுகளைத் தேடிச் சென்றபோதும், அவற்றைப் பதிப்பித்த போதும் அந்தந்த நூலின் ஏடுகள் எவ்வாறிருந்தன என்பதை ஒவ்வொரு நூலின் 'முகவுரை'யிலும் உ.வே.சா. குறிப்பிட்டுச் சென்றுள்ளார்.

பெரும்பாலான ஏட்டுச் சுவடிகள் பழுதுபட்டும், சிதைந்தும், ஒடிந்தும், இடையிடையே முறிந்தும், மிகவும் சிதிலமுற்றும் தெளிவாக விளங்காத நிலையில் இருந்தன (ப. 688).

கடையநல்லூருக்கு ஏடு தேடிச் சென்றபொழுது அந்த ஊரிலுள்ள வித்துவான் ஒருவர் வீட்டில் இருந்த மூன்று பெட்டிகளுள் ஒரு பெட்டியை உ.வே.சா. திறந்து பார்த்தார். அப்பெட்டி முழுவதும் எலிப்புழுக்கை மயமாக இருந்தது. எலி தமிழ் நூலை உண்டு ஜீரணித்தது போக, விட்டு வைத்த துண்டுகளே அப்புழுக்கையோடு இருந்தன (ப. 696).

பல ஏடுகள் வரிசையாக இல்லாமல் நிலைமாறிக் கோக்கப்பட்டிருந்த நிலையும் உண்டு.

> ஏட்டுச் சுவடிகளிலோ மேற்கோட் செய்யுளைக் கண்டுபிடிப்பதே கஷ்டம். நூல்களைப் பாடங் கேட்பவர்கள் தம் ஆசிரியர் கூறும் விஷயங்களை அங்கங்கே சுவடிகளில் இரண்டு வரிகளுக்கிடையே எழுதி வைப்பதுண்டு. ஏடுகளில் உள்ளவற்றை உள்ளவாறே பிரதி செய்து அதற்குரிய ஊதியம் பெற்று ஜீவனம் செய்பவர்கள் அந்தக் குறிப்புக்களையும் பழைய மூலத்தோடும் உரையோடும் சேர்த்து எழுதி விடுவார்கள். ஆராய்ச்சி செய்யும் போது அவற்றைத் தனியே பிரித்தறிவது சில சமயங்களில் மிகவும் சங்கடமாக இருக்கும் (ப. 726)

என்று உ.வே.சா. கூறுவது இவண் நினைக்கத்தகும்.

புறநானூறு நூலைப் பதிப்பித்தபோது உ.வே.சா.வுக்குக் கிடைத்த ஏட்டுச் சுவடிகளின் நிலையைப் பின்வருமாறு கூறுகின்றார்:

> உரையில்லாத மூலங்கள் எழுத்துஞ் சொல்லும் மிகுந்தும் குறைந்தும் பிறழ்ந்தும் திரிந்தும் பலவாறு வேறுபட்டிருந்ததன்றி, இவற்றுள், சில பாடல்களின் பின் திணை எழுதப்படாமலும் சிலவற்றின்பின் துறை எழுதப்படாமலும் சிலவற்றின்பின் இரண்டு மெழுதப்படாமலும் சிலவற்றின் பின் பாடினோர் பெயர் சிதைந்தும் சிலவற்றின்பின் இருவர் பெயருமே

> சிதைந்தும் சில பாடல்கள் இரண்டிடத்தெழுதப்பட்டு இரண்டெண்களை யேற்றும் வேறு வேறிடத்தில் இருத்தற்குரிய இரண்டு பாடல்கள் ஒருங்கெழுதப்பட்டு ஓரெண்ணை யேற்றும் சில முதற்பாகங் குறைந்தும் சில இடைப்பாகங் குறைந்தும் சில கடைப்பாகங் குறைந்தும் சில முற்றுமின்றியும் ஒரு பாடலின் அடிகளுள் ஒன்றும் பலவும் வேறு பாடல்களின் அடிகளோடு கலந்தும் ஓரடியே ஒருபாட்டுட் சிலவிடத்து வரப்பெற்றும் பொருளுண்மை காணாத வண்ணம் இன்னும் பலவகைப்பட மாறியும் கையெழுத்துப் பிரதிகள் இருந்தன. இவற்றைப் பரிசோதித்து வருகையில், இந்நூலிலிருந்து வேறு நூல்களினுடைய பழைய உரைகளின் இடையிடையே உரையாசிரியர்களால் பூர்த்தியாகவும் சிறிது சிறிதாகவும் எடுத்துக்காட்டப் பட்டிருந்த உதாரணங்கள், சிற்சில பாடல்களிலுள்ள வழுக்களை நீக்கிச் செவ்வை செய்து கொண்டு பொருளுண்மை காணுதற்கும், சிற்சில பாடல்களிற் குறைந்த பாகங்களை நிரப்பிக் கொள்வதற்கும் பிறழ்ந்து கிடக்கும் சில பாடல்களை ஒழுங்குபடுத்தி வரையறை செய்து கொள்ளுதற்கும் பெருந்துணை யாக இருந்தன (பக். 737-738)

வெளிநாட்டில் தமிழ்ச் சுவடிகள் இருப்பதை அறிந்த உ.வே.சா. தமிழ்நாட்டில் தங்கள் பரம்பரைச் செல்வமாகக் கருதற்குரிய ஏடுகளை நீருக்கும் நெருப்புக்கும் இரையாக்கிவிட்டவர்களைப் பார்த்து வருந்தினார் (ப. 689).

கரிவலம்வந்த நல்லூரில் வரகுண பாண்டியருடைய ஏட்டுச் சுவடிகள் அங்குள்ள கோயிலில் வைத்திருப்பதைக் கேள்வியுற்ற உ.வே.சா. அவ்வூருக்குச் சென்றார். அவ்வூரிலுள்ள தர்மகர்த்தாவைச் சந்தித்து அந்த ஏடுகளைப் பற்றிக் கேட்டார். ஆனால் அவர் அந்த ஏடுகள் அனைத்தும் ஆகம சாத்திரத்தில் சொல்லியவண்ணம் செய்து விட்டதாகக் கூறினார். அதாவது பழைய ஏடுகளைக் கண்ட கண்ட இடங்களிலே போடக்கூடாதாம். அவற்றை நெய்யில் தோய்த்து ஹோமம் செய்துவிட வேண்டுமாம் என்று சொல்லியபடி, குழி வெட்டி அக்கினி வளர்த்து நெய்யில் தோய்த்து அந்தப் பழைய சுவடிகள் அனைத்தையும் ஆகுதி செய்து விட்டார்கள் என்றார்.

வரகுண பாண்டியர் ஏடுகள் அனைத்தும் அக்கினிக்கு உணவாயின என்ற செய்தியைக் கேட்ட உ.வே.சா. இப்படி எங்காவது ஆகமம் சொல்லுமா? அப்படிச் சொல்லியிருந்தால் அந்த

*ஆகமத்தையல்லவா முதலில் ஆகுதி செய்ய வேண்டும் என்று தமக்குக் கோபம் கோபமாக வந்தது என்கிறார். 'இனி இந்த நாட்டிற்கு விடிவு உண்டா!' என்று மனம் நொந்ததாகக் கூறுகின்றார் (பக். 677-678).*

*அம்பாசமுத்திரத்திற்கருகில் உள்ள ஊர்க்காட்டு வாத்தியார் வீட்டில் வண்டிக்கணக்காகச் சுவடிகள் இருந்தன. அந்த வாத்தியார் காலத்திற்குப் பிறகு அவ்வீட்டிலிருந்தவர்கள் அந்தச் சுவடிகள் அனைத்தையும் எவ்விதப் பயனுமின்றி இடத்தை அடைத்துக் கொண்டிருப்பதாகக் கருதி அச்சுவடிகளைத் தேர்போலக் கட்டி ஆடிப் பதினெட்டில் வாய்க்காலில் விட்டு விட்டனர். இச்செய்தியைக் கேள்விப்பட்ட உ.வே.சா.,*

> தமிழின் பெருமையைச் சொல்லிய பெரியோர் சிலர் அது நெருப்பிலே எரியாமல் நின்றதென்றும், நீரிலே ஆழாமல் மிதந்ததென்றும் பாராட்டியிருக்கிறார்கள். அதே தமிழ் இன்று நெருப்பில் எரிந்தும், நீரில் மறைந்தும் புறக்கணிக்கப்படுவதை அவர்கள் பாராமலே போய் விட்டார்கள் (ப. 683)

*என்று மிகுந்த மனவருத்தத்துடன் தெரிவித்துள்ளார்.*

### பெற்ற இன்னல்கள்

*உ.வே.சா. ஏடு தேடிய போதும், அதைப் பதிப்பித்த போதும் பல்வேறு இன்னல்களுக்கு ஆளானார். முதன்முதலாகப் பதிப்பித்த சீவக சிந்தாமணிப் பிரதிகளை ஆராய்ந்த போது அவர் பெற்ற இன்னல்களைச் சுருக்கமாகத் தெரிவித்துள்ளார். அப்பகுதி வருமாறு:*

> எழுத்து சொல்லும் மிகுந்தும் குறைந்தும் பிறழ்ந்தும் திரிந்தும் பலவாறு வேறுபட்டுக் கிலமுற்றிருந்த இந்நூலுரைப் பழைய பிரதிகள் பலவற்றையும் பலகால் ஒப்புநோக்கி இடையறாது பரிசோதனை செய்து வந்த பொழுது, கவிகளின் சுத்த வடிவத்தையும் உரையின் சுத்த வடிவத்தையும் கண்டுபிடித்ததற்கும், உரையினுள் விசேடவுரை இன்னது பொழிப்புரை இன்னது என்று பிரித்தறிதற்கும், மேற்கோள்களின் முதலிறுதிகளைத் தெரிந்து கோடற்கும், பொழிப்புரையை மூலத்தோடு இயைத்துப் பார்த்தற்கும், பிழையைப் பிழையென்று நிச்சயித்துப் பரிகரித்தற்கும், பொருள் கோடற்கும் எடுத்துக் கொண்ட முயற்சியும், அடைந்த வருத்தமும் பல. அப்படி அடைந்தும் சிலவிடத்துள்ள இசைத் தமிழ் நாடகத் தமிழின் பாகுபாடுகளும், மற்றுஞ் சில பாகமும்

நன்றாக விளங்கவில்லை. அதற்குக் காரணம் அவ் விசைத் தமிழ் நாடகத் தமிழ் நூல் முதலியவைகள் இக்காலத்துக் கிடையாமையே! (ப. 611)

*தவிர, பல சொற்கள் தெளிவாகத் தெரியாத நிலையிலும் பல இன்னல்களுக்கு உ.வே.சா. ஆளானதையும் காணமுடிகிறது.*

அதிருஷ்டமும் துரதிருஷ்டமும் மனிதர்களுக்குச் சேர்ந்தே வருகின்றன (ப. 615)

எதைத் தொட்டாலும் சிரமத்தின் மேற் சிரமமாக இருக்கிறது (ப. 671)

ஒருமுறை பட்ட கஷ்டம் பல நூற்பதிப்புக்கு உபயோகமாக இருந்தது (ப. 726)

*என்றிவ்வாறு 'என் சரித்திரத்'தில் தாம்பட்ட இன்னல்களைக் கூறியுள்ளார்.*

இடையின ரகரத்துக்கும் வல்லின றகரத்துக்கும் பேதந் தெரியாமல் தடுக்கி நின்ற இடங்கள் பல. உரை இது, மூலம் இது, மேற்கோள் இது என்ற வேறுபாடு தெரியாமல் முட்டுப்பட்ட சந்தர்ப்பங்கள் பல. நச்சினார்க்கினியருடைய அன்வயத்திலே வரும் பாடற் பகுதிகளைத் தேடிக் கண்டுபிடிக்க முடியாமல் மயங்கிய சமயங்கள் பல. ஓர் ஏட்டுக்கும் மற்றோர் ஏட்டுக்கும் இடையே உள்ள பாட பேதங்களால் அடைந்த கலக்கத்திலிருந்து மீள வழியின்றி மயங்கிய நிகழ்ச்சிகள் பல. உரைக்கு மூலமும் மூலத்துக்கு உரையும் கிடைக்காமல் பலமுறை இடர்ப்பட்டேன். மேற்கோள் எதற்காக உரையாசிரியர் காட்டுகிறா ரென்பது விளங்காமல் பல தடவை தயங்கினேன். ஜைன விஷயங்களில் நுணுக்கமாகச் சில செய்திகள் விளங்காமையால் மேலே வாசிக்க முடியாமல் பல காலம் தடுமாறி நின்றேன். இலக்கணச் செய்திகளை அமைத்துக் கொள்ள வகை தெரியாமல் பலவாறு யோசித்து யோசித்துப் பல சமயங்களில் குழம்பினேன்" (பக். 560-561)

சீவக சிந்தாமணி உரையிலும் பத்துப்பாட்டு உரையிலும் 'என்றார் பிறரும்' என்பதைக் கண்டு அந்தப் பிறர் யாரென்று தேடித் தேடி ஆராய்ந்து கிடைத்தவற்றைத் தெரிந்து கொள்வதற்காக நான் பட்ட சிரமம் இவ்வளவென்று சொல்ல முடியாது. (ப. 670)

*இவ்வளவு இன்னல்களைப் பெற்றாலும் 'பத்துப்பாட்டு' நூல் அச்சிட்டு முடிந்தநிலையில்,*

> இரவு பகலின்றி உழைத்த காலங்களிலெல்லாம் வாராத சோர்வு, முடித்து விட்டோம் என்ற அளவில் காத்து நின்று பாய்வதுபோல என்னை அமிழ்த்தியது. அச்சுக்கூடத்தில் ஓரிடத்தில் படுத்து நித்திரை செய்யலானேன்; சுகமாகத் தூக்கம் வந்தது (ப. 613)

*என்று கூறுகின்றார்.*

*சிந்தாமணி நூல் அச்சாகி முடிந்ததும் முதன்முதலில் அப்புத்தகங்களை எடுத்துக் கோலம் போட்ட ஒரு பலகையின் மேல் வைத்து மாலை சாத்திக் கற்பூர நீராஞ்சனம் செய்து மஞ்சள் நீர் சுற்றி உ.வே.சா.வின் தாயார் உ.வே.சா.வின் கையில் எடுத்து அளித்து வாழ்த்துத் தெரிவித்தார். இவற்றையெல்லாம் அவரது தந்தையார் கண்குளிரக் கண்டு மகிழ்ந்தார் (ப. 618).*

## பாட வேறுபாடுகள்

*உ.வே.சா. பாட வேறுபாடுகள் தொடர்பாகக் கொண்டிருந்த கருத்துகள் பின்வருமாறு :*

1. கம்பராமாயணம் படித்த காலத்தில் கண்ட பாட பேதங்களைக் கைப்புத்தகத்திலும் வேறு கடிதத்திலும் தனித்தனியே குறித்து வைத்துக் கொண்டார் (ப. 403).
2. சீவக சிந்தாமணியின் பல சுவடிகளை ஒப்பிட்டுப் பார்த்துப் பாட பேதங்களைக் குறித்துக் கொண்டார் (ப. 547).
3. பாடபேதக் கடலுக்குக் கரை காணவே முடியவில்லை. மனம்போன போக்கிலே எழுதிய கனவான்களால் விளைந்த விபரீதம் எவ்வளவோ ஏட்டில் உண்டு (ப. 559).
4. ஓர் ஏட்டுக்கும் மற்றோர் ஏட்டுக்கும் இடையே உள்ள பாட பேதங்களால் அடைந்த கலக்கத்திலிருந்து மீள வழியின்றி மயங்கிய நிகழ்ச்சிகள் பல (ப. 561).
5. பாடபேதங்கள் வந்து போரிடும் (ப. 570).
6. பிழையுள்ள பிரதிகள் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகக் கிடைக்கின்றனவோ அவ்வளவுக்

கவ்வளவு உபயோகமில்லாத பாடபேதங்கள் அதிகமாகிக் குழப்பமும் மிகுதியாகும். அளவற்ற பாட பேதங்களைக் காட்டி, 'இவ்வளவு பிரதிகளைப் பார்த்தோம்' என்பதைப் புலப்படுத்தலாமேயன்றி விஷயத்தை விளக்கமாகத் தெரிந்து கொள்வது மிகவும் கடினம் (ப. 587).

7. ஏட்டுச் சுவடிகளிற் கண்ட பாடங்களின் வேறு பாட்டைக் கண்டு கண்டு என் மனம் புண்ணாகி யிருந்தது (ப. 611).

8. இன்று இருக்கும் ஒரு பாடம் நாளைக் கிடைக்கும் புதிய பாடத்தால் பிழையாக நேர்வதும் உண்டு (ப. 653).

9. நல்ல பாடங்களைத் தெரிந்து கொள்ளுவதற்கும் ஏட்டுப் பிரதிகள் மிக்க உதவியாக இருப்பதை உணர்ந்தேன் (ப. 672).

10. பல சுவடிகளைப் பரிசோதித்து இயன்ற வரையில் சுத்த பாடங்களென்று தோற்றியவற்றைத் தெரிந்து எழுதிக் கொண்டேன். பாட பேதங்களை அங்கங்கே அடிக்குறிப்பில் அமைத்தேன் (ப. 756).

**நடை**

*உ.வே.சா.வின் நடை தெள்ளத் தெளிந்த நீரோட்டம் போன்ற நடை. எந்தச் சொல்லுக்கும் அகராதியைத் தேட வேண்டிய தேவை இராது. ஆழமான நீர் நிலையில்தானே தெளிவு இருக்கும். சிறிய சிறிய வாக்கியங்களாக அமைத்திருப்பார். மனிதனுடைய இதய ஆழத்தில் தோன்றும் உணர்ச்சி அலைகளை விளக்கியிருப்பார். சான்றுக்கு ஒன்று :*

> காட்சிக்கு எளிமையும் பணிவும் சாந்தமும் இவர்பால் உள்ளன என்பதை இவரைக் கண்டவுடன் அறியலாம். ஆழ்ந்த அறிவும் இணையற்ற கவித்துவமும் வாய்க்கப் பெற்றிருந்தும், அலைகளெல்லாம் அடங்கி ஒலி யற்றிருக்கும் ஆழ்ந்த கடலைப்போல் அறிவின் விசித்திர சக்தி யெல்லாம், கண்டவுடன் அறிய முடியாவண்ணம் அடங்கியிருக்கும் தோற்றம் உடையவராக இவர் இருந்தார்

*தம் ஆசிரியர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையைப் பற்றி உ.வே.சா. கூறிய செய்திதான் இது. மேலும் தம் ஆசிரியர் எப்படி கவிதை இயற்றுவார் என்பதையும் பின்வருமாறு கூறுகின்றார் :*

> இவர் பெரும்பாலும் யோசித்துக்கொண்டே யிருக்கும் இயல்புடையவர். பாடவேண்டிய விஷயங்களை ஒருவகையாக மனத்தில் ஒழுங்குபடுத்திக்கொண்டு பின்பு பாட ஆரம்பித்தால் ஒரே மூச்சில் நூற்றுக் கணக்காகப் பாடுவார். செய்யுட்களைச் சொல்லிக் கொண்டே வருகையில் மனப்பாடமான நூல்களில் உள்ள செய்யுட்களைக் கூறுகிறாரென்று தோன்றுமே ஒழியப் புதிய செய்யுட்களை யோசித்துச் சொல்லி வருகிறார் என்று தோன்றாது. மிகவும் அரிய கற்பனைகளை மனத்திலே ஒழுங்குபண்ணிச் சில நிமிஷ நேரங்களில் சொல்லிவிடுவார். நூல்களுக்கு இடையிடையே அமைந்த எதுகைக் கட்டுள்ள பாடல்களை இளைப்பாற்றுப் பாடல்கள் என்பார்

*இவ்வாறு தெளிவான நடையில் எல்லோருக்கும் விளங்கும் சொற்களைப் பெய்து, உயிரோவியத்தைப்போலத் தாம் கூறுவதை எழுதும் ஆற்றல் உ.வே.சா.வுக்கு இருந்தது. சிறிய வகுப்பில் படிக்கும் பிள்ளை முதல் பெரும்புலவர் வரையில் அவருடைய உரை நடையைப் படித்து மகிழும் வண்ணமும் அவரவர் தகுதிக்கு ஏற்றபடி அவற்றின் சுவையை உணரும் வண்ணமும் அவர் நடை அமைந்திருக்கும்.*

*ஒரு சமயம், ‘கலைமகள்’ ஆசிரியர், “உங்களுடைய நோக்கத்தைப் பற்றிச் சில வரிகள் எழுதுங்கள்” என்று தமிழ்த் தாத்தாவைக் கேட்ட போது,*

> என்னுடைய வாழ்வின் நோக்கமெல்லாம் பெரும்பாலும் தமிழின் தொடர்புடையதுதான். தமிழ் நூல்களை ஆழ்ந்து பயில வேண்டும் . . . அவற்றைப் பிறரும் அறியும்வண்ணம் எளிய நடையில் எழுதவும் சொல்லவும் வேண்டும்!

*என்று எழுதினார்.*

**நன்றியுணர்வு**

*ஏடுகளைத் தேடும் போதும், பதிப்பிக்கும் போதும் தமக்கு உதவி செய்தவர்களைச் செய்ந்நன்றி உணர்வோடு போற்றும் உயர்ந்த பண்பை உ.வே.சா.விடம் காணலாம்.*

ஒவ்வொரு நூலின் 'முகவுரை' அல்லது 'பதிப்புரை'யில் ஏடுகள் தேடிவந்த காலத்தில் மனமுவந்து ஏடுகள் அளித்தோரை யெல்லாம் சிறிதும் மறவாமல், 'இன்னின்னார் இன்னின்ன ஏடுகளைத் தந்தனர்' என்று பெயர்களைக் குறிப்பிட்டு நன்றி தெரிவிப்பதோடு, 'எத்தனை ஏடுகள் தந்தனர்' என்ற செய்தியையும் எழுதுவது இவரது பண்பு.

'நிலவில் மலர்ந்த முல்லை' எனும் கட்டுரையில், பத்துப் பாட்டில் ஒன்றான 'முல்லைப் பாட்டு' கிடைத்த செய்தியைச் சுவைபடச் சித்திரிக்கும் உ.வே.சா. அந்த ஏட்டினைத் தேவபிரான் பிள்ளை வீட்டிலிருந்து தமக்காகத் தேடிப் பெற்றுத்தந்த இலட்சுமணக் கவிராயரை நெஞ்சார்ந்த நன்றியுடன் பாராட்டு கின்றார்.

அவ்வாறே 'குறிஞ்சிப் பாட்டி'ல் 99 பூக்களைப் பற்றிய பட்டியலில், சில பூக்கள் விடுபட்டமை கண்டு மனம் நொந்து எப்படியேனும் இப்பூக்களைக் கண்டுபிடித்து நூலைச் செப்பமாக்க எண்ணியவர், தருமையாதீனத் தலைவர் மாணிக்கவாசக தேசிகர் ஆணைப்படி காறுபாறு சுவாமிநாதத் தம்பிரான் உதவியால், காவிரியாற்றில் பதினெட்டாம் பெருக்கில் போடப்பட வேண்டிய ஏடு, தெய்வச் செயலால் தப்பி நிற்க, "தேமா, மணிச்சிகை, உரிது நாறுஅவிழ் தொத்து உந்தூழ்" எனும் விடுபட்ட மலர்களைக் கண்டு பிடித்து, நூலை முழுமையாக்கினார். உதவிய அப்பெரியர் இருவரையும் நன்றியுடன் போற்றுகின்றார்.

இவ்வாறே 'புறப்பொருள் வெண்பாமாலை'க்கு உரை கிடைக்காத சில பகுதிகளுக்கு உரையுள்ள ஏடுகளைத் தந்துதவிய நெல்லை இந்துக் கல்லூரித் தமிழாசிரியர் சுவர்ணம் பிள்ளைக்கு நன்றி கூறுகின்றார். சீவக சிந்தாமணிப் பதிப்புரையில்,

> **இந்நூலில் ஆங்காங்குள்ள ஆருகத சமயக் கோட்பாடுகளை வீடூர் சந்திரநாத செட்டியாரவர்கள் எனக்கு விளங்கச் செய்தார்கள்**

என்று நன்றியுடன் பாராட்டுகின்றார்.

ஏடுகளைப் பதிப்பிக்கும்பொழுது பல சொற்களுக்குப் பொருள் விளங்காவிடில், பலரிடமும் கேட்டுத் தெரிந்து, விளக்கம் அளிக்கும் பெருந்தகைமையும் உ.வே.சா.வுக்கு உண்டு. மணிமேகலையைப் பதிப்பித்த போது, "பயற்றுத் தன்மை கெடாது கும்மாயம் இயற்றி" (மணி. 175-176) என்பதில் வரும் 'கும்மாயம்' என்பதற்குப் பொருள் விளங்காமல் தவித்தார். கும்பகோணம் சாரங்கபாணிப்

பெருமாள் கோயிலுக்குச் சென்றபோது, தேங்குழல், வடைத் திருப்பணியாரம், அதிரசம் முதலான பிரசாதங்கள் இவருக்கு வழங்கப்பட்டன. அவற்றில் ஒன்று 'கும்மாயம்'. 'இது என்ன கும்மாயமா?' என்று இவர் வியப்புடன் கேட்டு, அதனை மீண்டும் கொண்டுவரச் செய்து சுவைத்தார். நாவினால் சுவைத்த பொழுது அவருக்கு உண்டான இனிமையைக் காட்டிலும், அதன் பெயரைக் காதினாற் கேட்டபொழுது உண்டான இனிமை மிகுதியாக இருந்ததாம். மணிமேகலையில் கண்ட 'கும்மாயம்' மடைப்பள்ளியில் இருந்தது கண்டு மகிழ்ந்த உ.வே.சா. அக்கோயிலில் பணிபுரிந்த பட்டாசாரியருக்கும் நன்றி கூறுகின்றார்.

**அறிஞர் பார்வையில்**

> ஐயரவர்கள் தேடித் தொகுத்து வைத்திருக்கும் அரிய நூல்களைத் திருந்திய முறையில் பதிப்பிடுவதானால், சிறந்த தமிழறிஞர்களுக்குப் பல தலைமுறைக் காலம் உளங்கவர்ந்த வேலை இருந்து கொண்டேயிருக்கும்

என்பார் ச. வையாபுரிப்பிள்ளை. மேலும் 'தமிழ்ச்சுடர் மணிகள்' என்ற நூலில்,

> ஐயரவர்கள் முயற்சியெடுத்துத் தொகுத்து வைக்காமல் போனால், நமது பழந்தமிழ்க் கருவூலங்களில் பலவற்றை நாம் இழந்து போக நேரிட்டிருக்கும். நமது நல்வினைப் பயனாகத்தான் ஐயரவர்கள் தோன்றினார்கள். தமிழிலக்கிய சரித்திரத்தின் காலப்பகுப்பில் ஐயரவர்கள் தொண்டு புரிந்து வந்த சுமார் ஐம்பது ஆண்டுகளையும் 'சாமிநாதையர் காலம்' என்றுதான் பிற்காலத்தில் வரும் தமிழ்ச் சரித ஆசிரியர்கள் கூறுவார்கள்... தமிழ்க் காதல் நிரம்பியமைந்த திருமேனி; ஏட்டுச் சுவடிகள் இருக்கும் இடங்கட்கெல்லாம் ஓடியோடிச் சென்ற திருவடிகள்; ஏட்டுச் சுவடிகள் பெற்று ஆனந்தாதியத்தால் விதிர்விதிக்கும் திருக்கரங்கள்; தமிழின் பெருமையையும் தமிழின் தொன்மையையும் நினைத்த மாத்திரத்தில் உள்ளத்தே ஓங்கி வருகின்ற உவகையால் ஓங்கியமைந்த திருப்புயங்கள்; தமிழ் ஒளியும், தமிழ் அறிவும் ஒருங்கு விளங்குகின்ற திருநயனங்கள்; தமிழ்த் தொண்டு எனும் தவத்துறையிலே நெடுங்காலம் ஒழுகி முதிர்ந்த திருக்கோலம் இவை நம் கண்ணுக்கு விருந்தாய் அமைந்து நிற்கின்றன.

என்று குறிப்பிடுகின்றார். ந.மு. வேங்கடசாமி நாட்டார்,

> ஆங்கிலக் கல்வி இல்லாதவராயினும் இவர் நூல்கள அச்சிட்ட முறை ஆங்கிலம் கற்றவர்க்கெல்லாம் வியப்பு விளைக்கும்

என்பார்.

இரவீந்திரநாத் தாகூர் 01-04-1919 அன்று சென்னைக்கு வந்திருந்தார். அவர் டி.எஸ். இராமசாமி ஐயருடைய இல்லத்தில் தங்கியிருந்தார். அவரைப் பார்ப்பதற்காக உ.வே.சா. சென்றிருந்தார். உ.வே.சா. பதிப்பித்த நூல்களை எல்லாம் பார்த்து வியந்த தாகூர், 'இவற்றை எல்லாம் நீங்கள் எப்படிப் பதிப்பித்தீர்கள்?' என்று கேட்டார். அத்துடன் அன்று மாலையே தியாகராச விலாசத்திற்கு வந்து, அங்கிருந்த ஏட்டுச் சுவடிகளையும், கடிதப் பிரதிகளையும் பார்த்து வியந்தார். ஏட்டுச்சுவடியில் எப்படி எழுதுவது என்பதையும் உ.வே.சா. அவருக்கு எழுதிக் காட்டினார்.

தேசத்தந்தை மகாத்மா காந்தி அடிகள் சென்னையில் 1937இல் நடந்த பாரதீய சாகித்திய பரிஷத்தின் மகாநாட்டில் தலைமை வகித்தபோது உ.வே.சா. வரவேற்புரை வாசித்தளித்தார். அதைக் கேட்டு மகிழ்ந்த காந்தியடிகள்,

> தமிழின் வடிவமாகவே இருக்கும் இவர்கள் திருவடியில் இருந்து தமிழ் பயிலவேண்டுமென்ற ஆசை எனக்கு உண்டாகிறது. அந்தச் சந்தர்ப்பம் எப்போது கிடைக்குமோ? [44]

என்று சொன்னார். 'தமிழ்த் தென்றல்' திரு.வி.கலியாண சுந்தரனார்,

> சாமிநாத ஐயர் தமிழிலே பிறந்தார்; தமிழிலே வளர்ந்தார்; அவர் பிறப்பும் தமிழ்; வளர்ப்பும் தமிழ்; வாழ்வும் தமிழ்; அவர் மனமொழி மெய்களெல்லாம் தமிழே ஆயின; அவர் தமிழாயினார்; தமிழ் அவராயிற்று; அவர் தமிழ்; தமிழ் அவர். . . ஐயர் புலமை தமிழ்த் தொண்டில் புகுத்தியது. அத் தொண்டு அவரை மஹாமஹோபாத்தியாயர் ஆக்கிற்று. தாக்ஷிணாத்திய கலாநிதி ஆக்கிற்று. டாக்டர் ஆக்கிற்று. தமிழ்த் தாத்தா ஆக்கிற்று; தமிழ்க் கோயில் ஆக்கிற்று [45]

என்று கூறுகின்றார். 'மகாகவி' பாரதியார் உ.வே.சா.வை நேரில் கண்டு வாழ்த்திய பின்வரும் பாடல்கள் சான்றாகும்.

> முன்னிவனப் பாண்டியர்நாள் இருந்திருப்பின்
> இவன்பெருமை மொழிய லாமோ?
>
> பொதியமலைப் பிறந்தமொழி வாழ்வறியும்
> காலமெலாம் புலவோர் வாயில்

துதியறிவாய், அவர்நெஞ்சின் வாழ்த்தறிவாய்
இறப்பின்றித் துலங்கு வாயே! [46]

வ.சுப. மாணிக்கம் 'தமிழ்க்காதல்' என்ற தம் நூலில் உ.வே.சா.வைப்பற்றிப் பின்வருமாறு புகழ்ந்துள்ளார்.

பார்காத்தார் ஆயிரம்பேர்; பசித்தார்க்காகப்
பயிர்காத்தார் ஆயிரம் பேர்;பாலர்க் காக
மார்காத்தார் ஆயிரம்பேர் வாழ்ந்த நாட்டில்
மனங்காத்த தமிழ்த்தாய் 'என் உடைமை யெல்லாம்
யார் காத்தார்' எனக்கேட்க ஒருவன் அம்மா
யான்காப்பேன் எனவெழுந்தான் சாமிநாதன்!
நீர்காத்த தமிழகத்தார் நெஞ்சின் உள்ளான்
நிலை காத்த மலையிமய நெற்றி மேலான்
பொய்யாத தமிழ்க்குமரி ஈன்ற சாமி!
போகாத புகழ்க்கன்னி மணந்த நாத!
செய்யாத மொழித்தொண்டு செய்த ஐய!
சிறுகாத நெஞ்சத்தேம் வணங்கு செம்மல்!
எய்யாத திருவடியால் எண்பத் தாண்டும்
இளையாத உள்ளத்தால் எங்குஞ் சென்று
நெய்யாத தொன்னூல்கள் நிலைக்க வைத்த
நீங்காத தமிழ்க்குயிரே! நின்தாள் வாழ்க! [47]

## பெற்ற சிறப்புகள்

உவே. சாமிநாதையர் செய்து வந்த தமிழ்த் தொண்டுகளைப் பாராட்டி அவருக்கு 1903இல் கௌரவப் பத்திரமும், 1905இல் ஓராயிரம் ரூபாய் வெகுமதியும் சென்னை அரசினரிடமிருந்து கிடைத்தன. மதுரைத் தமிழ்ச் சங்க ஆண்டு விழாவில் ஐயாயிரம் வெண்பொற்காசுகள் வழங்கப்பட்டன.

'மகாமகோபாத்தியாய' (பெரும் பேராசான்) என்ற சிறப்புப் பெயருடன் ஆயிரம் வெண்பொற் காசுகளும் 01-01-1906இல் மத்திய அரசால் வழங்கப்பட்டன. பொதுவாக வடமொழியில் சிறந்து விளங்கியவர்களுக்கே இப்பட்டம் அளிப்பது வழக்கம். இவ்விதி இவருக்காகத் தளர்த்தப்பட்டுத் தமிழ் அறிந்த சாமிநாதையருக்கு இச்சிறப்புப் பட்டம் அளிக்கப்பட்டது. இதே ஆண்டில் சென்னைக்கு வேல்ஸ் இளவரசரும் அவர்தம் துணைவியாரும் வருகை தந்தபோது அறிஞர் பெருமக்களுக்குப் பலவகையான பட்டங்களும் பொன் முடிப்பும் அளிக்கப்பட்டன. அப்போது உ.வே.சா.வுக்குத் தங்கத் தோடா அணிவிக்கப்பட்டது.

'திராவிட வித்யா பூஷணம்' (திராவிடக் கலையழகன்) என்ற பட்டம் 'பாரத தர்ம மகாமண்டலத்தாரால்' 1917இல்

அளிக்கப்பட்டது. 'தாட்சிணாத்திய கலாநிதி' (தெற்கத்தியக் கலைச் செல்வர்) என்ற பட்டம் 1925இல் காஞ்சி காமகோடி பீடாதிபதி சங்கராச்சாரியாரால் வழங்கப்பட்டது.

சென்னைப் பல்கலைக்கழகம் 21-03-1932இல் 'மதிப்புறு முனைவர்' (Doctor of Literature) என்ற பட்டம் வழங்கித் தனக்குப் பெருமை சேர்த்துக் கொண்டது.

சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்கள், குமரகுருபரர் பிரபந்தங்கள் ஆகியவற்றைப் பதிப்பித்த உ.வே.சா.வுக்குத் திருப்பனந்தாள் காசிமடத்தின் தலைவர் சாமிநாதத் தம்பிரான் ஓராயிரம் ரூபாயை ஒரு வெள்ளித் தாம்பாளத்தில் வைத்து வழங்கினார்.

சென்னை, அண்ணாமலைநகர், மைசூர், காசி, திருவனந்தபுரம் ஆகிய இடங்களிலுள்ள பல்கலைக்கழகத் தமிழ்க் குழுக்களில் உறுப்பினராயிருந்த உ.வே.சா. சென்னைப் பல்கலைக் கழகப் புலவர் தேர்வுக்குழுத் தலைவராகப் பல்லாண்டுகள் பணியாற்றினார்.

தமிழக அரசு மாநிலக் கல்லூரி வளாகத்தில் இவருக்குச் சிலை நிறுவிப் பெருமைப்படுத்தியுள்ளது. மேலும் உத்தமதானபுரத்தில் உ.வே.சா. வாழ்ந்த இல்லம் தமிழ்நாடு அரசால் நினைவு இல்லமாக்கப்பட்டது.

இந்திய அரசு 18-02-2006இல் நினைவு அஞ்சல்தலையை வெளியிட்டது. அண்மையில் அதாவது 2012ஆம் ஆண்டு முதல் தமிழக அரசு சுவடிகளின் பதிப்புகளில் ஈடுபடுகின்றவர்களுக்கு ஆண்டுதோறும் 'உ.வே.சா. விருது' வழங்கி வருகிறது.

**தமிழ்த் தாத்தாவின் மறைவு**

உ.வே.சாமிநாதையர் 12-01-1942ஆம் ஆண்டில் தமது வீட்டின் மெத்தைப் படியில் ஏறும்போது தவறிக் கீழே விழுந்தார். காலில் எலும்பு முறிவு இருப்பது தெரிந்தது. இரண்டாவது உலகப் போர் நடந்து கொண்டிருந்த காரணத்தினால் உ.வே.சா. 11-04-1942இல் சென்னையிலிருந்து திருக்கழுக்குன்றத்திற்குச் சென்றார். திருவாவடுதுறை மடத்திற்குச் சொந்தமான ஒரு வீட்டில் உ.வே.சா. தங்கியிருந்தார். சென்னையிலிருந்து புறப்படும்போது "கணக்கிலாத் திருக்கோலம் நீவந்து காட்டினாய் கழுக்குன்றிலே" என்ற திருவாசகத்தைச் சொல்லிப் புறப்பட்டார். 27-04-1942இல் மாலை குளிர் காய்ச்சல் ஏற்பட்டது. 28-04-1942இல் மாலை 3.45 மணிக்கு இறைவனடி சேர்ந்தார்.

# 4. ச. வையாபுரிப் பிள்ளை (1891 - 1956)

> சின்ன உருவம், மெலிந்த உடல்வாகு; பரந்து விரிந்த தமிழ் இலக்கியத்தை ஆழமாக அகலமாக உழுத கருவிகளாகிய கண்கள்; ஒளி பொருந்திய கண்கள்; எப்பொழுதும் நூல்களைப் படித்துக் கொண்டேயிருக்கும் காரணத்தால் கண்களைச் சுற்றியுள்ள சிறிய வீக்கம்; அமைதியான தோற்றம், மாணவர்களிடத்தே அன்பு; தன்னை அணுகும் ஆய்வாளர்களைத் தெளிவடையச் செய்வதில் காட்டும் பொறுமை. இவற்றின் ஒட்டுமொத்த உருவம்தான் பேராசிரியர் [48]

என்று தம்முடைய தாத்தாவைப் பற்றிப் பேத்தி இராதா செல்லப்பன் கூறுவார்.

'திக்கெலாம் புகழும் திருநெல்வேலி'யில் சைவ சமயத்தைச் சார்ந்த சிவநேசச் செல்வர் சரவணப் பிள்ளைக்கும், பாப்பம்மாள் என்கிற பிரம்மநாயகி அம்மையாருக்கும் மகனாகப் பிறந்தவர் வையாபுரிப் பிள்ளை. நெல்லை வண்ணாரப் பேட்டையில் 13-10-1891இல் பிறந்தார். இவரது தந்தைவழிப் பாட்டனார் சங்கரலிங்கம் பிள்ளை 'தாமிரபரணிப் புராணம்' பாடியவர். வையாபுரிப் பிள்ளையின் தந்தை சரவணப் பிள்ளை தமிழ், வடமொழி ஆகிய இரண்டிலும் சிறந்து விளங்கிய சைவப் பெரியார். சிவபுராணங்களையும், தமிழ் இலக்கியங்களையும் நன்கு கற்றறிந்தவர். 'சலம் பூவோடு தூபம் மறந்தறியேன்' என்பதற்கேற்ப நாள்தோறும் சிவபூசை செய்வதை நியமமாகக் கொண்டிருந்தார்.

### பெற்ற கல்வி

வையாபுரிப் பிள்ளை தம் தகப்பனாரிடம் புராணக் கதைகள், தேவார, திருவாசகப் பாடல்கள், சமயம் தொடர்பான நூல்கள் முதலானவற்றைப் பாடம்கேட்டார். சிலவற்றைத் தாமே படித்து அறிந்துகொண்டார்.

தொடக்கக் கல்வியைக் கணபதிப் பிள்ளை என்பவரிடம் கற்றார். திருநெல்வேலியிலிருந்த சிவராமப் பிள்ளை, சுப்பிரமணியக்

கவிராயர் ஆகிய தமிழாசிரியர்களிடம் தமிழ் பயின்றார். பாளையங்கோட்டை செயின்ட் சேவியர் உயர்நிலைப்பள்ளியில் ஆங்கிலக் கல்வி பெற்றார். திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் 'மெட்ரிகுலேசன்' பயின்றார்.

தனிப்பட்ட முறையில் பாம்பன் குமரகுருதாச சுவாமி களிடமும், யாழ்ப்பாணம் சுவாமிநாதப் பண்டிதரிடமும் இலக்கண இலக்கியங்களையும் தத்துவ சாத்திரங்களையும் பயின்றார்.

சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் சேர்ந்து இளங்கலைப் (பி.ஏ.) பட்டம் பெற்றார். இக்கல்லூரியில் இவருக்கு மறைமலை யடிகள் தமிழ்ப் பேராசிரியராக அமைந்தார். தமிழில் மாநிலத்திலேயே முதலிடம் பெற்றுச் சேதுபதி தங்கப் பதக்கத்தைப் பரிசாகப் பெற்றார்.

சென்னைச் சட்டக் கல்லூரியில் சேர்ந்து எப்.எல். பட்டம் பெற்றார். இவருடன் பயின்றவர்களுள் திருவிதாங்கூர் சுவாமிநாத பிள்ளை, சர். ஆர்.கே. சண்முகம் செட்டியார் ஆகியோர் குறிப்பிடத் தக்கவர்கள். திருவனந்தபுரம் மகாராஜா சட்டக் கல்லூரியில் சேர்ந்து பி.எல். பட்டம் பெற்றார்.

## மொழியறிவு

தாய்மொழி தமிழ்; அத்துடன் திருவனந்தபுரத்தில் படித்த காலத்தில் மலையாளம் அங்கு அரசு மொழியாக இருந்தது. எனவே மலையாளம் சிறிது கற்றார். இளமையில் வடமொழிப் பயிற்சியில் ஈடுபட்டிருந்தார். அதன் பின்னர் ஆங்கிலம், செர்மன், பிரெஞ்சு ஆகிய மொழிகளையும் கற்றார்.

## இல்லற வாழ்வு

வையாபுரிப் பிள்ளை 05-05-1912இல் சிவகாமி அம்மையாரைத் தமது வாழ்க்கைத் துணையாகக் கொண்டார்; இவர் தமிழ், ஆங்கிலம், மலையாளம் ஆகிய மொழிகளில் சிறந்த பயிற்சி பெற்றிருந்தார். தம் கணவரின் தமிழ்த் தொண்டுக்கு இவர் மிகவும் உறுதுணையாக இருந்தார். குடும்பப் பொறுப்பைத் தாமே ஏற்றுக் கொண்டு தம் கணவருக்கு அக்கவலையே இல்லாமல் அவரது தமிழ் ஆய்வுக்குப் பக்கபலமாக இருந்தார். இவர்களுக்கு வை. சரோசினி என்ற மகள் பிறந்தார்.

## நட்புறவு

திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் பயின்ற காலத்தில் இவருடன் படித்து வந்த பெ.நா. அப்புசுவாமி, சேனாபதி ஆகியோர்

இவருடைய நண்பர்களாயினர். மேலும் அதே கல்லூரியில் எப்.ஏ. பயின்ற காலத்தில் க.அ. நீலகண்ட சாஸ்திரியார், பி.ஸ்ரீ., வே. சாரநாதன், கே.ஜி. சங்கரய்யர் போன்றவர்கள் இவருக்கு நண்பர்களாயினர்.

திருவனந்தபுரத்தில் இருந்தபொழுது கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, கே.என். சிவராச பிள்ளை, கே.என். குமரேச பிள்ளை, பண்டித முத்துச்சாமி பிள்ளை, இசையரசு தி. இலட்சுமண பிள்ளை, மனோன்மணீயம் பி. சுந்தரம் பிள்ளை, கே.ஜி. சேஷையர், கே.ஜி. சங்கரய்யர், பி.டி. சுப்பிரமணிய பிள்ளை ஆகியோரது நட்பு கிடைத்தது.

திருநெல்வேலியில் வழக்கறிஞர் தொழிலை மேற்கொண்டிருந்த காலத்தில் கம்பராமாயண ஆராய்ச்சியையும், தமிழ் நூல்களைக் கற்பதிலும் தமது பொழுதைப் பெரும்பாலும் செய்து வந்தார். அப்பொழுது இவருக்குப் பல சான்றோர்களின் ஆதரவு கிட்டிற்று. எம்.எஸ். சுப்பையா முதலியார், சக்கரபாணி நம்பியார், ஆதிமூர்த்தியா பிள்ளை, ப. வேதநாயகம் பிள்ளை, டி.கே. சிதம்பரநாத முதலியார், ஆர். அனந்தராமையங்கார், ஏ.வி. சுப்பிரமணிய ஐயர், சிதம்பர ராமலிங்கம் பிள்ளை, சி. வீரபாகு பிள்ளை, வ.வே.சு. ஐயர், பெரியன் சீனிவாசையங்கார் ஆகிய தமிழறிஞர்களின் நட்பும் கிடைத்தது. இச்சான்றோர்களின் உதவியால் 'கம்பன் கழகத்'தை நெல்லையில் அமைத்தார். தாம் பலருடன் நட்புக்கொண்டது குறித்து,

> **எனது நட்பு பிராமணர் அல்லாதார் என்ற ஜாதி வேறுபாடுகளைக் கடந்தது. வடமொழி, தமிழ் என்ற வேறுபாடுகளைக் கருதாதது. பண்டிதர்கள், ஆங்கிலம் கற்ற தமிழர்கள் என்ற சிறு வரம்புகளை மதியாதது. சைவம், வைணவம் முதலிய மதவேறுபாடுகளைக் கனவிலும் நினையாதது. சங்ககாலத் தமிழ், இடைக்காலத் தமிழ், தற்காலத் தமிழ் என்பனவற்றில் ஏதேனும் ஒன்றில் அபிமானம் வைத்து அதையே கற்பது என்ற நியதியைக் கொள்ளாதது. அறிவு வளர்ச்சியும், தமிழுணர்வுப் பெருக்கமும், உண்மை நாட்டமும், நடுநிலையுமே என்னை ஊக்கி வந்தன** [49]

என்று கூறுவது இவண் சிந்திக்கத்தகும்.

ச. வையாபுரிப் பிள்ளை அகராதித் துறையிலும், தமிழ்த் துறையிலும், பிற துறைகளிலும் ஈடுபட்ட காரணத்தினால் அறிஞர் பலரோடும் தொடர்புகொள்ளக் காரணமாயிற்று. சென்னை, தமிழ்

நாட்டின் பிற இடங்கள், ஈழநாட்டில் வாழ்ந்து வந்த வித்துவான்கள் பலரோடும் தொடர்பு ஏற்பட்டது.

## வழக்கறிஞர் தொழில்

திருவனந்தபுரத்தில் தம்மை வழக்கறிஞராகப் பதிவுசெய்து கொண்டு உயர்நீதிமன்ற வழக்கறிஞராகத் தொழில் புரிந்தார். இங்கு 1922 வரையிலும் எட்டு ஆண்டுகள் வழக்கறிஞராகப் பணியாற்றினார்.

பின்னர் அங்கிருந்து திருநெல்வேலிக்கு 1923இல் வந்து வழக்கறிஞர் தொழிலைப் பெயரளவிற்கு மேற்கொண்டார்.

## சொற்பொழிவாளர்

திருநெல்வேலிப் பாளையங்கோட்டையில் முதன் முதலாக 1912இல் இலக்கியச் சொற்பொழிவாற்றினார். ‘நெடுநல்வாடையும் நக்கீரரும்’ என்ற பொருள்பற்றிப் பேசினார். திருவனந்தபுரம் சைவப் பிரகாச சபையில் பல இலக்கியச் சொற்பொழிவுகளை நிகழ்த்தினார். பிற்காலத்தில் திருவிதாங்கூர்ப் பல்கலைக்கழகத்தில் காவிய காலச் சொற்பொழிவை நிகழ்த்தினார்.

பல்வேறு தமிழ் இலக்கியம் குறித்த மாநாடுகள், கருத்தரங்குகளில் கலந்துகொண்டு பல பொழிவுகளை நிகழ்த்தி யுள்ளார். பல்கலைக்கழகத்தில் இருந்தபொழுது ஆராய்ச்சிப் பேருரைகளை நிகழ்த்தியுள்ளார்.

புறநானூறும் தமிழரும், தமிழிலக்கியச் சரிதத்தில் சங்க காலம், சிலப்பதிகாரம், மணிமேகலை, தமிழிலக்கியச் சரிதத்தில் நீதி நூல்கள், தமிழிலக்கியச் சரிதத்தில் தத்துவ நூற்காலம் போன்ற தலைப்புகள் அவர் சொற்பொழிவாற்றியவற்றுள் ஒருசிலவாகும்.

## பதிப்பாசிரியர்

சென்னைப் பல்கலைக்கழகத்தின் பேரகராதித் துறையில் பதிப்பாசிரியராகப் பணிபுரியும் வாய்ப்பு கிடைத்தது. திராவிட மொழிகளிலேயே முதன் முதலில் பேரகராதியைத் தயாரித்த பெருமை தமிழ்மொழிக்குமட்டுமே உரியது. இவர் பதிப்பாசிரியராக 25-11-1926இல் பொறுப்பேற்றபொழுது முதல் தொகுதி மட்டும்தான் வெளிவரும் நிலையில் இருந்தது. இவர் பொறுப்பை ஏற்றபின் பணியை விரைவுபடுத்தி எஞ்சிய ஐந்து தொகுதிகளையும் பத்தாண்டுகளில் நிறைவு செய்தார்.

ஏறத்தாழ இலட்சத்து நாலாயிரத்து நானூற்று ஐந்து சொற்களைக் கொண்டது இத்தமிழ்ப் பேரகராதி. ‘அகராதி

நினைவுகள்' என்ற நூலில் தமிழ்ப் பேரகராதிப் பதிப்பாசிரியராகப் பதவியேற்ற வரலாறு, அப்பணியில் தமக்கேற்பட்ட அனுபவங்கள் முதலானவற்றை விளக்கியுள்ளார்.

**துறைத்தலைவர்**

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழாராய்ச்சித் துறைத் தலைவராக 1936இல் பொறுப்பேற்றுப் பத்தாண்டுகள் பணியாற்றி 11-10-1946இல் பணியிலிருந்து ஓய்வு பெற்றார்.

**இதழாசிரியர்**

'கலைமகள்' இதழின் சிறப்புநிலைப் பதிப்பாசிரியர்களுள் ஒருவராக 1932இல் பணியாற்றினார். மு. இராகவையங்காரும், ச. வையாபுரிப் பிள்ளையும் அந்த இதழின் இலக்கியப் பகுதிக்குப் பொறுப்பேற்றிருந்தனர்.

**சிறுகதை ஆசிரியர்**

'சிறுகதை மஞ்சரி' என்ற தொகுப்பில் எட்டுச் சிறுகதைகள் இடம்பெற்றுள்ளன. இந்நூல் ஆசிரியரின் செல்லப் பெயரான 'பாலையா' என்ற புனைபெயரில் 'தினமணி' நாளிதழ் வெளியீடாக வந்தது. சுசீலை, ராமுவின் சுயசரிதம், உதிர்ந்த மலர், பேசா மடந்தை, ஓர் இரவு, சந்திரா பழிவாங்கியது, மத்தளக்காரன், பால கோபாலன் வழக்கு ஆகிய கதைகள் இதில் உள்ளன.

**பெற்ற பட்டங்களும் பாராட்டுகளும்**

தமிழ்ப் பேரகராதிப் பணி செய்தமைக்காக இந்திய அரசு 1938இல் 'இராவ்சாகிப்' பட்டம் வழங்கியது. சென்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கம் பிள்ளையின் இலக்கியப் பணிகளைப் பாராட்டிக் கேடயத்தைப் பரிசாக வழங்கியது.

**இவரது மாணவர்கள்**

இவர் தலைமையின்கீழ்ப் பன்னிருவர் ஆய்வு செய்துள்ளனர். அவர்கள் வருமாறு :

ஏ.எஸ். நாராயணசாமி (இலங்கை), (திருமதி) ஜீவா செல்லப்பா (இலங்கை), செல்வி கே. ஞானாம்பாள் (இலங்கை), ஜி. சுப்பிரமணிய பிள்ளை, மு. அருணாசலம், ஏ.வி. மயில்வாகனம், கா.பொ. இரத்தினம், அ. கிருஷ்ணமூர்த்தி, மு. சண்முகம் பிள்ளை, கே.எஸ். ஆனந்தர், எஸ். சேதுகாவலர், வ.அய். சுப்பிரமணியம்.

**எழுதிய ஆய்வு நூல்கள்**

பேராசிரியர் பல்வேறு பொருள்களில் இலக்கிய ஆய்வுக் கட்டுரைகளை எழுதியுள்ளார். ஏறத்தாழ 246 ஆய்வுக் கட்டுரைகள்

நூல் வடிவில் வெளிவந்துள்ளன. தமது கட்டுரைகளை முதலில் பத்திரிகைகளில் எழுதுவதையே வழக்கமாகக் கொண்டிருந்தார். பின்னரே அவை நூல் வடிவம் பெறும்.

இவர் எழுதிய கட்டுரைகள் அமுதசுரபி, ஆனந்த போதினி, ஆனந்த விகடன், இலக்கியப் பூந்துணர், ஈழகேசரி, உரைமணி மாலை, கம்பன் மலர், கரந்தைத் தமிழ்ச் சங்க வெள்ளிவிழா மலர், கல்கி தீபாவளி மலர், கலா நிலையம், கலைக்கதிர், கலைமகள், குமர குருபரர், குமரி மலர், சக்தி, சித்தாந்தம், சித்திரா வாசகம், சிந்தனை, சில்ப ஸ்ரீ, சுதேசமித்திரன், செந்தமிழ், தமிழ்ப்பொழில், தமிழர் நேசன், தினமணி, தினமணி கதிர், நவசக்தி, நவநீதம், நாட்டியம், பாரத தேவி, பிரசண்ட விகடன், லோகோபகாரி, வசந்தம், விவேக போதினி, ஹனுமான், ஸ்ரீ இராமகிருஷ்ண விஜயம் போன்ற மலர்களிலும் இதழ்களிலும் வெளிவந்துள்ளன.

இலக்கியம், இலக்கணம், அகராதி, பதிப்பு, புலவர் தொடர்பானவை என்ற வகையில் இவர் எழுதிய ஆய்வு நூல்கள் வருமாறு : ஆராய்ச்சியுரைத் தொகுதி 1 (1930), சங்கநூற் புலவர் பெயர் அகராதி (1934), சிறுகதை மஞ்சரி (1944), Research in Dravidian Languages (1946), திராவிட மொழிகளில் ஆராய்ச்சி (1946, 1956), இலக்கியச் சிந்தனைகள் (1947), தமிழின் மறுமலர்ச்சி (1947, 1960), தமிழ்ச்சுடர் மணிகள் (1948, 1959), தமிழர் பண்பாடு (1949), இலக்கிய உதயம் பகுதி 1 (1950), கம்பன் ஆராய்ச்சிப் பதிப்பு (1950), இலக்கிய தீபம் (1950), உரைமணிமாலை (1951), இலக்கிய உதயம் பகுதி 2 (1952), இலக்கிய மஞ்சரி (1953), இலக்கிய மணிமாலை (1954), கம்பன் காவியம் (1955), இலக்கணச் சிந்தனைகள் (1956), சொற்கலை விருந்து (1956), சொற்களின் சரிதம் (1956), History of the Tamil Language and Literature (1956), தமிழிலக்கியச் சரிதத்தில் காவிய காலம் (1957), இலக்கிய விளக்கம் (1958), ராஜி (நாவல்) (1959), அகராதி நினைவுகள் (1960).

இவற்றில் இலக்கியத்திற்கு அதிகச் சிறப்பிடம் கொடுத்து இவர் ஆய்வு மேற்கொண்டிருப்பது புலனாகிறது. கட்டுரைகளைத் தொகுத்து நூல் வடிவில் வெளியிடும்பொழுதுகூட இலக்கிய உதயம், இலக்கியச் சிந்தனை, இலக்கிய தீபம், இலக்கிய மணிமாலை, இலக்கிய விளக்கம் என்று இலக்கியத்துடன் இணைத்தே பெயரிட்டிருப்பது அவரது தணியாத இலக்கியக் காதலையே வெளிப்படுத்தி நிற்கிறது.

> இலக்கியம் என்பது ஒரு கலை. இது கலைஞன் உள்ளத்தில் தோன்றும் முறை தனிப்பட்டது; இலக்கியமாகப் பரிணமிக்கும் முறையும் தனிப்பட்டது; இதன் நோக்கமும் தனிப்பட்டதே [50]

என்று கூறும் பேராசிரியர் பல்வேறு கட்டுரைகளில் இலக்கியம் தொடர்பாகத் தமது கருத்துகளைக் கூறியுள்ளதைக் காணமுடிகிறது.

'இலக்கியச் சிந்தனைகள்' என்ற நூலில் இலக்கியம் என்பது என்ன? இலக்கியத்தின் பயன், இலக்கியத்தின் முதல் தோற்றம், இலக்கியமும் சமூகமும், தமிழிலக்கியத்தின் தொன்மை, சங்க இலக்கியங்கள், கம்பனும் தமிழும், பதினாறாம் நூற்றாண்டில் இலக்கியம், பத்தொன்பதாம் நூற்றாண்டில் இலக்கியம், ஆங்கிலப் பேரகராதி, தமிழும் அகராதியும், நாடகக்கலை, மதுரை தமிழ் வளர்த்த வரலாறு, ஜைனரும் இலக்கியமும், கூத்தும் இசையும், தமிழில் நாட்டிய நூல்கள், மதனநூல் வரலாறு, இலக்கியத்தில் மொழி வழக்கு ஆகிய கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

'தமிழின் மறுமலர்ச்சி' என்ற நூலில் தமிழின் மறுமலர்ச்சி, விடுதலை வேண்டும், தமிழும் சுதந்திரமும், பாரதியுகம், பாரதியும் தமிழும், நவீன கதை, தமிழ் எழுத்துகளின் வளர்ச்சி, தமிழில் சொல் வளர்ச்சி, தமிழில் வசனநடை, தமிழ்ப் பாட்டும் இசையும், மறுமலர்ச்சியும் கவிமணியும், நூல்நிலையப் பிரசாரம், சொல் வரலாற்று நியதி, சொல் வரலாற்று வினோதங்கள், வளரும் மொழி உரைநயம், புதிய இலக்கிய முறை, புதிய இலக்கணம், தமிழும் எதிர்காலமும் ஆகிய கட்டுரைகள் வெளியிடப்பட்டுள்ளன.

'உரைமணிமாலை' என்பதில் பண்டைத் தமிழக வாழ்க்கை, உத்தம சகோதரன், கற்புத் தெய்வம், தமிழ்ப் பாட்டும் இசையும், நாடகக் கலையின் வரலாறு, நூல்நிலையப் பிரசாரம், தமிழ் அகராதி, ஆசிரியர் சுந்தரம் பிள்ளை, டாக்டர் சாமிநாதையர், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை ஆகிய கட்டுரைகள் உள்ளன. இந்நூல் திருவிதாங்கூரில் உயர்நிலைப் பள்ளிகளுக்கும் பாட நூலாக அமைந்தது.

தொல்காப்பியர், திருவள்ளுவர், மாணிக்கவாசகர், கம்பர், பவணந்தி முனிவர், புகழேந்தியார், பரிமேலழகர், மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, சி.வை. தாமோதரம் பிள்ளை, சுந்தரம் பிள்ளை, வி. கனகசபைப் பிள்ளை, உ.வே. சாமிநாதையர், ரா. இராக வையங்கார், சுப்பிரமணிய பாரதி, கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை ஆகிய பதினாறு தமிழறிஞர்களின் வாழ்வையும் பணிகளையும் 'தமிழ்ச்சுடர் மணிகள்' என்ற நூலில் எழுதியுள்ளார்.

'இலக்கிய தீபம்' என்ற நூலில் இருவகை இலக்கியம், பத்துப்பாட்டும் அவற்றின் காலமுறையும், திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடையும் நக்கீரரும், பாலையின் அரங்கேற்று மண்டபம்,

தொகை நூல்களின் காலமுறை, குறுந்தொகை, குறுந்தொகைச் செய்யுளில் ஓர் சரித்திரக் குறிப்பு, எருமணம், பதிற்றுப்பத்தின் கடவுள் வாழ்த்து, அதியமான் அஞ்சி, மௌரியர் தென் இந்தியப் படையெடுப்பு, காவிரிப்பூம்பட்டினம், தொண்டி நகரம், முத்தொள்ளாயிரம், முத்தொள்ளாயிரத்தின் காலம் ஆகிய கட்டுரைகள் உள்ளன.

சொற்கலை விருந்து, சொற்களின் சரிதம், இலக்கணச் சிந்தனைகள் ஆகிய மூன்று நூல்களும் பேராசிரியர் வாழ்ந்த காலத்தில் தொகுத்து அச்சுக்குத் தரப்பட்டன. ஆனால் பேராசிரியர் மறைவுக்குப் பின்னர் 1956இல் வெளிவந்த காரணத்தினால் இந்நூல்களில் பேராசிரியரின் முன்னுரை இடம்பெறவில்லை. மாறாகப் பதிப்பகத்தாரின் பதிப்புரைகள் இடம்பெற்றன.

'சொற்கலை விருந்து' என்ற நூலில் மொழியின் அதியற்புத இயல்பு, பேச்சும் மொழியும், சொல்லும் மொழியும், சொல்லின் வளர்ச்சி, சொல்லும் பொருளும், தாய்மொழி, ஆதார மொழித் திட்டம், சொல் வரலாற்று நியதி, சொல் வரலாற்று வினோதங்கள், மொழிநூல் வினோதங்கள், தமிழும் பிராகிருதமும், தமிழும் வைதிக வார்த்தைகளும், பாலி மொழியும் தமிழும், தமிழும் மலையாளமும், இலக்கியத்தில் மொழி வழக்கு, சொல்லின் ஒலி வடிவும் வரி வடிவும், சொல்லாக்கம் ஆகிய கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

'சொற்களின் சரிதம்' என்ற நூலில் கழகம், களம், கண்வட்டம், பொழுது, முனனிலைப் பெயர், தோடு, விருந்து, கந்தருவர், பஞ்சம், சாதுகை மாந்தர் ஆகிய பத்துச் சொற்களின் வரலாறுகள் இடம்பெற்றுள்ளன.

'இலக்கணச் சிந்தனைகள்' என்ற தொகுப்பில் பாணினீயம், வடமொழியும் தமிழும், தொல்காப்பியரும் தமிழ் வளர்ச்சியும், சிலப்பதிகாரத்தில் சில இலக்கண வழக்குகள், அண்மை விளி, உறுப்புச் செய்யுள், திராவிடமொழி ஆராய்ச்சி, பலவகை இலக்கணங்களின் அவசியம், வரலாற்று இலக்கணம், தத்துவ சாஸ்திரமும் இலக்கணமும் ஆகிய கட்டுரைகள் உள்ளன.

'தமிழர் பண்பாடு' என்பதில் கலையும் பண்பாடும், பண்டைத் தமிழக வாழ்க்கை, புறநானூறும் தமிழரும், அகநானூறும் காதலும், இராம சரிதமும் தமிழ்நாடும், கவிதை, கதைப்பாட்டு, இலக்கிய மரபுகள் - பாத்திரங்கள், உத்தமசகோதரன், இலக்குமணன், கும்பகர்ணன், அழகு தெய்வம், கற்புத் தெய்வம், நகைச்சுவை, சமயமும் லட்சியங்களும் ஆகிய கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. இந்நூல் பல பதிப்புகளைப் பெற்றது.

'இலக்கிய உதயம் முதற்பகுதி' என்ற நூலில் எகிப்து, பாபிலோனியா, பாலஸ்தீனம், பாரசிகம், சீனம் ஆகிய ஐந்து நாட்டிலுள்ள ஆதி இலக்கியங்கள் ஆய்வு செய்யப்பட்டுள்ளன. ஆங்கிலத்தில் 'Dawn of Literature' என்ற நூலைப் போன்று தமிழிலும் எழுத வேண்டும் என்ற வேட்கையில் காரணமாக இந்நூல் எழுந்தது. பிறமொழி இலக்கிய உணர்ச்சி தமிழுக்கு இன்றியமையாதது என்ற நோக்கில் இந்நூல் எழுதப்பட்டுள்ளதையும் காணமுடிகிறது.

'இலக்கிய உதயம் இரண்டாம் பகுதி' என்ற நூலில் ரிக் வேதம், அதர்வண வேதம், சாம வேதம், எசூர் வேதம், பிராம்மணங்கள், ஆரண்யகங்கள், உபநிடதங்கள், சூத்திரங்கள், வியாகரணம், மகாபாரதம், இராமாயணம், புராணங்கள், உப புராணங்கள், தாந்திரிக இலக்கியங்கள், விநயபிடகம், சூத்த பிடகம், அபிதம்ம பிடகம், திருமுறைகளைச் சாராத பாலி இலக்கியங்கள், பௌத்த வடமொழி இலக்கியங்கள், மகாயானப் பெரியோர்களும் கவிஞர்களும், மகாத்மியங்கள், தோத்திரங்கள், தாரணிகள், தந்திரங்கள் ஆகியவை விரிவான முறையில் கூறப்பட்டுள்ளன. வின்டர் நீட்ஸ் எழுதிய 'இந்திய இலக்கிய வரலாறு' முதலிரண்டு தொகுதிகள், பெரிடேல் கீத் எழுதிய 'வடமொழி இலக்கிய வரலாறு' ஆகிய நூல்கள் இந்நூலை எழுதுவதற்குப் பெரிதும் பயன்பட்டதாகப் பேராசிரியர் குறிப்பிடுகின்றார்.

'இலக்கிய மணிமாலை' என்ற நூல் நான்கு தொகுதிகளாக வெளிவந்துள்ளது. முதல் தொகுதியிலுள்ள கட்டுரைகள் 'புறத்திரட்டு' என்னும் தொகை நூலுக்கு எழுதிய முன்னுரையாகும். இரண்டாம் தொகுதிக் கட்டுரைகள் பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் பற்றியது. திரிகடுகமும் சிறுபஞ்சமூலமும் என்னும் நூலுக்கு எழுதிய முன்னுரைப் பகுதியாகும். மூன்றாம் தொகுதிக் கட்டுரைகள் சர்.ஆர்.கே. சண்முகம் செட்டியார் வெளியிட்ட சிலப்பதிகாரம் புகார்க்காண்ட உரை நூலுக்கு எழுதிய முகவுரையாகும். நான்காம் தொகுதிக் கட்டுரைகள் அரும்பொருள்விளக்க நிகண்டின் முன்னுரைப் பகுதியிலிருந்து எடுக்கப்பெற்றவையாகும்.

'கம்பன் காவியம்' என்ற நூலில் கம்பன் காவியம், கம்பராமாயணமும் சைனராமாயணமும், கம்பனைக் கற்கும் நெறிகள், கம்பன் : ஆராய்ச்சிப் பதிப்பு, இராம காதை, இராமாயணப் பதிப்பு முயற்சிகள், கம்பனும் தமிழும், கம்பன் கவிச் சக்கரவர்த்தி ஆகிய கட்டுரைகள் உள்ளன.

'காவிய காலம்' என்ற நூல் தமிழ்க் காப்பியங்கள் தொடர்பான விரிவான ஆய்வு நூலாகும். காவியம், காவிய காலம்

காவியங்களின் வரலாறு, காவியங்களின் பொது இயல்பு, காவியங் களின் ஒடுங்குதசை ஆகிய ஐந்து பெரும் பகுதிகள் கொண்டது. திருவிதாங்கூர்ப் பல்கலைக்கழகத்தில் நிகழ்த்திய தொடர் சொற்பொழிவுகளின் தொகுப்பு நூலாகும்.

பேராசிரியர் மறைவுக்குப் பின் பேராசிரியரின் மகளார் வை. சரோசினி தம் தந்தையாரின் வெளிவராத கட்டுரைகள் சிலவற்றைத் தொகுத்து 'இலக்கிய விளக்கம்' என்ற பெயரில் நூல் ஒன்றை வெளியிட்டார். கலியுகப் பெருங்காவியம், இரவிக்குட்டிப் பிள்ளைப் போர், பாரத வெண்பா, கலிங்கத்துப்பரணியில் நகைச் சுவை, பரிபாடலும் நகைச்சுவையும், சிலப்பதிகாரத்தில் கண்ட ஓர் இலக்கண வழக்கு 2 பகுதிகள், நான்மணிக்கடிகை, தைந்நீராடல், வள்ளுவரும் மனுவும், தம்மபதம், பஞ்சதந்திரமொழி, புதிய இலக்கிய முறை, புத்தாண்டில் புதுமுயற்சி, திருக்குற்றாலப் பள்ளு, சொல்லின் ஒலிவடிவும் வரிவடிவும் ஆகிய கட்டுரைகள் உள்ளன. இவற்றுள் ஒருசில கட்டுரைகள் ஏற்கெனவே சில நூல் தொகுதி களில் வெளிவந்துள்ளவையாகும்.

பேராசிரியரின் இறுதி நாள்களில் எழுதப்பெற்று 'இலக்கிய மண்டபம்' என்ற தலைப்பில் தினமணி கதிரில் வெளிவந்த கட்டுரைகள் அனைத்தும் ஒருசேரத் தொகுக்கப்பட்டு 'அகராதி நினைவுகள்' என்ற பெயரில் வை. சரோசினியால் வெளியிடப் பட்டது. அகராதி நினைவுகள், அகராதி அனுபவங்கள், கற்றதனால் ஆயபயன், சிறு குழந்தைகளுக்குச் செய்யுட் பாடங்கள், பண்டைத் தமிழ்நாடும் சமயமும், பக்தியும் தெய்வ வரலாறுகளும், பக்திப் பெருவெள்ளம், பக்தி வெள்ளத்தின் விளைவு, பக்திக் கனியின் தீஞ்சாறு, வடநாட்டில் கண்ணன், அவதாரங்களும் தென்னாட்டுத் தொடர்பும், இராதாவும் கிருட்டிணனும், தமிழ்மொழிப் பற்றும் பிற மொழி வெறுப்பும் ஆகிய கட்டுரைகள் இந்நூலில் உள்ளன.

இவர் பெற்ற சட்ட அறிவு எதையும் காரண காரியத்தோடு தருக்கம், வாதம் கொண்டு அலசி ஆராய உதவியது. குறிப்பிட்ட ஒரு நூலைப்பற்றி ஆராயும்பொழுது, பேராசிரியர் அந்நூல் தோன்றியதற்கான காரணம், அதன் செல்வாக்கு, செல்வாக்கு இல்லாமைக்குரிய காரணம், அதன் நிலை, அழிவுக்கான காரணம் என்பன போன்றவற்றை விளக்கிச் செல்வதை மரபாகக் கொண்டுள்ளார். காய்தல் உவத்தல் அகற்றி ஒரு பொருட்கண் ஆய்தல் அறிவுடையோர் கண்ணே உள என்பதற்கேற்பத் தம் ஆய்வை நிகழ்த்தியுள்ளார். இவர் ஆய்வும் ஈடுபாடும் குறித்துப் பின்வரும் முடிவுகளுக்கு வரமுடிகிறது.

1. மொழியியல் பற்றிய சிந்தனை இல்லாத காலத்திலேயே, மொழியியல் முனைப்புக் கொண்டிருந்தார்.

2. காய்தல் உவத்தல் இன்றி, கருத்து அறிவியல் நோக்கில் ஆராய்ந்தவர்.

3. கால ஆய்வுக்கு அடிகோலியவர்; முக்கியத்துவம் தந்தவர்.

4. அகச்சான்றுகள் கூறிப் பழம்பெருமை பேசிய காலத்தில், கல்வெட்டு, வரலாறு போன்ற புறச்சான்றுகள் கொண்டு ஆராய்ந்தவர்.

5. தகுதிப்பாட்டை வெளிப்பாட்டின் மூலம் அறிய வேண்டும் என்றவர்.

6. சொல்லாய்வின் மூலம் தாம் சொல்ல வேண்டிய கருத்தை நிறுவியவர்.

7. திராவிட மொழி ஆய்வில் தனித்தன்மை காட்டியவர்.

8. ஆய்வைப் பொறுத்த அளவில் உணர்வு மூலமாகச் சிந்திக்காமல் எல்லாவற்றையும் அறிவு மூலமாகவே அணுகியவர்; உழைத்துப் பழகியவர்.

9. வெறுப்புக்கு அஞ்சாது அடலேறு எனப் பீடுநடை போட்டவர்.

10. ஆழ்ந்து அகன்ற விரிந்த புலமை உடையவர்.

11. வேண்டுதல் வேண்டாமை இலாதவர்.

12. இலக்கிய ஆய்வைவிடக் கால ஆய்வே இவரிடம் மிகுதி; அதிலேயே நாட்டம் கொண்டவராக விளங்கினார்.

13. இவரது முடிவுகளை மறுத்தாலும் இவர் மேற்கொண்ட ஆய்வு முறையை மறுக்க முடியாது.

14. ஒப்பியல் ஆய்வின் முன்னோடியாக விளங்கியவர்.

15. வடமொழி வழக்கு ஒழிந்த மொழி; வழக்கில் நின்று உயிர்த் தத்துவத்தோடு இருக்கும் தமிழ் மொழியே தமிழ் நாட்டில் தலைமை பெறுவதற்கு உரியதாகும் என்றவர்.

16. தமிழ்மொழியே அறிவு பெறுவதற்குரிய மொழி என்றவர்.

17. புது முயற்சிகளில் ஈடுபடும்போது, பிற தமிழறிஞர் களின் கருத்துகளை அறிந்து செயல்பட வேண்டும் என்ற நோக்குடையவர்.

18. தமது ஆய்வுக் கருத்துகளே முடிந்த முடிவுகள் என்று வலியுறுத்தும் பண்பு அவருக்கு இல்லை.

**நடை**

*இவர் ஏறத்தாழ 3694 பக்கங்கள் வரையில் உரைநடையில் எழுதியிருப்பதாகத் தெரிய வருகிறது. இவர் நடை இலக்கிய நயத்துடன் அமைந்திருக்கும். எதுகை மோனை இடம்பெறுவ தில்லை. மாறாக உருவகம் இடம்பெறுகிறது.*

> முந்நூற் கடல் நீரை முகந்து உண்டு மீண்டும் அமிருத வர்ஷமாய்ப் பொழிகின்ற மேகம் பொழிந்த நன்னீர் பின் கடல்களாகிய தடாகங்களில் நிரம்பி நின்று கல்வி விருப்புடையோர் அனைவரும் திளைத்து மகிழ்வதற்கு இயைந்ததாயுள்ளது

*என்று வால்மீகி இராமாயணத்தைக் கம்பர் கற்றுணர்ந்து தமிழ் இராமாயணம் இயற்றியதைச் சுட்டுகிறார்.*

*கருத்தை வெளிப்படுத்தும் முறையில் அமைந்த நடுத்தர அளவு வாக்கியங்களே இவரது உரைநடையில் மிகுதியாக உள்ளன. நாவல், சிறுகதை ஆகியவற்றில்கூடக் கொச்சை மொழி காணப்பட வில்லை. உயர்ந்த தமிழிலேயே எழுதியுள்ளார். பல ஆங்கிலச் சொற்கள் தமிழாக்கப்பட்டுக் கையாளப்படுகின்றன. ஆயின் நாவல், சிறுகதைகளில் மட்டும் ஒருசில ஆங்கிலச் சொற்களைப் பயன் படுத்தியுள்ளார். வடசொற்களை மிகுதியாகக் கையாண்டுள்ளார்.*

**பதிப்பித்த நூல்கள்**

*இலக்கியம், இலக்கணம், நிகண்டு, சிற்றிலக்கியம் ஆகிய பிரிவுகளின்கீழ்ப் பல நூல்களைப் பதிப்பித்துள்ளார். அவற்றின் விவரம் வருமாறு :*

**இலக்கியப் பதிப்புகள்** *: மனோன்மணீயம் (1922), திருமுரு காற்றுப்படை எளிய உரை (1930), அருள் முருகாற்றுப்படை (1931), கம்பராமாயணம் யுத்த காண்டம் முதல் மூன்று படலம் (1932), தினகர வெண்பா (1932), திருமந்திரம் (இணைந்து பதிப்பித்தது) (1933),*

திருமுருகாற்றுப்படை (இணைந்து பதிப்பித்தது) (புதிய உரையுடன்) (1933), கம்பராமாயணம் பாலகாண்டம் முதல் ஏழு படலம் (1933), புறத்திரட்டு (1938), சங்க இலக்கியம் (பாட்டும் தொகையும்) (1940), சீவக சிந்தாமணி மூலபாடம் (1941), திரிகடுகமும் சிறுபஞ்ச மூலமும் (1942), திருமுருகாற்றுப்படை உரையாசிரியர் உரை (1943), நான்மணிக் கடிகை (1944), இன்னா நாற்பது (1944), ஜீவ சம்போதனை (1946), இனியவை நாற்பது (1949), திவ்வியப் பிரபந்தம் முதலாயிரம் (1956).

**மனோன்மணீயம் :** பேராசிரியர் சுந்தரம் பிள்ளை எழுதிய மனோன்மணீயம் என்ற நாடகத்தை 1922இல் வையாபுரிப் பிள்ளை பதிப்பித்துள்ளார். இந்நூலே இவர் பதிப்பித்த முதல் நூலாகும். சீரிய முறையில் சந்தி பிரித்துப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. ஒப்பு நோக்க விரும்புகின்றவர்களுக்கு முதற் பதிப்புப் பாடங்களையும் விவரணக் குறிப்பாகப் பின்னிணைப்பில் தந்துள்ளார். முதற் பதிப்பில் கண்ட பாடங்கள் மு.ப. என்றும், பல்கலைக்கழகத் தேர்வுக்கு ஏற்பட்ட பகுதிகளில் நூலாசிரியர் திருத்திய பாடம் ப.ப. என்றும் குறியீடு செய்து ஆங்காங்கு அடிக்குறிப்பில் தந்துள்ளார். ஆசிரியர் சுந்தரம் பிள்ளை தந்த விவரணக் குறிப்போடு தேவை என்று தோன்றிய வேறு குறிப்புகளையும் தாம் எழுதிச் சேர்த்துள்ளதாக முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். இக்குறிப்புகள் ஆசிரியரது கருத்துகளைத் தெளிவாக அறிந்து கொள்வதற்குத் துணைபுரியும். நூலாசிரியர் குறிப்பு இதுவெனத் தனிப்படப் பிறை வளைவு ( ) அடையாளத்துடன் அமைத்துள்ளார். இதனால் நூலாசிரியர் குறிப்பும் பதிப்பாசிரியர் குறிப்பும் தெளிவாகத் தெரியும். மேலும் பின்னிணைப்பில் அரும்பத அகராதி, முதல் நூலாகிய லிட்டன் பிரபு எழுதிய 'இரகசிய வழி' (The Secret Way) என்ற ஆங்கிலக் கவிதை ஆகியன உள்ளன.

**திருமுருகாற்றுப்படை :** திருமுருகாற்றுப்படையைப் புதிய உரையுடன் இணைப் பதிப்பாசிரியர் என்ற நிலையில் 1933இல் பதிப்பித்தார். இவ்வுரை பாராயணம் செய்வதற்கு ஏற்றபடி எளிய நடையில் அமைந்தது. பாடுகின்றவர்கள் பாட்டின் பொருள் உணர்ந்து சொல்வதற்கும் ஏற்றது. 'முன்னுரை'யில் நக்கீரரைக் குறித்து ஆராய்ச்சியுரை தெளிவாக, விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளது. தமிழ்இலக்கிய உலகில் நக்கீரர் என்ற பெயருடையவர்கள் மூவர் உளர் என்கின்றார். பின்னிணைப்பில் நூற்பொருள் அகராதி, சொற்றொடரகராதி, பாடபேதம், விடுபாடல்கள் (10 பாடல்கள்) ஆகியன இடம்பெற்றுள்ளன.

**கம்பராமாயணம் :** கம்பராமாயணத்திற்கு நல்ல பதிப்பு அமையவில்லை என்று 'கம்பன் காவியம்' என்ற நூலில் தருகின்றார்.

அந்த வகையில் கம்பராமாயணத்தைப் பொதுமக்கள் கற்றுப் பயனடைய உதவும் பதிப்பாக வெளியிட விரும்பிய பேராசிரியர் பல முயற்சிகளைச் செய்தார். 1932இல் யுத்த காண்டத்தில் கடல் காண படலம், இராவணன் மந்திரப் படலம், மாணியன் வதைப் படலம் ஆகிய மூன்று படலங்களை ஒப்புநோக்கி ஆராய்ந்து மூலப்பதிப்பை வெளியிட்டார். 1933இல் பெ.நா. அப்புசுவாமியுடன் இணைந்து பாலகாண்டம் முழுவதையும் முதல் ஏழு படலங்களைப் பதிப்பித்தார். ஒவ்வொரு காண்டத்தின் முன்பும் அக்காண்டத்திற்குரிய கதைச் சுருக்கம் ஒவ்வொரு படலத்தின் முன்பும் படலத்திற்குரிய கதைச் சுருக்கம் படலப் பொருளின் விளக்கம் ஆகியவற்றைச் சேர்த்துள்ளார்.

**சங்க இலக்கியம் (பாட்டும் தொகையும்) :** பத்துப்பாட்டு, எட்டுத்தொகை ஆகிய இரண்டையும் இணைத்துச் சங்க இலக்கியம் என்ற பெயரில் 'புலவர் முறைப் பதிப்'பாக முதன் முதல் வெளிக் கொணர்ந்தவர் பேராசிரியர் ச. வையாபுரிப் பிள்ளையாவார். மூலம் மட்டும் உள்ள இந்நூலில் ஒரு புலவர் பாடிய பாடல்களை ஒருசேரப் படிக்க இப்பதிப்பு உதவுகிறது. தாம் பதிப்பித்த நோக்கம் குறித்து,

> இப்பதிப்பை ஆராய்ச்சிக்கு ஓரளவு எளிய வசதி அளிக்கும் குறிப்பு நூலாகக் கொள்ள வேண்டுமே யொழிய எட்டுத் தொகையும் பத்துப்பாட்டும் மூலமும் உரையுமாக வெளிவந்துள்ள அருமையான பதிப்புகளுக்குப் பதில் இதை உபயோகிக்கலாம் என்று எவரும் கனவிலும் எண்ணி ஏமாற்றமடைதல் கூடாது. அப்பதிப்பிலுள்ள உரை, விஷய அகராதி, பிரதி பேதங்கள், பாடினோர் வரலாறு, பாடப்பட்டோர் வரலாறு முதலியன இப்பதிப்பில் இல்லை. உவர்நீர் அருந்தினால் தாகம் மிகும் என்பதை ஒப்ப இப்பதிப்பைப் பயிலுதல் அப்பதிப்புகளைப் பயன்படுத்தும் வேட்கையைத் தோற்றிப் பெருக்குமென்பதில் ஐயமில்லை. அவ்வரிய பதிப்புகளைப் பயின்றபின் அவற்றுள் காணப்படும் நூற்பொருள்களை எளிதில் நோக்கி உணர்தற்குரிய கருவி நூலாகவும் இப்பதிப்பு பயன்படக்கூடுமென்று நம்புவதற்கிடமுண்டு

என்று கூறியுள்ளார்.

இந்நூலின் உண்மைப் பாடங்களைத் தாம் எவ்வாறு தேர்ந்தெடுத்தார் என்பதை,

பற்பல வழிகளில் முயன்று நூற்றுக்கணக்கான இடங்களில் செப்பஞ் செய்யப்பெற்ற மூலமே இப் பதிப்பில் தரப்பட்டுள்ளது. இவ்வளவு முயற்சி செய்தும் பொருள் விளங்காப் பகுதிகள் பல உள்ளன. இப்பகுதிகளில் பாடம் சிதைந்துள்ளது என்பது எளிதில் அறியக் கிடக்கின்றது. பாடம் இவ்வாறிருத்தல் வேண்டுமென்று ஊகிக்கவும் இடமுண்டு. ஊகங்கள் உண்மையெனத் துணிந்த விடத்தும் அதை இப் பதிப்பிற் பிழை திருத்தமாக உடுக்குறியுடன் கொடுக்கப் பட்டுள்ளனவேயன்றி மூலங்கள் திருத்தப் பெறவில்லை. பிரதிகளில் உதவியின்றிக் கேவலம் ஊகத்தையே கடைப்பிடித்துப் பாடங்களை மாற்றி விடுதல் அடாத காரியம். இப்பகுதியில் ஒரு பாடமேனும் ஊகத்தால் மாற்றப்படவில்லை

*என்று தாம் பதிப்பித்த முறை குறித்துக் கூறுகின்றார். அடுத்து அதே 'முன்னுரை'யில் உண்மைப் பாடங்களைத் தேர்ந்தெடுப்பதற்கான முறைகளையும் பின்வருமாறு கூறியுள்ளார் :*

1. உரையின்றி நூல்கள் மட்டும் கிடைக்குமிடத்து, பிரதிகளிலுள்ள மூலத்தால் மட்டும் திருத்தம் செய்தல்.

2. உரைகளுமுள்ள இடத்து அவற்றின் துணைக் கொண்டு பிரதிகளிலுள்ள மூலத்தை நோக்கிப் பொருத்தமுள்ள பாடம் கொள்ளுதல்.

3. தொல்காப்பிய உரை முதலியவற்றில் மேற்கோளாக எடுத்தாளப்பட்ட இடத்து அவ்வுரையில் காணும் பாடத்தோடு ஒப்புநோக்கித் தகுதியான பாடங் கொள்ளுதல். உத்தேச பாடங்களைக் குறியீட்டுடன் அமைக்க வேண்டும்; தாம் மேற்கொள்ள வேண்டும் பாடங்கள் எவையெவை என்பதைத் திட்டமாக வரையறுத்துத் தெரிந்தெடுத்த உண்மையான பாடத்தை நூற்பகுதியில் அமைத்தல் வேண்டும்.

*'சங்க இலக்கியம்' என்ற பெயர்ப் பொருத்தம் குறித்து இந்நூலின் 'முன்னுரை'யில்,*

பத்துப் பாட்டும் எட்டுத் தொகையும் சங்க இலக்கியத்தின்பாற்பட்டவை என்பதை எவரும் மறுக்க

> இயலாது. சிலப்பதிகாரம், பதினெண் கீழ்க்கணக்கு முதலியவைகட்குச் சங்க இலக்கியம் என்ற பெயர் பொருந்துவதைப் பற்றிப் பலவகையான கருத்து வேற்றுமைகளுண்டு. தொல்காப்பிய உரையுள் பேராசிரியர் மரபியல் 94ஆம் சூத்திர உரையிலும், நச்சினார்க்கினியர் அகத்திணையியல் 6ஆம் சூத்திர உரையிலும், புறத்திணையியல் 26ஆம் சூத்திர உரையிலும் கூறுவனவற்றிலிருந்து எட்டுத் தொகையும் பத்துப் பாட்டுமே சங்க இலக்கியம் என்று கருதப்பட்டது என்பது தெளிவாம். வேற்றுமை இன்றி அனைவரும் ஒப்புக்கொள்ளக் கூடிய பகுதிக்கே சங்க இலக்கியம் எனப் பெயரிடுதல் பொருந்தும்

*என்று கூறியுள்ளமை இவண் கருதத்தகும்.*

*சுவடிகளைப் பதிப்பிக்கும் பொழுது எந்தெந்த முறைகளைக் கையாளவேண்டும் என்பதையும் பேராசிரியர் கூறியதைக் காணமுடிகின்றது. அவை வருமாறு :*

1. ஏடு வாசிக்கும் பயிற்சி உடையவர்கள் மூலம் பாடல்களை அறியவேண்டும்.
2. பாட வேறுபாடுகளைக் குறிக்கும்போது இன்ன பிரதிகளில் உள்ளன என்று பிரதிகளின் பெயர் களுடன் குறித்தல் வேண்டும்.
3. பாட வேறுபாடுகளை ஆராயும்போது ஒவ்வொரு சொல்லையும் மிகவும் கவனமாக இனம்காண வேண்டும்.
4. சிறந்த பாடத்தைத் தேடுவதைவிட உண்மையான பாடத்தையே தேட முயலவேண்டும்.
5. பல இடங்களில் சிறந்த பாடமும் மூலபாடமும் ஒன்றாகவே அமைதலும் கூடும்.

**சீவக சிந்தாமணி :** *இந்நூலின் மூலத்தை மட்டும் 1941இல் பதிப்பித்தார். பல சுவடிகளையும் ஒப்புநோக்கி இந்நூல் பதிப்பிக்கப்பட்டது.*

**புறத்திரட்டு** *: இந்நூல் பதிப்பு முறைகள் 'முன்னுரை'யில் தரப்பட்டுள்ளன. புறத்திரட்டின் ஒவ்வொரு செய்யுளின் முடிவிலும் அந்தச் செய்யுள் எந்த நூலிலிருந்து எடுக்கப்பட்டதோ அந்த நூலின்*

குறிப்பு, பாடல் எண் முதலியன கொடுக்கப்பட்டுள்ளன; செய்யுள் முதற்குறிப்பகராதியும் மூல விளக்கமும், மூல நூல்களும் அவற்றினின்று தொகுத்த புறத்திரட்டுச் செய்யுள்களும், இப் பதிப்பிற்கு உதவிய மூல நூல்களைப் பற்றிய குறிப்புகள், புறத்திரட்டுச் சுருக்கத்திலுள்ள செய்யுள்கள், பாட வேறுபாடுகள், பெயரகராதி போன்றவை பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளன.

இந்நூலில், சங்க இலக்கியத்திற்குப்பின் பதினான்காம் நூற்றாண்டுவரை தோன்றிய நீதி, சமயம், தத்துவம் பற்றிய தொகை நூல்கள், அக்காலப்பகுதியில் இலக்கிய வளர்ச்சி, புறத்திரட்டின் தோற்றம் ஆகியவை தொடர்ச்சியாகத் தரப்பட்டுள்ளன. இந் நூலால் பல விளக்கமாகாப் பகுதிகள் விளக்கமாயின; பல நூல்களில் குறைபட்டிருந்த பாடல்கள் இதிலிருந்து எடுத்துக் கொள்ளப்பட்டன. 'தமக்குக் கண்ணைக் கொடுத்த நூல்' என்று உ.வே.சா.வாலே பாராட்டிச் சிறப்பிக்கப்பட்ட பெருமை உடையது.

**நான்மணிக்கடிகை :** உரையுடன் பலவகை ஆராய்ச்சிக் குறிப்புகளுடன் பதிப்பிக்கப்பட்ட இப்பதிப்பில் இவர் கையாண்ட பதிப்பு முறைகள் வருமாறு :

1. செய்யுட்களில் காற்புள்ளி, அரைப்புள்ளி முதலான குறியீடுகள் தரப்பட்டுள்ளன. வாசிக்கின்றவர் களுக்குப் பொருள் எளிதில் விளங்கும் வண்ணம் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

2. தனிச் சொல்லுக்கு அடையாளமாக இடும் சிறுகோடு நீக்கப்பட்டுள்ளது.

3. சொற்கள் அசையுறுப்புக் கெடாத வண்ணமும் எதுகை, மோனை, சீர் இவற்றின் நயங்கள் கெடாத வண்ணமும் பிரிக்கப்பட்டுள்ளன.

4. பாடவேறுபாடுகள் அந்தந்தப் பக்கத்திலேயே சீர் எண்களோடு கொடுக்கப்பட்டுள்ளன.

5. பின்னிணைப்பில் செய்யுள் முதற்குறிப்பகராதி, நூற்பொருள் அகராதி, சொல்-தொடர் அகராதி, அருஞ்சொற்பொருள் ஆகியவை அமைந்துள்ளன.

6. பாடற்பொருளிலும் உரைகளிலும் தனிப்பட விளக்கம் வேண்டிய இடங்களுக்கு விரிவான ஆராய்ச்சி விளக்கம், ஒப்புமைக் கருத்துகள் போன்றவை

'விளக்கக் குறிப்பு' என்ற பகுதியில் இடம் பெற்றுள்ளன.

7. பதிப்புக்கு உதவிய ஏட்டுச் சுவடிகள், நூல்கள் தொடர்பான விவரங்கள் தரப்பட்டுள்ளன.

**இனியவை நாற்பது :** முன்னுரை, ஒப்பு நோக்கிய அச்சுப் புத்தகங்கள், ஒப்பு நோக்கிய ஏட்டுப் பிரதிகள், நூல் (பழைய உரையும் விளக்க உரையும்), ஆராய்ச்சிக் குறிப்புக்கள், செய்யுள் முதற் குறிப்பு, நூற் பொருள், சொல்-தொடர் அகராதி, அருஞ்சொற் பொருள் ஆகிய தலைப்புகளில் 80 பக்கங்களைக் கொண்டுள்ள இந்த நூல் 1949இல் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இந்நூலின் 'முன்னுரை'யில் காணப்படும் செய்திகளுள் ஒருசில வருமாறு :

முற்காலத்தில் தமிழ் கற்போர் அனைவரும் கற்றற்குரிய நூலாகவே இது கொள்ளப்பட்டிருத்தல் வேண்டும். இவர் பதிப்பிப்பதற்கு முன் பல தமிழறிஞர்களும் இந்நூலைப் பதிப்பித் துள்ளனர். அவற்றுள் இராமாநுசக் கவிராயர் பதிப்பு ஒன்று மட்டும்தான் ஏட்டுப் பிரதி நோக்கிப் பதிப்பிக்கப்பட்டது. வை.மு. சடகோபராமாநுசாச்சாரியார் கொடுத்த கையெழுத்துப் பிரதியைச் சான்றாகக் கொண்டு இந்நூல் வெளியிடப்பட்டது.

இராமானுசக் கவிராயர் 'இனியா நாற்பது' என்றும், ரா. இராகவையங்கார் 'இனியது நாற்பது' என்றும், தி.ச. ஆறுமுக நயினார் 'இனியவை நாற்பது' என்றும், கோவிந்தராச முதலியார் 'இனிது நாற்பது' என்றும் பதிப்பித்துள்ளனர்.

**இலக்கணப் பதிப்புகள் :** களவியற் காரிகை (1931), தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம் (களவியல், கற்பியல், பொருளியல்) (1933), தொல்காப்பியப் பொருளதிகாரம் நச்சினார்க்கினியம் (1934), தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம் (மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல், மரபியல் (1935), நவநீதப்பாட்டியல் உரையுடன் (1943).

**தொல்காப்பியம் :** தொல்காப்பியம் பொருளதிகாரம் நச்சினார்க்கினியர், இளம்பூரணர் ஆகியோர்தம் உரைகளுடன் பேராசிரியர் பதிப்பித்துள்ளார். நச்சினார்க்கினியர் எழுதிய உரையுடன் முதல் ஐந்து இயல்கள் 1934இல் பதிப்பிக்கப்பட்டன. இளம்பூரணர் உரையை முதன் முதல் பதிப்பித்த பெருமை பேராசிரியரையே சாரும். வ.உ.சி.யால் தொடங்கப்பட்ட இப் பதிப்புப் பணியைப் பேராசிரியர் முற்றுவித்தார். இப்பதிப்பில் சூத்திர முதற் குறிப்பகராதி, மேற்கோள் அகராதி, பாடபேதம் ஆகியவை இடம்பெற்றுள்ளன.

**களவியற் காரிகை** : இந்நூல் 1931இல் பதிப்பிக்கப்பட்டது. 'களவியற் காரிகை' என்ற பெயரைத் தாமே அமைத்துக் கொண்டதாகக் கூறுகின்றார். இந்நூல் அகப்பொருள் செய்திகளை அந்தாதித் தொடையில் அமைந்த கட்டளைக் கலித்துறைச் செய்யுளால் சுருங்க உரைக்கின்றார். பொருளிலக்கணம் கற்பவருக்கு இந்நூல் இனிய விருந்தாக அமையும் என்கின்றார். நூலின் பின்னிணைப்பாகக் களவியற் காரிகையில் வந்துள்ள மேற்கோள் நூல்களைப் பற்றிய குறிப்புகளைச் சேர்த்துள்ளார்.

'முன்னுரை'யில் இந்நூலைப் பதிப்பித்ததில் கையாண்ட முறைகள் கூறப்பட்டுள்ளன. செய்யுள்களும் தொடர்களும் எழுத்துகளும் காணப்பெறாத இடங்களில் புள்ளிகள் வைக்கப் பட்டுள்ளன. மறைந்து ஒழிந்த பகுதிகள் ஒருவாறு அனுமானிக்கக் கூடிய இடங்களில் அனுமானித்த தொடர் முதலியவற்றை இருதலைப் பகரத்தில் [ ] காட்டப்பட்டுள்ளன. தவறான இடைச் செருகல்கள் இருதலைப் பிறையில் ( ), தவறான பாடல்களின் உத்தேச பாடங்கள் கேள்விக்குறி பெய்த இருதலைப் பிறையில் (?) அமைக்கப்பட்டுள்ளன. இடங்காட்டப்பெறாத மேற்கோள்களுள்ளே இப்போது விளங்கியவற்றுக்கு இடங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

**நவநீதப்பாட்டியல்** : திருவனந்தபுரம் சுவடி நிலையத்தில் உள்ள மலையாள லிபியில் உள்ள சுவடி, அரசு தொன்னூல் நிலைய மூலப்பிரதி, மதுரைத் தமிழ்ச் சங்க மூலப்பிரதியோடு ஒப்பு நோக்கிப் பரிசோதித்து 1943இல் இந்நூலைப் பதிப்பித்துள்ளார். உரையில் கண்ட விசேடங்கள், பிரதிகளில் கண்டுள்ள தனிச் செய்யுள்கள், பிரபந்த அகராதியும் இலக்கணமும் என்பதில் 96 வகைப் பிர .ந்தங்களின் இலக்கணங்கள் சதுரகராதியில் உள்ளபடி அகரவரிசைப் பட்டியல், பட்டியலின் ஒப்பு நோக்குப் பட்டிகை, புத்துரையில் எடுத்தாளப்பட்டுள்ள நூல்கள், பழைய உரையில் எடுத்தாளப்பட்டுள்ள நூல்கள், தொல்காப்பியர் காலத்துச் செய்யுள் வகைகள், பிற்காலத்தெழுந்த செய்யுள் வகைகள், பொருட் குறிப்பகராதியும் செய்யுள் முதற் குறிப்பகராதியும் போன்றவை பின் இணைப்பாக இணைக்கப்பட்டுள்ளன. இந்நூலுக்கு மு. சண்முகம் பிள்ளை உரை எழுதியுள்ளார்.

**நிகண்டுப் பதிப்புகள்** : நாமதீப நிகண்டு (1930), அரும் பொருள் விளக்க நிகண்டு (1931), பிங்கல நிகண்டு (1931), கைலாச நிகண்டு (1931), பொதிகை நிகண்டு (1934), கயாதரம் (1939).

**நாமதீப நிகண்டு** : இந்நூல் பழைய உரையைத் தழுவி இயற்றிய புத்துரையுடன் கூடிய பதிப்பாக 1930இல் பதிப்பிக்கப்பட்டது. இப்பதிப்புக்கு உதவிய ஏட்டுப் பிரதிகள் பற்றிய விவரங்கள், பாட

வேறுபாடுகள் தம்மால் மேற்கொள்ளப்பட்ட விவரம், நூலாசிரியர் தொடர்பான செய்திகள், நூலமைப்பு பற்றிய செய்திகள் 'முன்னுரை'யில் தரப்பட்டுள்ளன.

**அரும்பொருள் விளக்க நிகண்டு** : இந்நூல் 1931இல் செந்தமிழ்ப் பிரசுர வெளியீடாகப் பதிப்பிக்கப்பட்டது. இதில் இரண்டு ஏட்டுப் பிரதிகள், ஒரு காகிதப் பிரதி ஆகியவற்றைப் பயன்படுத்தியுள்ளார்.

**கயாதர நிகண்டு** : இந்நூல் 'பதிப்பு முன்னுரை'யில் நூற்பெயர், ஆசிரியர் வரலாறு, நூலின் படிகள், நூலின் சிறப்பியல்புகள், நூற்பயன், நூலில் காணும் மரபுகள், பதிப்பிற்கு உதவிய பிரதிகள் பற்றிய குறிப்பு போன்றவற்றைக் கூறியுள்ளார். இந்நிகண்டைப் பதிப்பிக்கப் பின்வரும் முறைகளைக் கையாண்டுள்ளார்.

1. பாடவேறுபாடுகள் அடிக்குறிப்பாக உள்ளன.
2. நூலின் செய்யுள் எண்கள் அடிக்குறிப்பில் தடித்த எண்களால் குறிக்கப்பட்டுள்ளன.
3. பிற எண்கள் செய்யுளின் சீர்க்குரிய எண்களாகும்.
4. பிரதிகளில் இல்லாமல் தம்மால் ஊகிக்கப் பட்டவற்றை இருதலைப் பகரத்துள் [ ] கொடுத்துள்ளார்.
5. பல பொருள் ஒருசொல் தடித்த எழுத்தில் உள்ளன.
6. கடின சந்தி பிரிக்கப்பட்டுள்ளது.

**சிற்றிலக்கியப் பதிப்புகள்** : துகில்விடு தூது (1927), குருகூர்ப் பள்ளு (1932), திருப்பணி மாலைகள் : தென்திருப்பேரை மகர நெடுங்குழைக்காதர் திருப்பணி மாலை, திருக்கோர் வைத்தமாநிதி திருப்பணி மாலை (1933), திருக்குறுங்குடி அழகிய நம்பி உலா (1933), நெல்விடு தூது (1933), பூகோள விலாசம் (1933), இராஜராஜ தேவர் உலா (1934), மதுரைக் கோவை (1934), இராமலிங்கேசர் மீது பணவிடு தூது (1934), முப்பந்தொட்டியுலா (1934), தெய்வச் சிலையார் விறலிவிடு தூது (1936), சாத்தூர் நொண்டி நாடகம் (1936), கொண்டல் விடு தூது (1940), இராமப்பையன் அம்மானை (1950), இரவிக்குட்டிப் பிள்ளைப் போர் (1950).

**இராஜ ராஜ தேவருலா** : இந்நூல் தென்னிந்திய வரலாற்று ஆய்வுக்குப் பயன்படுவது என்றும் தமக்குக் கிடைத்த கையெழுத்துப் பிரதியை வைத்துப் பதிப்பித்திருப்பதாகவும் தெரிவித்துள்ளார்.

**தெய்வச்சிலையார் விறலிவிடு தூது** : வரலாற்றுத் தொடர்பான இந்நூலை எம்.பி.எஸ். துரைசாமி முதலியாருடன் சேர்ந்து பதிப்பித்துள்ளார்.

**குருகூர்ப் பள்ளு** : இந்நூல் முன்னுரை விரிவான ஆய்வுரையாக உள்ளது. பிரபந்தங்களின் எண்ணிக்கை பற்றிய கருத்து வேறுபாடுகள், பிரபந்த வகைகள், குருகூர்ப் பள்ளுவின் ஆசிரியர், நூற்பொருள் ஆகியவை பற்றிய கருத்துகள் விரிந்த அளவில் பேராசிரியரால் ஆராயப்பட்டுள்ளன.

தமிழ் நூல்களைப் பதிப்பிக்கும் முயற்சியில் ஈடுபடும் போது, ஏனைய மொழிகளில் உள்ள பதிப்பு முறைகளை ஆராய்வதிலும் பேராசிரியர் கவனம் செலுத்தியுள்ளார்.

**தமிழ் நூற்பதிப்பின் நிலை**

'திராவிட மொழிகளில் ஆராய்ச்சி' என்ற நூலில் அக்காலத்தில் மேற்கொள்ளப்பட்ட தமிழ் நூற்பதிப்பின் நிலை குறித்து,

> பொதுப்பட நமது பதிப்புகள் குறித்து ஒருசில விஷயங்களைக் குறிப்பிட விரும்புகிறேன். மேலை நாட்டினர் ஆராய்ச்சிக் குறிப்புகளுடன் நூல்களைப் பதிப்பிப்பதோடு நம் பதிப்பாளர்களின் முயற்சியைச் சிறிதேனும் ஒப்பிடுவதற்கில்லை. ஓலைச்சுவடிகள் கிடைத்த போதிலும் அவற்றைப் பயன்படுத்திக் கொள்வதில்லை. அவசியம் வேண்டும் முன்னுரை யோ, செய்யுள் முதற்குறிப்பகராதி, சொல்லகராதி, பொருளகராதி முதலியனவோ பல பதிப்புகளில் காணப்பட மாட்டா. ஓலைச்சுவடிகளை ஒப்பு நோக்கு வதன் மூலம் கிடைக்கும் பாட பேதங்களையும் குறிப்பிடுவதில்லை. இவை பெருத்த குறைபாடுகள் ஆகும். ஆராய்ச்சிக் குறிப்புகளுடன் நூல்களைப் பதிப்பித்தல் வேண்டும். மொழியாராய்ச்சிக்கும், நூல்களின் காலத்தை நிர்ணயிப்பதற்கும், இலக்கியத் துறையில் பல்வேறு காலங்களைத் துணிவதற்கும், அகராதி தயாரிப்பதற்கும் மற்றும் அடிப்படை விஷயங்களை அறிவதற்கும் இவை பயன்படும் என்பது மனம் கொள்ளத்தக்கது [51]

என்று கூறுகின்றார்.

### பதிப்பு முயற்சி

*பேராசிரியரின் பதிப்பு முயற்சிகளை இரண்டு வகையாகப் பிரிப்பார் இராதா செல்லப்பன்.*[52]

1. ஏற்கெனவே பிறரால் பதிப்பிக்கப்பட்டுள்ள நூல்கட்கு மேலும் திருந்திய பதிப்பு தேவை என்ற அடிப்படை. முந்திய பதிப்பாசிரியர்களுக்குக் கிடைக்கப் பெறாத ஏட்டுச்சுவடிகளை அரும்பாடு பட்டுத் தேடிப் பெற்றதே இம்முயற்சிக்குக் காரணம். (எ.கா.) கம்பராமாயணம் - பால காண்டம் (1-7 படலம்), யுத்த காண்டம் (1-3 படலம்).

2. அதுகாறும் அச்சு வடிவம் பெறாமல் ஏட்டுச்சுவடி யாகவோ கையெழுத்துப் படியாகவோ அமைந் திருந்த நூல்களை அறிமுகம் செய்யும் அவா. (எ.கா.) தொல்காப்பியம் இளம்பூரணருரை, களவியற் காரிகை.

*தமது பதிப்புகளைச் செந்தமிழ் (இராஜராஜ தேவருலா), சக்தி (சாத்தூர் நொண்டி நாடகம்), கலா நிலையம் (தினகர வெண்பா), சித்தாந்தம் (முப்பந்தொட்டியுலா), லோகோபகாரி (துகில்விடு தூது) ஆகிய காலமுறை இதழ்களில் முதலில் வெளியிட்ட பின்னரே அவற்றைப் பின்னர் நூல் வடிவமாக்கினார்.*

### பேராசிரியர் கையாண்ட பதிப்பு முறைகள்

*பேராசிரியர் ஏறத்தாழ நாற்பதுக்கும் மேற்பட்ட நூல்களைப் பதிப்பித்துள்ளார். ஒரு நூலைக் கற்பவர்களுக்குத் தவறான பாடங்களுள்ள பதிப்புகளைக் கொடுப்பது பெரும்பிழையாம்; பொருள் விளங்கும்படி பதிப்பிக்க வேண்டும் என்று கூறியதோடு சிறந்த பதிப்பு எவ்வாறு அமைய வேண்டும் என்பதற்கும் பல நெறிமுறைகளைப் பேராசிரியர் தருகின்றார். அவை வருமாறு :*

1. பதிப்பிக்கும் நூலுக்கு ஆராய்ச்சி முன்னுரை தேவை. அந்த வகையில் இவரால் பதிப்பிக்கப்பட்ட நூல்களின் முன்னுரையில் நூலின் காலம், நூலாசிரியர் குறித்த செய்திகள், பாட்டுடைத் தலைவன் குறித்த செய்தி, நூற்பெயர் பற்றிய செய்தி, சில நூற்பெயர்களின் உண்மையான பாடத்தைத் துணிதல், நூல் அமைப்பு, நூலால் அடையும் நன்மை, நூலின் இலக்கிய வகை குறித்த விவரங்கள், நூலில்

காணும் மரபுகள், மேற்கோள் நூல்களைப் பற்றிய குறிப்புகள், முற்பதிப்பு விவரங்கள் போன்றவற்றைக் காணமுடிகின்றன.

2. ஏட்டுச் சுவடிகளின் சிதைந்த பகுதிகளுக்கு அந்நூலின் பதிப்பில் அப்பகுதியை நிரப்பாமலேயே புள்ளி வைத்து விடுகின்றார்; அதேநேரத்தில் ஊகிக்கக் கூடிய பகுதிகளை அடைப்புக் குறிக்குள் தந்துவிடும் முறையையும் கையாள்கின்றார்.

3. உத்தேச பாடங்களைக் குறியீட்டுடன் அமைக்கிறார். தாம்மேற்கொள்ள வேண்டிய பாடங்கள் எவையெவை என்பதைத் திட்டமாக வரையறுத்து, தேர்ந்தெடுத்த உண்மையான பாடத்தை நூற்பகுதியில் அமைக்கின்றார்.

4. சொற்களைப் பிரிக்கின்ற போது எதுகை, மோனை, சீர் நயங்கள் கெடாதவாறு பிரிக்க வேண்டும் என்கின்றார். தாம் பதிப்பித்த நூல்களில் பின்வரும் அமைப்புடைய சொற்களைப் பிரித்து அமைக்கவில்லை.

1. மரபுவழிப்பட்ட அடைமொழிகள் (சிறுமை, பெருமை, கொடுங்குழை).

2. ஒரு சொல் நீர்மைத்தாக அமைந்தவை (வேளாண்மை, எட்டுணையானும்).

3. எல்லாம் என்பது சேர்ந்து வரும் பதங்கள் (மன்னுயிர்க்கெல்லாம்).

4. ஆ, ஆக, ஆகிய ஆகியன சேர்ந்து வரும் பெயர்ச் சொற்கள் (தலையாக).

5. வேற்றுமை உருபுகள், சாரியை, சொல்லுருபுகள் சேர்ந்து வரும் சொற்கள் (காவோடு, நூலோடு).

6. உபசர்க்கம், துணைவினை ஆகியன சேர்ந்து வரும் சொற்கள் (கையிகந்து).

7. செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம் (வாழுந்தவசிகள்).

8. எச்சத்தின் மேல் வரும் அன்ன, அனைய ஆகியன (செய்தனைய).

9. எச்ச வாய்பாடுகள் (சொல்லுங்கால்)

5. பொருள் விளக்கத்திற்கு வேண்டும் குறியீடுகளை நூற்பொருள் தெளிவுக்காக, பாடல்களில் கால் புள்ளி, அரைப்புள்ளி, முக்கால்புள்ளி ஆகியன அமைக்க வேண்டும். இவ்வாறு அமைக்கும் பொழுது நேரிசை வெண்பாவில் இரண்டாவது அடியின் இறுதிச்சீரின் முன்னர் அமைந்துள்ள சிறுகோட்டை நீக்கிவிட்டார்.

6. நூலின் இறுதியில் பலவகையான அகராதிகள் தொகுக்கப்பட்டுத் தரப்பட்டுள்ளன. அந்த அகராதிகள் வருமாறு : சிறப்புப் பெயரகராதி, புலவர்களும் பாடல் தொகையும், பாட்டு எண்களின் ஒப்புநோக்கு அட்டவணை, உறுப்பு, ஊர் முதலியவற்றில் அமைந்த புலவர்களின் பெயர் வகைகளின் அகராதி, புலவர்களும் அவர்களால் பாடப்பட்டோரும், பெண்பாற் புலவர்கள், அரசர் முதலானோரும் அவர்களைப் பாடினோரும், புலவர்களின் பெயரகராதி, பாட்டெண் முதற் குறிப்பகராதி, சொற்பொருள் அகராதி, பொருள் விளக்கக் குறிப்புகள், செய்யுள் முதற்குறிப் பகராதி, சூத்திர அகராதி, மேற்கோள் நூலகராதி, மேற்கோள் செய்யுளின் அகராதி, நூற்பொருள் அகராதி.

7. பாடல்களில் 1, 2 என்று எண்கள் தரப்பட்டு அவற்றிற்கான பாடவேறுபாடுகள் அடிக்குறிப்பாகத் தரப்பட்டன.

*பேராசிரியர் பதிப்பித்த நூல்களிலிருந்து மு. சண்முகம் பிள்ளை பின்வரும் பத்து முடிவுகளைத் தருகின்றார்.*[53]

1. ஒரு நூலுக்குக் கிட்டும் பிரதிகள் எல்லாவற்றையும் தேடி ஒருங்கு தொகுத்தல்.

2. முன்பு அச்சில் வந்துள்ள நூலை மீண்டும் பதிப்பிப்பதாயின் அந்நூலுக்குரிய எல்லாப் பதிப்பு களையும் தொகுத்தல் வேண்டும். மேலும் அந் நூலுக்குக் கிட்டும் சுவடிகளையும் பயன்படுத்தல் வேண்டும்.

3. முதன்முதல் சுவடியிலிருந்து வெளியிடப் பெறும் புதிய நூலாயின் கிட்டும் ஏட்டுச் சுவடிகளைப்

பரிசோதித்து ஒன்றிற்கொன்றுள்ள இயைபுகளைக் கொண்டு இனவாரி பாகுபடுத்த வேண்டும்.

4. பழமையான ஒரு சுவடியைப் பிரதி செய்து வைத்துக் கொண்டு ஏனைய சுவடிகளை அதனுடன் ஒப்பு நோக்கிப் பாட வேறுபாடுகளைக் குறித்தல் வேண்டும்.

5. அதன்பின் பாடலின் ஓசைக்கும் பொருளுக்கும் ஏற்புடைய பாடத்தைத் தேர்ந்து மூலபாடத்தில் அமைத்து ஏனையவற்றைப் பாட வேறுபாடுகளாகத் தருதல் வேண்டும்.

6. பழையவுரையுடன் கூடிய நூலாயின் பாட நிச்சயத்திற்கு அவ்வுரைப் பகுதியும் துணை செய்யும்.

7. எடுத்துக் கொண்ட நூல் தொடர்பான பிற நூல் களையும் ஆராய்ந்து பார்த்து நூற் பொருளைத் தெளிவு செய்து கொள்ள வேண்டும்.

8. சமயச் சார்பு பற்றிய நூலாயின் அவ்வச் சமய வல்லுநர்களை அடுத்து விளங்காத பகுதிகளைத் தெளிவுபடுத்திக் கொள்ள வேண்டும்.

9. நூற்பொருளுக்கு ஏற்புடைத்தான பல்வேறு அகராதிகளும் அமைத்தல் வேண்டும்.

10. நூல் முழுமைக்கும் சொல்லடைவு பொருளடைவு செய்து கொடுத்தல் பல்வேறு ஆய்வுகளுக்கும் பயனுடையதாக அமையும்.

**ஆராய்ச்சி முன்னுரை**

*பேராசிரியர் எழுதிய ஆராய்ச்சி நூலாக இருந்தாலும் சரி, பதிப்பித்த நூலாக இருந்தாலும் சரி அந்தந்த நூல்களுக்கு ஆராய்ச்சி முன்னுரை எழுதுவதை வழக்கமாகக் கொண்டுள்ளார். இம் முன்னுரைகள் தமிழறிஞர்களால் பெரிதும் போற்றி மதிக்கப் பட்டுள்ளன. இந்த முன்னுரையில் குறிப்பிட்ட நூலின் இலக்கிய வகை, காலம், நூலாசிரியர் குறித்த செய்திகள், கருத்து முரண் பாடுகளுக்கு இடமளிக்கும் கூறுகளைப் பற்றிய அதிகமான விளக்கங்கள் போன்றவற்றை ஆய்வு நோக்குடனும் இலக்கிய நோக்குடனும் வரலாற்று நோக்குடனும் தந்துள்ளார். இவரால் எழுதப்பட்ட முன்னுரைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில் சிறப்புடையன.*

பேரகராதியின் முன்னுரையில் நிகண்டுகளின் வரலாறு, அமைப்பு, அகராதியின் பொது வரலாறு, பேரகராதியின் அமைப்பு, சிறப்பு முதலான பல்வேறு கருத்துகள் தரப்பட்டுள்ளன. இன்றைக்கும் அகராதியியல் அறிஞர்கள் பேராசிரியர் எழுதிய இம்முன்னுரையையே சான்றாகப் பயன்படுத்தி வருகின்றனர்.

புறத்திரட்டின் முன்னுரையில் பண்டைக்காலம் தொட்டுத் தற்காலம் வரையிலும், பற்பல நெறிகளை மேற்கொண்டு தோன்றியுள்ள தொகை நூல்களின் வரலாறுகளையும், இக்காலத்தில் கையாளவேண்டும் நெறிமுறைகளையும் விளக்குகின்றார்.

பன்னிரு பாட்டியலின் முன்னுரையில் பிரபந்தங்களின் தோற்றம், வளர்ச்சி, பெருக்கம் போன்ற விளக்கங்கள் தரப் பட்டுள்ளன.

பொதுவாக இவர் எழுதிய முன்னுரைகள், இலக்கிய ஆராய்ச்சி, இலக்கண ஆராய்ச்சி, மொழி ஆராய்ச்சி, வரலாற்று ஆராய்ச்சி, சமய ஆராய்ச்சி, கவிதை ஆராய்ச்சி முதலான ஆராய்ச்சித் திறம் நிறைந்த கருத்துகளாக விளங்குகின்றன.

**கால ஆராய்ச்சி**

பேராசிரியர் பல தமிழ் நூல்களின் காலத்தையும் புலவர்களின் காலத்தையும் ஆராய்ந்துள்ளார். நூல்களின் காலத்தை வரையறை செய்வது இலக்கிய ஆய்வுக்கு இன்றியமையாத ஒன்றாகும் என்பது பேராசிரியர் கருத்து. மொழி வரலாறு, மக்களின் பண்பாட்டு வளர்ச்சி முதலியவற்றைத் திட்டவட்டமாக அறிவதற்குக் கால ஆராய்ச்சி உதவுகிறது. இதைத் 'தமிழ்ச்சுடர் மணிகள்' என்ற நூலின் 'முன்னுரை'யில் கூறுகிறார். மேலும்

> ஒரு நூலின் தன்மையானது, அது தோன்றிய காலம், சூழ்நிலை முதலியவற்றால் நிச்சயிக்கப்படும் என்பது இலக்கிய ஆராய்ச்சியில் ஓர் உண்மை. இவற்றை நன்கு அறிந்தாலன்றி, நூலின் பொருள் நுட்பங்களை யெல்லாம் நாம் முற்ற அறிந்து விட்டோம் என்று கூற முடியாது. எனவே, இலக்கிய வளர்ச்சிக்கும் இது அவசியம் என்பது எளிதில் விளங்கும். இதனால் இக்கால நிர்ணயம் மிக முக்கியமானதென்று நாம் உணர வேண்டும்[54]

பேரகராதி, நிகண்டுகள் முதலானவற்றைப் பதிப்பித்ததில் ஏற்பட்ட பட்டறிவு அவரது கால ஆய்வுக்கு மிகவும் துணைசெய்ததோடு தமிழ் ஆய்வுத்துறையில் ஒரு புதிய பாதையைத் தோற்றுவிக்கவும் காரணமாய் அமைந்தது.

இவரது கால ஆராய்ச்சிக்கு அக்காலத்தில் தமிழறிஞர்களிடம் மிகுந்த எதிர்ப்பு இருந்தது. ஆனால் பேராசிரியர் இந்த எதிர்ப்புகளைப் பொருட்படுத்தவில்லை. ஒரு நூலின் காலத்தைப் பற்றிய ஆராய்ச்சியில் முடிந்த அளவில் வரலாற்றுச் சான்றுகளைத் தருகிறார்; கல்வெட்டுச் சான்றுகளைத் தருகின்றார்; இலக்கிய இலக்கணச் சான்றுகளைத் தருகின்றார்; வடமொழி போன்ற பிறமொழிச் சான்றுகளைத் தருகின்றார்; சிலப்பதிகாரத்தின் காலத்தை அறுதியிடும்போது தமிழ் நாட்டின் சமுதாய நிலை குறித்த குறிப்புகளைத் தருகின்றார்.

ஒரு நூலின் காலத்தை நிறுவுவதற்கு முதல்நிலையாக, அதற்கென முன்னெல்லையையும், பின்னெல்லையையும் ஊகித்துக் கொள்வது அவரது வழக்கம். சான்றாக, சிலப்பதிகாரக் கால ஆராய்ச்சியில் முற்சங்க காலத்தை முன்னெல்லையாகவும், கி.பி. 900த்தைப் பின்னெல்லையாகவும் ஊகித்துக் கொண்டு தம் ஆய்வைத் தொடங்குகிறார்.

அத்துடன் பிற தமிழறிஞர்கள் எழுதிய வரலாற்று நூல்களைப் பற்றிய குறிப்புகளையும் தருகின்றார். வரலாற்று நூல்களில் கே.எஸ். சீனிவாச பிள்ளையின் தமிழ் வரலாறு, எம். சீனிவாச அய்யங்காரின் தமிழாராய்ச்சி; கன்னடத்தில் நரசிம்மாச்சாரியார், தெலுங்கில் வீரேசலிங்க பந்துலு, மலையாளத்தில் உள்ளூர் பரமேசுவர ஐயர் ஆகியோரின் இலக்கிய வரலாற்று நூல்கள்; வரலாற்று ஆராய்ச்சியில் மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளை, வி. கனகசபைப் பிள்ளை, கோவிந்தராவ், பி.டி. சீனிவாச ஐயங்கார், கே.எஸ். நீலகண்ட சாஸ்திரியார், மு. இராகவையங்கார் முதலானோரின் முயற்சிகள்; தெலுங்கில் வெங்கட ரமணய்யா, கன்னடத்தில் நரசிம்மாச்சாரியார் முதலானோரின் முயற்சிகள் இவர் ஆய்வில் சுட்டப்படுகின்றன.

தமிழ் இலக்கியத்தைப் பொறுத்த அளவில் வையாபுரிப் பிள்ளை பிரித்துள்ள காலப் பாகுபாடு வருமாறு :

1. முற்சங்க காலம் : கி.பி. 100-350. தொகைச் செய்யுட்கள், பத்துப்பாட்டிற் பல (பண்டைத் தமிழ்).

2. தொகை செய் காலம் : கி.பி. 400-500. முற்சங்கப் பாடல்களைத் தொகையாகத் தொகுத்தது. நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, அகநானூறு, புறநானூறு என்பன.

3. பிற்சங்க காலம் : கி.பி. 600-750. கலித்தொகை, பரிபாடல்.

4. பக்திநூற் காலம் : கி.பி. 600-900. தேவாரம், திவ்வியப் பிரபந்தம், முருகாற்றுப்படை, திருவாசகம் முதலியன.

5. நீதிநூற் காலம் : கி.பி. 600-850. திருக்குறள் முதலிய கீழ்க்கணக்கு நூல்கள் (3,4,5 முன் - இடைக்காலத் தமிழ்).

6. முற்காவிய காலம் : கி.பி. 750-1000. பஞ்ச காவியங்கள்.

7. பிற்காவிய காலம் : கி.பி. 1100-1300. பாரதம், இராமாயணம் முதலியன.

8. தத்துவநூற் காலம் : கி.பி. 1000-1350. மெய்கண்ட தேவர் வைஷ்ணவப் பெரியார்கள் முதலியோரது தத்துவ நூல்கள்.

9. வியாக்கியான காலம் அல்லது உரையியல் காலம் : கி.பி. 1200-1500. இளம்பூரணர், குணசாகரர், பேராசிரியர், பரிமேலழகர், அடியார்க்கு நல்லார், நச்சினார்க்கினியர் முதலியோரது உரைகள் 6,7,8,9 பின் இடைக்காலத் தமிழ்.

10. புராண - பிரபந்த காலம் : கி.பி. 1500-1850. குமரகுருபரர், பிள்ளைப் பெருமாளையங்கார், சிவப்பிரகாச முனிவர் முதலியோரது நூல்கள், கந்தபுராணம், திருவிளையாடல் முதலியன (பிற்காலத் தமிழ்)

11. தற்காலம் : கி.பி. 1850 (தற்காலத் தமிழ்). இராமலிங்க சுவாமிகள், நாவலர், சுந்தரம் பிள்ளை, உ.வே. சாமிநாதையர், பாரதி முதலியோர்.

கால ஆராய்ச்சியைப் பொறுத்தவரை தாம் கொண்ட கருத்தே முடிந்த முடிபு என்று வலியுறுத்தும் பண்பு பேராசிரியருக்கு இல்லை. சான்றாக, ஏலாதியின் காலம் கி.பி. 8ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியாக இருக்க வேண்டுமென்று ‘திரிகடுகமும் சிறுபஞ்சமூலமும்’ நூல் பதிப்பின் முன்னுரையில் எழுதியுள்ளார். பிற்பட்டு நிகழ்ந்த ஆராய்ச்சியால் தாம்கொண்ட முடிவை மாற்றி இன்னும் ஒரு நூற்றாண்டிற்குப் பின் தோன்றியிருக்கக் கூடும் என்று

தாம்கொண்டதை 'இனியவை நாற்பது' பதிப்பின் முன்னுரையில் குறிப்பிடுகிறார். அதேபோன்று இனியவை நாற்பதுக்குப் பிற்பட்டதுதான் திரிகடுகம் என்ற முடிவைச் சென்னைப் பல்கலைக் கழக ஆதரவில் வெளியிடப்பட்ட 'திரிகடுகமும் சிறுபஞ்சமூலமும்' என்ற நூற் பதிப்பின் முன்னுரையில் கூறியுள்ளார். இதனை இனியவை நாற்பது நூல் பதிப்பில் குறிப்பிடும் பேராசிரியர் அம் முடிவை மாற்றி, திரிகடுகமே முற்பட்டது என்று தாம் கொள்வதாகக் குறிப்பிடுகிறார்.

**புகழ் மாலை**

பேராசிரியர் குறித்துப் பலரும் புகழ் மாலை சூட்டியுள்ளனர். அவற்றுள் ஒருசில வருமாறு :

> இவரது பதிப்பாசிரியர் பண்பு டாக்டர் சாமிநாதையரின் திறனுக்குக் குறைந்ததன்று என்பதற்கு இவர் பதிப்புகளே தக்க சான்று தரும் [55]

> எஸ். வையாபுரிப் பிள்ளை பதிப்புக் கலையின் நுணுக்கங்களை நன்றாகத் தெரிந்திருந்தார். அவர் பதிப்பித்த புறத்திரட்டு அவர் ஆதரவில் வெளிவந்த சங்க இலக்கியம் ஆகியவற்றில் இத்திறத்தின் சாயல் தென்படும். கம்பராமாயணப் பதிப்பு எவ்வாறிருக்க வேண்டும் என்பதைப்பற்றி விளக்கமாகக் கூறியிருக்கும் கம்பன் காவியம் என்ற நூலிலிருந்து இதனை நாம் நன்கறியலாம். பதிப்புப் பணியில் உ..வே. சாமிநாதையர் பழைய முறையைப் பின்பற்றியவர் என்றால் வையாபுரிப் பிள்ளை புதுமுறையைப் பின்பற்ற ஆயத்தம் செய்தார் என்லாம் [56]

> வையாபுரிப் பிள்ளையவர்கள் கண்ட முடிவு அனைத்தும் அப்படியே ஏற்றுக் கொள்வதற்கு உரியன என்று சொல்ல வேண்டிய அவசியம் இல்லை [57]

> வரலாற்று முறைப்படி சொற்களைத் தமிழகராதி அமைக்கவில்லை. தமிழ் நூல்களின் கால எல்லைக்குள் குழம்பிய நிலையில் அவர் கண்ட முறை ஒன்று என்றும் வாழும். அவர் கண்ட முடிவுகள் மாறலாம். சில வழி காட்டும் கால்களாக அமையலாம்[58]

> வையாபுரிப் பிள்ளை தமிழ் நாட்டுப் பதிப்பாசிரியர் உலகிலே ஒரு வான்மணியெனத் திகழ்கிறார் [59]

**பேராசிரியரின் மறைவு**

பல காலம் நீரிழிவு நோயும், இரத்தக் கொதிப்பும் உடல் நலிவும், நோய்க் கொடுமையும் இவருக்கு இருந்தன. அவர் தம் வாழ்நாள் இறுதிவரையிலும் தமிழ் ஆராய்ச்சிப் பணிகளிலேயே தம்மை முழுவதுமாக அர்ப்பணித்துக் கொண்டார். மர்ரே எஸ். இராசம் வேண்டுகோளை ஏற்று நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திற்கு மக்கள் பதிப்பை வெளியிடும் பணியைத் தம் இறுதிக் காலத்தில் மேற்கொண்டிருந்தார். ஆயின் முதலாயிரம் மட்டுமே வெளிவந்தது. பிற மூன்று ஆயிரங்களையும் வெளியிடுவதற்கு முன்னர் இரத்தக் கொதிப்பு நோய்க்கு ஆட்பட்டு 17-02-1956இல் இறைவன் திருவடி சேர்ந்தார்.



# குறிப்புகள்

1. திரு.வி.கலியாண சுந்தரனார், வாழ்க்கைக் குறிப்புகள், ப. 160.
2. ஸ்ரீமத் துறவு சாமிகள் சரித்திரம், கோயிலூர் மடம், ப. 21.
3. திருக்குறள், 647.
4. விற்பத்தி = கல்வியில் சிறந்தோன்.
5. சித்தித்தல் = கைகூடும்.
6. மேற்கோள் : பொ. பூலோகசிங்கம், தமிழ் இலக்கியத்தில் ஈழத் தமிழறிஞரின் பெருமுயற்சிகள், கலைவாணி புத்தக நிலையம், யாழ்ப்பாணம், 1970.
7. Rev. E. Robinson, Hindu Pastors, 1867, pp. 125-126.
8. ச. குலேந்திரன், தமிழ் வேதாகம வரலாறு.
9. கொட்டில் = மாட்டுத் தொழுவம்.
10. வித்தியாசாலை = கல்வி கற்குஞ்சாலை.
11. தாற்பரியம் = பொருள்.
12. ஆசுகவி = கொடுத்த பொருளை அடுத்த பொழுதில் பாடும் பாட்டு.
13. பதினோராந்திருமுறை, மூன்றாம் பதிப்பு, துந்துபி வருடம் (1922).
14. அரிச்சுவடி = எழுத்துக் கற்பிக்கும் புத்தகம், அகரம் முதலிய எழுத்துகளைக் கற்பிக்கும் சுவடியாகிய நெடுங்கணக்கு எழுதப்பட்ட புத்தகம்.
15. தபுதல் = கெடுதல், இறத்தல்.
16. பிரதிக்கிரகம் = கொடை பெறுதல், சேனையின் பின்பகுதி.
17. பிரதாபம் = பெரும்பாடு.
18. அபத்தியம் = பத்தியத்தவறு.
19. பத்தியம் = மருந்துக்குத் தக்கவாறு உண்ணப்படும் உணவு.
20. ஆறுமுக நாவலர், பெரியபுராண சூசனம், ப. 128.
21. ஆறுமுக நாவலர், 'கதைகள்', பாலபாடம் 2, ப. 20.
22. சாவதானம் = எச்சரிக்கை.
23. தி. செல்வக்கேசவராய முதலியார், தமிழ் வியாசங்கள், ப. 113.
24. அ.மு. பரமசிவானந்தம், தமிழ் உரைநடை, ப. 180.
25. இந்த அட்டவணையைத் தந்து உதவிய பேராசிரியர் முனைவர் நெல்லை ந. சொக்கலிங்கம் (மதுரை) அவர்களுக்கு நன்றி.
26. ஆ. வேலுப்பிள்ளை, 'பதிப்புத்தமிழ் – சி.வை. தாமோதரம் பிள்ளை', தற்காலத் தமிழ் முன்னோடிகள், பாரி நிலையம், சென்னை, 1975, ப. 2.
27. டி.ஏ. இராஜரத்தினம் பிள்ளை, தாமோதரம் பிள்ளை அவர்கள் சரித்திரம், ஆனந்தபோதினி அச்சகம், சென்னை, 1934, பக். 98–99.

28. மேற்கோள் : இ. செல்லத்துரை (ப.ஆ.), தாமோதரம், யாழ்ப்பாணம் கூட்டுறவுத் தமிழ்நூற் பதிப்பு விற்பனைக் கழகம், யாழ்ப்பாணம், 1971, ப. 125.
29. பாடசாலை = கல்விச்சாலை.
30. முதலில் வரிவடிவின்றி ஒலிவடிவு மட்டும் நிகழ்ந்த காலம் அபோத காலமாகும்.
31. கலித்தொகை பதிப்புரை, பக். 33–34.
32. ச. வையாபுரிப்பிள்ளை, தமிழ்ச்சுடர் மணிகள், பக். 233–234.
33. மா.சு. சம்பந்தன், அச்சும் பதிப்பும், ப. 230.
34. க. கைலாசபதி, ஈழத்து இலக்கிய முன்னோடிகள், குமரன் பதிப்பகம், சென்னை, 2001, பக். 31–32.
35. டி.ஏ. இராஜரத்தினம் பிள்ளை, மு.கா.நூல், ப. 37.
36. கு. சுந்தரமூர்த்தி (ப.ஆ.), தொல்காப்பியம் பொருளதிகாரம் (பிற்பகுதி), அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர், 1985, ப. iii.
37. பிறை வளைவுக்குள் இருக்கும் எண்கள் உ.வே. சாமிநாதையர் எழுதிய 'என் சரித்திரம்' என்ற நூலின் பக்க எண்களாகும்.
38. பதசாரம் = சொல்லின் பொருள் நயம்.
39. ஆறுகட்டி என்பது காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்னும் ஆறையும் அடக்கியவர் என்பதைக் குறிக்கும் ஓர் அணிகலன்.
40. சுந்தர வேடம் என்பது காதில் அணிந்து கொள்ளும் வட்டமான பொன் அணிகலன். இது சுந்தரமூர்த்தி நாயனாரால் அணியப்பெற்றதாதலின் இப்பெயர் வந்ததென்பர். சைவாசாரியர் இதை அணிவது வழக்கம்.
41. அங்குஷ்டம் = அங்குட்டம் = பெருவிரல்.
42. பவித்திரம் = பொன் மோதிரம்.
43. மயிலை சீனி. வேங்கடசாமி, 19ஆம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம், 1962, ப. 83.
44. கி.வா. ஜகந்நாதன், தமிழ்த் தாத்தா, ப. 64.
45. திரு.வி. கலியாண சுந்தரனார், வாழ்க்கைக் குறிப்புகள், பக். 160–163.
46. ம.ரா.போ. குருசாமி (ப.ஆ.), பாரதியார் பாடல்கள் ஆய்வுப் பதிப்பு, ப. 24.
47. வ.சுப. மாணிக்கம், தமிழ்க் காதல், முன்னுரை.
48. இராதா செல்லப்பன், 'ஆசிரியர் உரை', வையாபுரிப்பிள்ளையின் தமிழ்ப்பணி, ப. ix.
49. வை. சரோஜினி (ப.ஆ.), அகராதி நினைவுகள், ப. 3.
50. இலக்கியச் சிந்தனை முதல் தொகுதி, ப. 67.
51. ச. வையாபுரிப் பிள்ளை, திராவிட மொழிகளில் ஆராய்ச்சி, ப. 62.
52. இராதா செல்லப்பன், மு.கா.நூல், பக். 39–40.
53. மு. சண்முகம் பிள்ளை, பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை வாழ்வும் தொண்டும், பக். 158–159.
54. ச. வையாபுரிப் பிள்ளை, கம்பன் காவியம், பக். 80–81.
55. பி.ஸ்ரீ. ஆச்சாரியார், நான் அறிந்த தமிழ் மணிகள், ப. 98.
56. வ.அய். சுப்பிரமணியம், சில கட்டுரைகள் I, ப. 122.
57. கி.வா.ஜகந்நாதன், மேற்கோள் : மா.சு. சம்பந்தன், அச்சும் பதிப்பும், ப. 305.
58. தெ.பொ. மீனாட்சிசுந்தரனார், மேற்கோள் : மா.சு. சம்பந்தன், மு.கா.நூல், ப. 305.
59. திரு.வி. கலியாண சுந்தரனார், வாழ்க்கைக் குறிப்புகள், ப. 210. ப. 83.

# துணை நூல்கள்

## முதன்மை நூல்கள்

ஆறுமுகநாவலர், சி.வை. தாமோதரம் பிள்ளை, உ.வே. சாமிநாதையர், ச. வையாபுரிப் பிள்ளை ஆகியோர் எழுதிய, பதிப்பித்த நூல்கள்


1. அறிவுடைநம்பி, ம.சா., ஏட்டிலக்கியம், அ. கிரிஜா (கருமணி பதிப்பகம்), புதுச்சேரி, 2008.

2. அறிவுடைநம்பி, ம.சா., பதிப்புச் சிந்தனைகள், அ. கிரிஜா (கருமணி பதிப்பகம்), புதுச்சேரி, 2006.

3. இராதா செல்லப்பன், ஆய்வுநெறியும் வையாபுரியும், ஆசிரியர், திருச்சிராப்பள்ளி, 1991.

4. இராதா செல்லப்பன், வையாபுரிப்பிள்ளையின் தமிழ்ப்பணி, தில்லித் தமிழ்ச் சங்கம், புதுதில்லி, 1992.

5. இராஜரத்தினம் பிள்ளை, தாமோதரம் பிள்ளை அவர்கள் டி.ஏ., சரித்திரம், ஆனந்தபோதினி அச்சகம், சென்னை, 1934.

6. இளங்குமரன், இரா., சுவடிப் பதிப்பியல் வரலாறு, மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம், 2001.

7. இளங்குமரன், இரா., சுவடிப் பதிப்பு வரலாறு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1990.

8. கலியாண சுந்தரனார், திரு.வி. வாழ்க்கைக் குறிப்புகள், சாது அச்சுக்கூடம், சென்னை, 1944.

9. கனகரத்தினம், இரா.வை., ஆறுமுகநாவலர் வரலாறு : ஒரு புதிய பார்வையும் பதிவும், பூரணம் வெளியீடு, கொழும்பு, 2001.

10. கனகரத்தினம், வை. (ப.ஆ.), ஸ்ரீல ஸ்ரீ நல்லூர் ஆறுமுகநாவலர் சரித்திரம், புவனேஸ்வரி அம்மன் கோயில், ஏழாலை, 1994.

11. குருசாமி, ம.ரா.போ., (ப.ஆ.), பாரதியார் பாடல்கள் ஆய்வுப் பதிப்பு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், திருத்திய மூன்றாம் பதிப்பு 2001.

12. குலேந்திரன், ச., தமிழ் வேதாகம வரலாறு, யாழ்ப்பாணம்.

13. கைலாசபதி, க., ஈழத்து இலக்கிய முன்னோடிகள், குமரன் பதிப்பகம், சென்னை, 2001.

14. கைலாசபிள்ளை, த., ஆறுமுகநாவலர் சரித்திரம், ஸ்ரீ ஆறுமுகநாவலர் சைவப் பிரகாச வித்தியாசாலை அறக்கட்டளை, சிதம்பரம், 1985.

15. கோபாலையர், தி.வே., தமிழ் எழுத்தும் ஏடும், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1990.

16. சண்முகம் பிள்ளை, மு., பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை வாழ்வும் தொண்டும், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1991.

17. சம்பந்தன், மா.சு., அச்சும் பதிப்பும், தமிழர் பதிப்பகம், சென்னை, 1980.

18. சரோஜினி, வை. (ப.ஆ.), அகராதி நினைவுகள், ஆசிரியர், சென்னை.

19. சாமிநாதையர், உ.வே., என் சரித்திரம், மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம், சென்னை, 1982.

20. சாம்பசிவன், ச., நாவலர் நால்வர், கழகம், சென்னை, 1960.

21. சாம்பசிவனார், ச. வள்ளுவர் தெள்ளுரையும் சொல்லடைவும், வளவன் வெளியீடு, மதுரை, திருத்திய பதிப்பு 1998.

22. சுந்தரமூர்த்தி, இ., பதிப்பியல் சிந்தனைகள், சேகர் பதிப்பகம், சென்னை, 2005.

23. சுந்தரமூர்த்தி, கு. (ப.ஆ.), தொல்காப்பியம் பொருளதிகாரம் (பிற்பகுதி), அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர், 1985.

24. சுப்பிரமணியம், பூ., சுவடியியல், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1991.

25. சுப்பிரமணியம், வ.அய்., சில கட்டுரைகள், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1988.

26. செல்லத்துரை, இ. (ப.ஆ.), தாமோதரம், யாழ்ப்பாணம் கூட்டுறவுத் தமிழ்நூற் பதிப்பு விற்பனைக் கழகம், யாழ்ப்பாணம், 1971.

27. செல்வக்கேசவராய தமிழ் வியாசங்கள், முதலியார், தி., ஆசிரியர், சென்னை.

28. சொல்விளங்கும் பெருமாள், டாக்டர் உ.வே.சா. பதிப்புப்பணி பூ., ஓராய்வு, வஞ்சிக்கோ பதிப்பகம், மதுரை, 1981.

29. தாமரைக்கண்ணன், ப., ஈழத்தமிழறிஞர் தாமோதரம் பிள்ளை, குமரன் பப்பிளிஷர்ஸ், சென்னை, 2004.

30. பரமசிவானந்தம், அ.மு., தமிழ் உரைநடை, தமிழ்க்கலைப் பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு 1976.

31. பி.ஸ்ரீ. ஆச்சாரியார், நான் அறிந்த தமிழ்மணிகள், வானதி பதிப்பகம், சென்னை, 1971.

32. பூலோகசிங்கம், பொ., தமிழ் இலக்கியத்தில் ஈழத் தமிழறிஞர்களின் பெருமுயற்சிகள், கலைவாணி புத்தகாலயம், யாழ்ப்பாணம், 1970.

33. மகாலட்சுமி, தி., சுவடியியல் ஆய்வு, வித்யாதரன், க.ப., ஸ்தபதி பதிப்பகம், சென்னை, 2009.

34. மாணிக்கம், வ.சுப., தமிழ்க் காதல், மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், இரண்டாம் பதிப்பு 2005.

35. விநாயகமூர்த்தி, அ., பதிப்புப் பார்வைகள், பாலமுருகன் பதிப்பகம், மதுரை, 1983.

36. வேங்கடசாமி, மயிலை சீனி., பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம், பாரி நிலையம், சென்னை, 1962.

37. வேலுப்பிள்ளை, ஆ., 'பதிப்புத்தமிழ் - சி.வை. தாமோ தரம் பிள்ளை', தற்காலத் தமிழ் முன்னோடிகள், பாரி நிலையம், சென்னை, 1975.

38. ஜகந்நாதன், கி.வா., தமிழ்த் தாத்தா, சாகித்திய அக்காதெமி, புதுதில்லி, நான்காவது பதிப்பு 2007.

39. - - - - - - -, ஸ்ரீமத் துறவு சாமிகள் சரித்திரம், கோயிலூர் மடம், கோயிலூர்.

40. Robinson, Rev. E., Hindu Pastors, 1867.

**சுவடியியல் தொடர்பான நூல்கள்**

41. அறிவுடைநம்பி, ம.சா., ஏட்டிலக்கியம், அ. கிரிஜா (கருமணி பதிப்பகம்), புதுச்சேரி, 2008.

42 அறிவுடைநம்பி, ம.சா., பதிப்புச் சிந்தனைகள், அ. கிரிஜா (கருமணி பதிப்பகம்), புதுச்சேரி, 2006.

43. அறிவுடைநம்பி, ம.சா. (தொகுப்பும் பதிப்பும்), சுவடியியல் கலைச் சொல் விளக்க அகராதி, அ. கிரிஜா (கருமணி பதிப்பகம்), புதுச்சேரி, 2006.

44 .அறிவுடைநம்பி, ம.சா., இலட்சுமணன், சி., காகிதச் சுவடி ஆய்வுகள், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2000.

45. அறிவுடைநம்பி, ம.சா., இலட்சுமணன், சி., சுவடிப் பதிப்பாசிரியர்கள், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2003.

46. அறிவுடைநம்பி, ம.சா., இலட்சுமணன், சி., பதிப்பியல் நெறிமுறைகள், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2003.

47. அறிவுடைநம்பி, ம.சா., இலட்சுமணன், சி., பதிப்பு நிறுவனங்கள், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2002.

48. அன்னிதாமசு, பதிப்பியல், அமுத நிலையம் லிமிடெட், சென்னை, 1997.

49. இராசேந்திரன், மா., காலின் மெக்கன்சி வரலாறும் சுவடிகளும், கணையாழி படைப்பகம், சென்னை, 2002.

50. கண்ணையன், பா., தமிழ்ச் சுவடிகளில் எண் கணிதம் (தமிழ்க் கணித நூல்), மயிலம் பொம்மபுரம் ஆதீன வெளியீடு, மயிலம், 2008.

51. கிருட்டினமூர்த்தி, சா., மகாலட்சுமி, தி. மற்றும் பலர் (ப.ஆர்.), சுவடிப் பதிப்புத் திறன் 2 தொகுதிகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2002.

52. கோவைமணி, மோ.கோ., பருவ இதழ்ச் சுவடிப் பதிப்பு வரலாறு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2010.

53. சதாசிவம், மு. (ப.ஆ.), பதிப்பு நெறிமுறைகள், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர், 1991.

54. சந்திரமோகன், இர., சுவடியியல் மேலாண்மை, ராமையா பதிப்பகம், சென்னை, 2008.

55. சுப்பிரமணியன், ச.வே., தொல்காப்பியப் பதிப்புகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1992.

56. தசரதன், ஆ. மற்றும் பலர் (ப.ஆர்.), தமிழில் ஆவணங்கள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2001.

57. நிர்மலாதேவி, சு. (ப.ஆ.), கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் விளக்க அட்டவணை முதல் தொகுதி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1995.

58. பட்டாபிராமன், க., தமிழ் ஏடுகள் - வழிகாட்டி, செந்திலன் பதிப்பகம், பட்டுக்கோட்டை, 1966.

59. பரமசிவம், த.கோ. (ப.ஆ.), சுவடிப் பதிப்பு நெறிமுறைகள் (கருத்தரங்கக் கட்டுரைகள்), தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1989.

60. பாண்டியன், எம்.எஸ்., ஆவணங்கள் பேசினால் . . . , திருக்குறள் பதிப்பகம், சென்னை, 2003.

61. பாண்டியன், எம்.எஸ்., பேசும் ஆவணங்கள், சேகர் பதிப்பகம், சென்னை, 2009.

62. பாஸ்கரன், டி., தமிழ்ச் சுவடிப் பெயர்கள், கீழ்த்திசை ஆய்வு மற்றும் சுவடி நூலகம், கேரளப் பல்கலைக்கழகம், காரியவட்டம், 1984.

63. பெருமாள், ப., சுவடிப் பாதுகாப்பு வரலாறு, கோவிலூர் மடாலயம், கோவிலூர், 2012.

64. மகாலட்சுமி, தி. மற்றும் பலர் (ப.ஆர்.), சுவடிச் சுடர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2001.

65 மாதவன், வே.இரா., சுவடிப் பதிப்பியல், பாவை வெளியீட்டகம், தஞ்சாவூர், 2000.

66. ராமன், மு.கோ., சுவடியியல் பயிற்சி - கையேடு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1982.

67. விநாயகமூர்த்தி, அ., பதிப்புக் கலை, பாலமுருகன் பதிப்பகம், மதுரை, 1979.

68. விநாயகமூர்த்தி, அ., பதிப்புச் சிந்தனைகள், பாலமுருகன் பதிப்பகம், காட்பாடி, 2001.

69. விநாயகமூர்த்தி, அ., மூலபாட ஆய்வியல், பாலமுருகன் பதிப்பகம், மதுரை, 1978.

70. ஜெயராஜ், வே., ஆவணங்கள் பாதுகாப்பு, அரசு அருங்காட்சியகம், சென்னை, மறுபதிப்பு 2002.

71. - - - - - -, கல்கத்தா தேசிய நூலகத் தமிழ்ச் சுவடிகள், மு.சண்முகம் பிள்ளை, இ. சுந்தரமூர்த்தி, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1979.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை - 600 113

## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| அறிஞர்கள் பார்வையில் பேரறிஞர் அண்ணா | 145.00 |
| அறிஞர் அண்ணா - மொபசான் சிறுகதைகள் - ஒப்பாய்வு | 160.00 |
| இராசேந்திர சோழன் வெளியிட்ட எசாலம் செப்பேடுகள் | 55.00 |
| கடலடியில் தமிழர் நாகரிகம் | 55.00 |
| படைப்பு நெறிமுறைகள் | 150.00 |
| Comparative Studies in Literary Cultures | 100.00 |
| Sangam Classics : New Perspectives | 105.00 |
| கடற்பொறியியற் கலைச்சொற்கள் (குறுங்கலைக்களஞ்சியம்) | 150.00 |
| அரங்கியல் நோக்கில் கபிலர் பாடல்களில் காணலாகும் கதைமாந்தர்கள் | 100.00 |
| சங்க இலக்கியத்தில் சமூக ஆய்வுகள் | 55.00 |
| தமிழ் வாழ்க்கை வரலாற்றியலக்கியம் | 170.00 |
| கவிஞர் குலோத்துங்கனின் மானுடயாத்திரை காவிய வானில் புதிய தாரகை | 45.00 |
| தமிழ் நாடக வகையும் வரலாறும் | 110.00 |
| வா.செ.கு.என்ற ஆளுமையாளர் | 50.00 |
| உ.வே.சா.வின் குறுந்தொகை உரைத்திறன் | 45.00 |
| மருதத்தில் மக்கள் வாழ்வியல் | 40.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 1 பாயிரம் - 1 | 85.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 4 எழுத்தியல் - 2 | 140.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 2 பாயிரம் - 2 | 75.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 6 உயிரீற்றுப்புணரியல் - 1 | 125.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 7 உயிரீற்றுப்புணரியல் - 2 | 160.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 8 மெய்யீற்றுப்புணரியல் | 160.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 9 உருப்புணரியல் | 95.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 12 வினையியல் | 190.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 13 பொதுவியல் - 1 | 140.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 16 இடைச்சொல்லியல் | 90.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 17 உரிச்சொல்லியல் | 55.00 |
| நன்னூல் உரைவளம் - தொகுதி - 18 தொல். நன்னூல் | 120.00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் (ம.ப.) | 65.00 |
| வல்லம் புராணம் | 200.00 |
| இதழியல் உலகம் | 120.00 |
| தமிழும் தமிழ்க் கற்பித்தலும் | 60.00 |
| படைப்பிலக்கியம் - விளம்புநிலை மக்கள் ஆய்வுநோக்கு | 100.00 |
| பழந்தமிழும் கிளைமொழிகளும் | 65.00 |
| உலக மொழிகளில் தமிழ்ச்சொற்களும் இலக்கணக்கூறுகளும் | 85.00 |
| அரசகுலச் சான்றோர் வரலாறும் மதுரைக்காஞ்சியும் | 115.00 |
| பெயரியல் | 55.00 |
| தமிழ் இசுலாம் உருவாக்கமும் திருக்குர் ஆன் தமிழ் வாசிப்பும் ஆய்வியல் சிந்தனை | 45.00 |
| தலித் அறம் | 45.00 |
| பொதுவுடைமை இயக்க இதழ்கள் | 115.00 |
| தமிழில் இதழியல் | 270.00 |
| 741 சுவடிப் பதிப்பு முன்னோடிகள் | 75.00 |